# பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடரை உபயோகித்து நாள் முழுவதும் புத்துணர்ச்சியையும் நறுமணத்தையும் அனுபவியுங்கள்




நறுமணமுள்ள, புத்துணர்ச்சியளிக்கும் பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடரை உபயோகித்தால் மிக உஷ்ண காலத்திலும்கூட குளுமையுடன் இருக்கலாம். இந்த மிருதுவான பவுடரை உங்கள் உடம்பின்மேல் தூவிக்கொண்டால் அது வியர்வையை உறிஞ்சி உங்களை நாள் முழுவதும் காலையில் இருக்கும் புதுமலர்ச்சியுடனும், நறுமணத்துடனும் விளங்கச் செய்யும். நீண்ட நேரம் புத்துணர்ச்சியுடன் இருக்க எப்பொழுதும் பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடரையே உபயோகியுங்கள்.

சீஸ்ப்ரோ–பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.வில் இணைக்கப்பெற்றது)

JWT-P 1875

# கல்கி பொருளடக்கம்

பிலவ, சித்திரை 18 ✻ ஏப்ரல் 30, 1961



**"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.**



தஞ்சை ஜில்லா பிரபலஸ்தரும், ஜில்லாபோர்டு தலைவராகப் பல ஆண்டுகள் தொடர்ந்து பணிபுரிந்தவருமான காலஞ்சென்ற பட்டுக்கோட்டை திரு V. நாடிமுத்துப் பிள்ளையவர்கள் மூத்த குமாரத்தி திருமதி விஜயலெட்சுமிக்கும் அன்னாரின் மைத்துனர் (லேட்) C. சுந்தரேசம் பிள்ளையவர்கள் மகன் செல்வன் S. வைத்திலிங்கத்திற்கும் பட்டுக்கோட்டையில் 26 - 3 - 61ல் காலையில் குளிக்கரை K. S. பிச்சையப்பா பார்ட்டி நாதஸ்வரக் கச்சேரியுடனும், மாலையில் M. L. வசந்தகுமாரி இன்னிசைக் கச்சேரியுடனும் திருமணம் வெகு விமரிசையாக நடைபெற்றது. வாழ்க, மணமக்கள்!



ஆந்திரத்திலுள்ள குண்டூர், கிருஷ்ணா, கிழக்கு கோதாவரி, மேற்கு கோதாவரி ஜில்லாக்களின் கரு நிறத் தளிர் மண்ணும் மழைப் பாங்கான நிலைமையும் வர்ஜீனியா புகையிலை பயிரிடுவதற்கு உகந்தவை. ஆகவே, ஆந்திரம் நம் நாட்டுப் புகையிலையின் மொத்த உற்பத்தியில் 40 சத விகிதத்தையும், இந்திய வர்ஜீனியா புகையிலையின் 90 சத விகிதத்தையும் சாகுபடி செய்து முன்னணி வகிக்கிறது.

## புகையிலையின் வரலாறு... 4

Panama

20

CIGARETTES

# பனாமா

**ஒரு நல்ல சிகரெட்—**
**இறுதிவரை இன்பமூட்டுவது**

பம்பாய்—57.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT.704 TM



மலர் 20

தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

இதழ் 39

# கியூபா விவகாரம்

அமெரிக்க நாட்டுக்கு மிக அண்மையிலுள்ள கியூபா தீவில் ஏற்பட்டுள்ள கம்யூனிஸ்ட் சார்புள்ள அரசாங்கத்துக்கு விரோதமாக எழுந்த கிளர்ச்சி நொறுக்கி அடக்கிவிடப்பட்டது என்ற செய்திகள் வந்துள்ளன. கிளர்ச்சிக்காரர்கள், அமெரிக்க நாட்டிலிருந்து சென்ற கியூபாக்காரர்கள் என்பதும், அமெரிக்க சர்க்காரின் மறைமுக ஆதரவின்பேரிலேயே இந்தக் கிளர்ச்சி நடத்தப்பட்டது என்பதும் யாவரும் அறிந்த உண்மை. இது அமெரிக்காவுக்கு ஒரு தோல்வி மாதிரிதான்.

கியூபா சுதந்திர நாடாயினும், அமெரிக்க முதலாளிகள் உதவியுடனேயே தொழில்கள் வளம் பெற்று வந்தது. கியூபாவில் காஸ்ட்ரோ தலைமையில் புரட்சி ஏற்பட்டு, கம்யூனிஸ்ட் சார்புள்ள அரசாட்சி ஏற்பட்டது. காஸ்ட்ரோ ஆட்சிக்கு வந்ததும் பல அமெரிக்கத் தொழிற்கூடங்களைத் தேச உடைமையாக்கினர்; நிலங்களை ஆர்ஜிதம் செய்து கொண்டார். முதல் போட்ட அமெரிக்கர்களை ஈவு இரக்கமின்றி விரட்டியடித்தார். அவர்களைப் பல கொடுமைகளுக்கு உள்ளாக்கினர். எதேச்சாதிகார ஆட்சியை நிலைநாட்டினர். காஸ்ட்ரோவின் இந்த ஆட்சியை எதிர்த்த கியூபாக்காரர்களையும், ஜனநாயக ஆட்சிமுறை விரும்பியவர்களையும் நாடு கடத்தினர். காஸ்ட்ரோவின் இந்த எதேச்சாதிகாரப் போக்குச் சரியல்ல என்று அமெரிக்கா நயமாகவும் பயமாகவும் பலமுறை எச்சரிக்கை செய்து வந்தது. அமெரிக்கா எச்சரிக்கை செய்யச் செய்ய காஸ்ட்ரோ அதிகமாக ருஷ்யாவின் சார்பில் சாய ஆரம்பித்தார். கியூபா முக்கியமாக, கரும்புச் சாகுபடியும் சர்க்கரை உற்பத்தியும் அதிகமாகக் கொண்ட நாடு. அதன் ஏற்றுமதி வர்த்தகம் முழுதும் அமெரிக்காவுடன்தான் நடைபெற்று வந்தது. கியூபாவுக்குப் பாடம் கற்பிக்க வேண்டும் என்று அமெரிக்கா, கியூபாவில் சர்க்கரை வாங்குவதை அடியோடு நிறுத்தியது. உடனே ருஷ்யா வாங்கிக் கொள்ள முன் வந்து கியூபாவைக் காப்பாற்றி வருகிறது. இப்படி அமெரிக்காவிலிருந்து பல்லாயிரம் மைல்கள் அப்பாலிருக்கும் கம்யூனிஸ்ட் ருஷ்யாவுக்கு, அமெரிக்காவுக்கு மிக அண்மையில் உள்ள தீவான கியூபாவில் ஒதுங்க இடம் கிடைப்பது அமெரிக்காவுக்குத் தலைவேதனையாக இருந்து வருகிறது; ருஷ்ய ராணுவ தளங்கள் ஏற்படவும் வசதி செய்து கொடுத்தாற்போல் ஆகிறது.

ஆகவே, அமெரிக்கா கியூபாவை நல்ல வார்த்தை சொல்லி வழிக்குக் கொண்டு வருவது முடியாத காரியம் என்ற முடிவுக்கு வந்திருக்கிறது. அதன் விளைவாக, கியூபா கலகக்காரர்களுக்கு அமெரிக்கா மறைமுகமாக உதவியது.

கியூபா கிளர்ச்சியைப் பிரமாதப்படுத்தி, அமெரிக்காவைப் பலமாகத் தாக்கி வருகின்றன பிரிட்டிஷ் பத்திரிகைகள். பிரிட்டன் எகிப்துமீது போர் தொடுத்தபோது அமெரிக்க சர்க்கார் கண்டித்தது அல்லவா? அந்தப் பழிக்குப் பழி வாங்கவே இப்பொழுது எல்லாப் பிரிட்டிஷ் பத்திரிகைகளும் அமெரிக்காவைத் தாக்குகின்றன! பிரிட்டன் எகிப்தின் மீது போர் தொடுத்த நிலைமைக்கும் கியூபா மீது வெளியேற்றப்பட்டவர்கள் படை திரட்டிச் சென்றிருப்பதற்கும் மிகுந்த வித்தியாசம் உண்டு. பிரிட்டிஷ் சர்க்காரே எகிப்தின் மீது போர் தொடுத்தது. ஆனால் கியூபாவின் கம்யூனிஸ்ட் சார்புள்ள ஆட்சியின் கொடுமை காரணமாக வெளியேற்றப்பட்டவர்களும், வெளியேறியவர்களும் சேர்ந்து, கியூபாவில் நடைபெறும் எதேச்சாதிகார ஆட்சிக்கு எதிராகக் கிளர்ச்சி நடத்தினால், ஜனநாயக ஆட்சி முறையை நிலைநாட்ட முயன்றால் அதற்கு அமெரிக்கா உதவுகிறது. அது அமெரிக்காவே

கியூபாவின்மீது படையெடுத்ததுபோலத் தான் என்று சொல்லுவது சரியாகாது!

தம் நாட்டின் தற்காப்புக்கு வேண்டியது செய்வதும் ஜனநாயகத்துக்காகப் போராடுவோருக்கு உதவுவதும் தம் கடமையாக அமெரிக்க மக்களும் சர்க்காரும் கருதுகின்றனர். நமது பிரதமர் குதிரைக்குக் குர்ரம் என்றால் ஆனைக்கு அர்ரமாகத்தான் இருக்க வேண்டும் என்று பிடிவாதம் செய்பவர். அதனால் அவர் அமெரிக்காவைக் கண்டித்துப் பேசியிருக்கிறார். அமெரிக்கா கியூபாவின் உள்நாட்டு விவகாரத்தில் தலையிடுவதாகக் கூறுகிறார். ஆனால் ருஷ்யா மறைமுகமாகவும் நேர்முகமாகவும் தலையிடுவதெல்லாம் நேருஜிக்கு நியாயமாகத் தோன்றுகிறது!

ஒரு கட்சி, ஒரு தலைவரின் கீழ் ஏற்படும் ஆட்சியில் ஜனநாயகம் நசுக்கப்படுகிறது. ஆனால் நீண்ட காலம் மக்கள் அடங்கியிருப்பதில்லை. மக்கள் உணர்ச்சி, ஜனநாயகப் பண்பு - கிளர்ச்சி உருவமாக வெளிப்படவே செய்கிறது. அந்தப் பண்புக்கு உதவுவது எல்லா ஜனநாயக நாடுகளின் கடமையாகும். அதனைப் பிறநாடுகளின் உள்நாட்டு விவகாரத்தில் தலையிடுவதாகும் என்று சொல்லி வாய் மூடி, கைகட்டி உட்கார்ந்திருப்பது கோழைத்தனத்துக்குச் சமமாகும். அமெரிக்கா கென்னடியின் தலைமையில் இந்த அணுகுண்டு யுகத்தில் தைரியமாக ஒரு காரியம் செய்வதை எல்லா ஜனநாயக நாடுகளும் பாராட்ட வேண்டியது கடமை.

# சம்பத் கட்சி

திரு சம்பத் அரசியல் தெரிந்தவர் என்பதை ஒப்புக்கொள்ளுகிறோம். அவர் தி. மு. க.வைப் பற்றிக் கூறியுள்ள குறைபாடுகள் தமிழ் உலகம் அறியாததல்ல. 'திராவிட நாடு என்பது கைகூடாத லட்சியம் என்பது தி. மு. க.வினர் உணர்ந்தே பொதுமக்களை ஏமாற்றி வந்தனர். இந்த ஏமாற்றம் எத்தனை நாட்கள் நடக்கும்?' என்று சம்பத் கேட்கிறார். இதைப் பொதுமக்கள் தெரிந்துகொள்ளாமலில்லை.

திரு சம்பத் ஆரம்பித்துள்ள புதுக் கட்சியின் கொள்கை, சுதந்திரத் தமிழ் நாடாகப் 'பிரிந்து போக உரிமையிருக்கும்படி' அரசியல் நிர்ணயச் சட்டத்தை மாற்றுவது என்று கூறுகிறார்.

அரசியல் நிர்ணயச்சட்டத்தை மாற்றுவதானால் மக்கள் சபையில் மொத்த அங்கத்தினர்களில் மூன்றில் இரண்டு பங்கினர் ஆதரவு வேண்டும். தமிழ் தேசியக் கட்சி, அதன் பெயரிலேயே தமிழ் நாட்டுடன் அடங்கிவிடக் கூடிய கட்சி என்று தெரிகிறது. தமிழ் நாட்டிலுள்ள எல்லா பார்லிமெண்ட் தொகுதிகளிலும் தமிழ் தேசியக் கட்சி அங்கத்தினர்களே தேர்ந்தெடுக்கப்பட்டு அனுப்பப்பட்டாலும் 35, 40 அங்கத்தினர்களுக்குமேல் கிடைக்கமாட்டார்கள். 500 பேர் உள்ள ஒரு சபையில் இந்த 35 பேர் சேர்ந்து எப்படி அரசியல் நிர்ணயச் சட்டத்தை மாற்றப் போகிறார்கள்?

மற்ற மாகாணங்களில் இத்தகைய உணர்ச்சியுள்ள கட்சிகள் தோன்றக் கூடும். அவர்கள் ஆதரவு தரலாம் என்று ஒரு சமாதானம் சொல்லலாம்.

இன்றுதேசமுள்ள நிலைமையில், ராஜ்ய சர்க்கார்கள் மூர்த்தண்யமாக மத்திய சர்க்காரோடு சண்டை பிடிக்கலாம். ஆயினும் மத்திய சர்க்காரிலிருந்து விடுபட்டுச் சுதந்திர ராஜ்யம் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் அவற்றுக்குச் சிறிதும் இல்லை. அந்த விதமாக அரசியல் நிர்ணயச் சட்டத்தை மாற்றவேண்டும் என்ற உணர்ச்சி மற்ற ராஜ்யங்களில் கடுகளவும் கிடையாது. நமக்கு நெருங்கியுள்ள கேரள, மைசூர், ஆந்திர ராஜ்யங்களில், இருபதாண்டுகளாகத் திராவிட நாட்டுப் பிரிவினை பற்றிக் கரடியாகக் கத்தியும் ஆதரவு ஏற்படவில்லை என்பதிலிருந்தே நாட்டில் எங்குமே பிரிவினை யோசனைக்கு ஆதரவு கிடைக்காது என்று தெரிந்து கொள்ள வேண்டாமா? பஞ்சாபி சூபா வேண்டும் என்று பலத்த கிளர்ச்சி நடந்தாலும், மத்திய சர்க்காருக்கு உட்பட்ட ராஜ்ய சர்க்காராகத்தான் வாழ விரும்புகிறார்கள். அதில்தான் லாபம்இருக்கிறது. இதனைப் பாரத நாட்டில் எல்லா மக்களும் நன்கு உணர்ந்திருக்கின்றனர்.

திராவிடநாடு எப்படிப் பகற்கனவாக முடிந்ததோ, அப்படியே திரு சம்பத் அவர்களது தமிழ் நாடு பிரிவினைக்குச் சம்மதம் பெறும் கோரிக்கை வெறும் கானல் நீராக முடியும்!

ஊழல்கள் காங்கிரஸில் இல்லையா? காங்கிரஸ் கொள்கையில் நம்பிக்கையில்லாதவர்கள் எத்தனை பேர் அதில் ஒட்டிக் கொண்டு, பர்மிட்டும் லைசென்சும் பெற்று வாழ்கிறார்கள்! காங்கிரஸ் மேலிடம் ஜாதித் துவேஷக் கட்சிகளு

## தி.மு.க.வில் பிளவு



திமுக
காங்கிரஸ்
தி.மு
தி
காங்கிரஸ்




இதன் நிழலில் நீ வளருவது ஏது?
சோஷலிஸக் கட்சிகள்
ஆட்சி




இந்திரா கைக்குட்டை
மறைமுக வரிகள்
வரிச்சலுகை

டன் கூட்டுச் சேரக்கூடாது என்று முழங்குகிறது. தமிழ் நாட்டில் திரு காமராஜர் தலைமையில் இயங்கும் காங்கிரஸ், திரு சம்பத் அவர்களது பெரியப்பாவும் ஜாதித் துவேஷச் சிங்கமுமான திரு ராமசாமியாருடன் கைகோத்துக் கொண்டு நடமாடவில்லையா? காங்கிரஸ்காரர்களே காங்கிரஸ் கொடியும் கறுப்புக் கொடியும் பறக்க விட்டுக் கொண்டு ஈ. வெ. ரா.வுக்கு ஊர்வலம் விடவில்லையா?

தி. மு. க.வினரில் சிலர் முழு நேரமும் அரசியலுக்குச் செலவிடாமல் சினிமாவுக்குப் பாட்டு எழுதுகிறார்கள், வசனம் எழுதுகிறார்கள் என்று குறை கூறியிருக்கிறார். அவர் குறைப்படுவதற்குக் காரணம் இருக்கலாம். 'நான் முழுநேரமும் அரசியலுக்குச் செலவிடுகிறேன். அதனால் கட்சிப் பணம் என்று வருவதெல்லாம் எனக்குத்தான் உரிமை' என்று சொல்லாமல், ஏதோ தங்களுக்கென்று ஒரு தொழில் வைத்துக் கொண்டிருக்கிறார்களே என்று திருப்தியல்லவா பட வேண்டும்?

மொத்தத்தில் திரு சம்பத் தி. மு. க.வின் ஊழலை எடுத்து விட்டு, அதிலிருந்து வெளிப்பட்டு, கட்சியைப் பிளவு படுத்தி, மக்களைக் குழப்பத்தில் ஆழ்த்தி விட்டார். அதுவும் தேர்தல் வருவதற்கு எட்டு மாதங்களுக்கு முன் இப்படி வளர்ந்து வரும் கட்சியைப் பிளந்து, காங்கிரசுக்கு ஆதரவு தேடித் தந்து விட்டார். இதில் அவர் அடையும் லாபம்தான் என்ன?

சட்டசபையில் தி. மு. க. அங்கத்தினர்கள் நல்லபடியாக நடந்து கொள்ளவில்லை என்று குற்றம் சாட்டுகிறார். இதில் உண்மையுண்டு. பல தடவைகள் அதிருப்தி உண்டாக்கித்தான் இருக்கிறார்கள். இருந்தாலும், அவர்கள் செல்வாக்கு வெளியில் வளர்ந்து வருவது கண்டு, ஆளும் கட்சியினர் அச்சப்பட்டுக் கொண்டிருந்தனர். அந்தப் பயத்தைக் கூட்டம் தவறாமல் தி. மு. க.வை ஏசிக் காட்டி வெளிப்படுத்தி வந்தனர். இப்போது அந்தப் பயத்தையும் போக்கி, காங்கிரஸார் இஷ்டப்படி ஆள அனுமதிக்கப்பட்டுவிட்டனர்.

அது மட்டுமின்றி, தமிழ் நாட்டு ஆட்சி பீடத்திலிருப்பவர்கள், தில்லியில், தி.மு. க.வைச் சுட்டிக் காட்டி, பல லாபங்கள் தமிழ் நாட்டுக்கும் பெற்றுத் தந்தனர். "வட நாடு வாழ்கிறது, தென்னாடு தேய்கிறது என்று எங்கள் பகுதியில் தி. மு. க.வினர் கூறுகின்றனர்" என்று காங்கிரஸ்காரரிடம் சொல்லித் தமிழ் நாட்டுக்குச் சலுகைகள் பெற்று வந்தனர். அந்த அளவுக்கு லாபம்தானே?

மொத்தத்தில் திரு சம்பத் தி. மு. க.வை விட்டு வெளியேறிக் கட்சியைப் பிளந்தது காங்கிரசுக்கு லாபமாகத்தான் முடியும்.

# சுதந்திர நிதி

கல்கியில் ராஜாஜி அவர்கள் விடுத்திருந்த வேண்டுகோளுக்கு இணங்கிக் கீழ்க்கண்ட அன்பர்கள் சுதந்திர நிதிக்குப் பொருளுதவி செய்திருக்கிறார்கள்.

(9-4-61 லிருந்து 22-4-61 வரை)

| | | |
|---|---|---|
| தூத்துக்குடி வக்கீல்கள் சங்கம் : | | |
| ஏ. ராமஸ்வாமி அய்யர் மூலம் | 101 | 00 |
| டி. காந்தாமணி | 25 | 00 |
| கல்யாணி சீனிவாசன் | 3 | 00 |
| கோயமுத்தூர் வக்கீல்கள் : | | |
| கே. வி. கிருஷ்ணசாமி மூலம் | 53 | 00 |
| பத்மா | 1 | 00 |
| எம். சீதாராமன் | 5 | 00 |
| ஓர் அன்பர் | 31 | 00 |
| ஏ. பி. நாராயணன் | 5 | 00 |
| டி. எஸ். கோதை அம்மாள் | 2 | 00 |
| எம். ஆர். நாகராஜன் | 5 | 00 |
| டாக்டர் கே. ராமச்சந்திரன் | 10 | 00 |
| மாஸ்டர் வி. கோபாலகிருஷ்ணன் | 1 | 00 |
| எஸ். உமாதேவி | 1 | 00 |
| யமுனா பாய் | 1 | 00 |
| ஏ. ரங்கசாமி அய்யர் | 3 | 00 |
| ஓர் ஏடன் அன்பர் | 19 | 88 |
| கே. ஜயாமணி | 1 | 00 |
| ஒரு சுதந்திரவாதி | 5 | 00 |
| வி. வி. காளிகாமர்த்தனமய்யர் | | |
| வி. ஆர். கைலாம்பாள் | 11 | 00 |
| 10-1-61 முதல் 8-4-61 முடிய | 3455 | 02 |
| மொத்த வரவு | 3738 | 90 |

சுதந்திரக் கட்சிக்காகப் பண உதவி செய்கிறவர்கள் ஸ்ரீ ராஜாஜி C/O கல்கி காரியாலயம், சென்னை-10 என்ற விலாசத்துக்கு அனுப்பலாம்.

# வைகைக் கரை வைபவம்



ஆலநீழலார் ஆலவாயிலார்
காலகாலனார் பாலதாமினே. - சம்பந்தர்

பிலவ ஆண்டு மதுரையைப் பொறுத்த வரையில் அருள் மயமாகப் பிறந்திருக்கிறது. ஆலடி முனிவன் காலடியில் தோன்றி, காமகோடி வழியாக ஆலவாயை வந்தடைந்தாற் போல் அமைந்தது. சித்திரை இரண்டாம் நாள் மாலை ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகளின் மதுரைமா நகர்ப் பிரவேசம். அந்நாள், தமிழ்த் தெய்வமாக இங்கு சங்கம் வளர்த்தவர், பின்னர் ஆளுடைப் பிள்ளைகளாக இங்கு சிவநெறி தழைக்கச் செய்தவர், மீண்டும் ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளாக இங்கு ஞானம் செழிக்க வந்த புனித நாளும் ஆகும்.

திருநீற்றுப் பதிகம் பெற்ற இத்திருப்பதியில் அன்று பல்லாயிரக் கணக்கானவர் நீறு துலங்கும் நெற்றியுடனும், ஆசாரத்துடனும் ஆசாரியர்களை எதிர்நோக்கிக் குழுமியிருந்தனர். இப் பக்தி வெள்ளத்தில் மதுரைப் பெண்மணிகளும் மூழ்கி நின்றது குறிப்பிடத் தக்கது.

திருமோகூரிலிருந்து இங்கு எழுந்தருளிய இரு பெரியவர்களையும், திரு பி. டி. ராஜன் தலைமையில் அமைக்கப்பட்டுள்ள வரவேற்புக் குழுவினர் ஊர்வலமாக அழைத்து வந்தனர். தல்லாகுளம் அம்பலக்காரர் மண்டபத்திலிருந்து நகர் உலா தொடங்கியது.

அடங்கிய ஆனந்தமே உருவெடுத்தது போன்ற பெரியவர்கள் மலர்ப் பல்லக்கிலும், ஆனந்தம் பொங்கிப் பெருகும் புதுப் பெரியவர்கள் யானை மீதும் அமர்ந்து தரிசனம் நல்கினர். வேத பாராயணம், தேவார–திருவாசக பஜனை, யானை ஒட்டகம் முதலிய கோவில் விருதுகள், வாண வேடிக்கைகள்-இவை மூலம் பெரியவர்களிடம் தங்களுக்குள்ள பக்தியின் அளவைக் காட்டினர் மதுரை மாநகர் வாசிகள். கீழ்ப்பாலம், சொக்கர் ஆலயம், தளவாய் அக்கிரகாரம், ஆவணி வீதிகள், திண்டுக்கல்சாலை, மேலமாசி வீதி, வடக்கு வெளி வீதி வழியாக ஊர்வலம் செல்லச் செல்லக் கூட்டமும் பெருகப் பெருகப் பெருகியபடி இருந்தது. பக்தர் பெருமக்கள் இரு சுவாமிகளையும் பணிந்து கடாட்சம் பெற்றனர்.

மேலூர்ச்சாலைத் திருப்பத்தில் தேவஸ்தானத்தினர் பெரியவர்களுக்கு மரியாதை செய்தது காமாட்சியன்னையை மீனாட்சியன்னை வரவேற்றாற் போலிருந்தது. திருஞான சம்பந்தர் மடத்திலும் இந்த ஞானச் செல்வர்களுக்கு வரவேற்பு அளிக்கப் பெற்றது.

ஊர்வலம் சுவாமிகளின் முகாமாகிய சேதுபதி உயர்நிலைப் பள்ளியை அடையும்போது இரவு பன்னிரண்டு மணி. மறு நாள் மாலையும், ஸ்ரீ சுவாமிகள் யாரும் எதிர்பாரா வண்ணம் ஆறுதங்கரையில் ஸ்ரீ ஆதி சங்கரர் பாதுகைக்குப் பூஜை நடக்குமிடம் சென்று, அங்குள்ளோரைத் 'தானே வந்து தலையளித்து ஆட்கொண்டு' அருளினார்; மதுரைவாசிகள் பேரானந்தம் அடைந்தனர்.

ஸ்ரீ சுவாமிகளும் அன்னை மீனாட்சியின் மடியில் வளரும் மக்கள் இவ்வளவு பேரைக் கண்டதில் தாம் உவகை பெற்றிருப்பதாகக் கூறியிருக்கிறார். இந்தத் தவயோகியர்கள் ஒரு மாதம் இங்கு தங்கியிருப்பார்கள் எனத் தெரிகிறது. ஸ்ரீ சங்கர ஜயந்தியைப் பெரியவர்கள் இங்கேயே கொண்டாடியதில் மதுரை மேலும் பெருமை கொண்டிருக்கிறது.

'உலகெலாம் தான் வாட வாடாத நன்மைத்தே தென்னவன் நான்மாடக் கூடல் நகர்' என்ற பரிபாடல் பழம் பெருமை இப்போது புதுப் பெருமையாக — அருட்பெருமையாக — மதுரைக்குக் கிடைத்திருக்கிறது.



# விஞ்ஞானியின் அறிவுரை

வான வெளியில் மனிதனை அனுப்பி அவனை முன்னேற்பாட்டின்படி இவ்வுல குக்கு மீட்டுக் கொள்ளும் அற்புத சாதனை யைக் கண்டு, விஞ்ஞான ஆராய்ச்சியில் உண்மையான ஆர்வமும் திறனும் உள்ள அறிஞர்கள் மனம் களிக்கவில்லை என்ப தற்கு டாக்டர் ஸி. வி. ராமன் அவர் களின் அறிவுரை ஓர் எடுத்துக்காட்டு. சென்ற வாரம் இதைப் பற்றிப் பேசு கையில்,

> "இந்தச் சாதனையைக் கண்டு நான் சந்தோஷப்படவில்லை. மாறாக வருத் தத்தில் ஆழ்ந்தேன்"

என்று அவர் கூறியுள்ளார். பாரதப் பிரதமர் பண்டித நேரு உள்பட, உலக மனைத்தும் பாராட்டும் இந்தச் சம்பவம் பிரபல விஞ்ஞானியும் நோபல் பரிசு பெற்ற மேதையுமான டாக்டர் ஸி. வி. ராமனை ஏன் உற்சாகப்படுத்தவில்லை? காரணத்தையும் அவரே விளக்குகிறார்.

> "ஒரு குரங்கோ, நாயோ, புழு பூச்சியோ, அல்லது மனிதனோ வான வெளியில் பிரயாணம் செய்து திரும் புவது முக்கிய விஷயமல்ல. இந்த அற்புத ஆராய்ச்சிகளை ஊக்குவிக்கும் தூண்டுகோல் எது என்பதுதான் முக்கியமான அம்சம். வானவெளியில் மனிதனை அனுப்புவதற்குத் தூண்டு கோலாக இருப்பது ஆயுத பலத்தைப் பெருக்கிக் கொள்ள வேண்டும் என்ற யுத்த மனப்பான்மை. இதில் வல்லரசு களுக்குள் ஏற்பட்ட போட்டியின் வேகம், யுத்தவெறி தலைவிரித்தாடும் மதோன்மத்தர்களுடைய வெறிக்குச் சமானமாக, புதுப் புது ஆராய்ச்சிகளை ஊக்குவித்திருக்கிறது. உண்மை விஞ் ஞானி இதைக் கண்டு எப்படிச் சந்தோ ஷப்படக் கூடும்? இயற்கையின் ஒவ் வொரு அற்புதத்தையும் ஆராய்ந்து அறியும்போதும், நாம் எல்லாரும் இயற்கை அன்னையின் குழந்தைகள் என்ற பணிவு தோய்ந்த உள்ளம் உரு வாக வேண்டும். நம்மைச் சூழ்ந்துள்ள உலகத்தின் மர்மங்களை அறிந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணத் துடன் மட்டுமே ஆராய்ச்சிகள் மேற் கொள்ளப்பட வேண்டும். அதுவே விஞ்ஞானத்தின் லட்சியம்"

என்று டாக்டர் ஸி. வி. ராமன் கூறு கிறார். வானவெளி ஆராய்ச்சி நடை பெற்று வரும் விதத்தைக் கண்டு வருத்த முற்று எச்சரிக்கை விடுக்கும் உண்மை விஞ்ஞானி நம்மிடையே, தென்னகத் தில் சுடர்விட்டுப் பிரகாசிக்கிறார் என்ப தைக் கண்டு பாரத மக்கள் பெருமை கொள்வார்கள்.



# கூடலூர் மகாநாடு

கெடிலம், பெண்ணை, வேகவதி ஆகிய மூன்று நதிகளும் சேரும் இடத்துக்குக் கூடலூர் என்று பெயர். இப்போது இது கடலூர் என வழங்குகிறது. அங்கு சென்ற 16 ம் தேதி கோவை, தஞ்சை, ராமநாதபுரம், திருநெல்வேலி ஆகிய ஜில்லாக்களைச் சேர்ந்த சுதந்திரக் கட்சிப் பிரதிநிதிகள் ஒன்றுகூடியதால் ஏற்கனவே இருந்த பெயர்ப் பொருத்தம் மேலும் பொருத்தமாகி விட்டது. இது வரையில் எந்த மகாநாட்டிலும் இவ்வளவு பெரும் கூட்டம் கூடவில்லை என்று சொல்வது போல், அந்தப் பந்தல் முழுதும் மக்கள் நிரம்பியிருந்தனர்.

இந்த மகாநாட்டில் முக்கியமான விஷயம் திருவாளர் ஓ. பி. ராமசாமி ரெட்டியார் அவர்கள் அனுப்பியிருந்த வாழ்த்துச் செய்தி தான். திரு ஓ. பி. ராமசாமி ரெட்டியார் அவர்கள் பகிரங்கமாகச் சுதந்திரக் கட்சியில் இல்லை யென்றாலும் அவர்கள் உள்ளம் யார் பக்கத்தில் இருக்கிறது என்பதைத் தெளிவாகக் காட்டிவிட்டார். நல்லோர் இதயம் எல்லாம் சுதந்திரக் கட்சியின் பக்கலில்தான்இருக்கிறது. இதைவிட வேறு என்ன வேண்டும் !

"சென்ற ஆண்டுதமிழ்நாட்டு மகாநாடு கூடலூரில் நடப்பதாகஇருந்தது. அது நடக்காமல் போய்விட்டது. அந்த அரிய வாய்ப்பு கோவை ஜில்லாக்காரர்களுக்குக் கிடைத்தது" என்று வரவேற்புரை வாசித்த திரு எம். வேங்கடசாமி ரெட்டியார் அவர்கள் கூறிவிட்டு, முதலில் தமிழ் நாட்டில் சுதந்திரக் கட்சியின் தலைவராக இருந்த கே. எஸ். வேங்கட கிருஷ்ண ரெட்டியார் அவர்களுக்கு நன்றி செலுத்தினார். இது சுதந்திரக் கட்சியினரின் பண்பை எடுத்துக் காட்டுவதாக இருந்தது.

தலைவர் ஆசார்ய ரங்கா அவர்கள், கூட்டுப் பண்ணை பெயரில் சர்க்கார் பொதுப் பணத்தை விரயமாக்கி, விளைவைக் கெடுத்து வருவதைத் தக்க சான்றுகளுடன் எடுத்துக் கூறினார். இம் மகாநாட்டுக்கு ஆந்திர சுதந்திரக் கட்சியின் தலைவர் திரு பி. ராமச்சந்திர ரெட்டியார் தலைமை வகித்து மிக அரிய பிரசங்கம் நிகழ்த்தினார்.

காலை பேராசிரியர் ரத்தினசாமி, கோவை தொழிலதிபர் திரு கே. சுந்தரம் முதலியவர்கள் பேசினார்கள். அன்று பிற்பகல் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. அவற்றின் மீது சாமித்துரைத் தேவர், திரு ராமசாமிக் கோனார், திரு சா. கணேசன் முதலியோர் பேசினார்கள்.

சர்க்கார் நடத்தும் காதி போர்டு, கம்யூனிட்டி டெவலப்மென்ட் இலாக்கா, சோஷியல் வெல்பேர் போர்டு முதலிய இலாக்காக்கள் ஒரே ஊழல் மலிந்தவை என்பதும் இவற்றில் செலவழிக்கப்படும் பணம் வீணாகிறது என்பதும் நாடறிந்த விஷயம். ஆனால் நாடறியாத விஷயம் ஒன்று உண்டு. 'சுதந்திரக் கட்சியில் உற்சாகமும் தேசபக்தியும் கொண்ட இளைஞர்கள் சேர்ந்தால், அவர்களுக்கு வேலை கொடுப்பதாகக் கூறி வலைவீசிப் பிடிக்கிறார்கள்' என்ற விஷயத்தை திரு என். கஜபதி என்னும் இளைஞர் தமக்கு ஏற்பட்ட அனுபவத்தையே கூறி விளக்கினார்.

இன்று பதவியிலுள்ள கட்சி தனது செல்வாக்கு, அதிகாரம், பணம் எல்லாவற்றையும் கட்சி நலனுக்கே நேரிய முறையிலும் நெறி தவறிய முறையிலும் உபயோகித்துக் கொள்ளப் பார்க்கிறது என்பதற்கு இதைவிடச் சான்று என்ன வேண்டும் ?

கடைசியாக ராஜாஜி பேசினார். "அவரவர்க்குரிய கடமையைச் செய்வதே ஆண்டவனுக்குச் செய்யும் பூஜையும் பக்தியுமாகும் என்று கண்ணன் கீதையில் கூறியிருக்கிறான். சுதந்திரக் கட்சிப் பணி வேறு, தெய்வ வழிபாடு வேறு என்று நான் கருதவில்லை. இது தெய்வப் பணி என்றே, இப் பணியைச் செய்து வருகிறேன் !" என்று உணர்ச்சியோடு குறிப்பிட்டார்.

கூடலூர் நகரசபைத் தலைவர் திரு தாமோதரன் அவர்கள், அன்று மாலை பல பிரமுகர்களை அழைத்து, தமது இல்லத்தில் ராஜாஜிக்கு ஒரு தேநீர் விருந்து அளித்தார். தமது நகரசபையில் அரசியல் கட்சிக் குழப்பங்கள் கிடையாது என்பதை அவர் எடுத்துக் கூறினார். ஆயினும் தமது சொந்த முறையில் தாம் சுதந்திரக் கட்சியின் கொள்கையை ஆதரிப்பவர் என்பதையும், இன்றைய ஆட்சிக்குத் தக்க எதிர்க் கட்சி இல்லையெனில் வெகு சீக்கிரத்தில் கம்யூனிஸ்ட் ஆட்சியை இந் நாட்டில் ஏற்படுத்தி விடுவார்கள் என்றும் அதனை எதிர்க்க ராஜாஜி துணிந்து முன் வந்ததைப் பற்றித் தமது மகிழ்ச்சியைத் தெரிவித்து அரிய உரை நிகழ்த்தினார்.

அன்று இரவு மஞ்சக்குப்பம் மைதானத்தில் ஒரு பெரும் பொதுக்கூட்டம் நடைபெற்றது. சுமார் ஐம்பதாயிரம் பேர் கூடியிருந்தனர். மேலூர் வீரராகவன், கோவை அப்பாமுத்து, திரு என். ஜி. ரங்கா, திரு சா. கணேசன், ராஜாஜி முதலியோர் பேசினார்கள்.

மொத்தத்தில் கூடலூர் மகாநாடு தமிழகம் சுதந்திரக் கட்சியை வரவேற்க எவ்வளவு உற்சாகமாக இருக்கிறது என்பதை வெளிப்படுத்தி விட்டது என்றே சொல்ல வேண்டும்.

---

கூடலூர் சுதந்திரக் கட்சி மகாநாட்டுப் படங்களை முன்பக்கத்தில் காணலாம்.

1. மாவட்ட முகப்புத் தோற்றம். 2. ராஜாஜி பேசுகிறார். 3. என். ஜி. ரங்காவும், எஸ். எஸ். மாரிசாமியும். 4. பேராசிரியர் திரு எம். ரத்தினசாமியின் உரை. 5. தெ. ஆ. மாவட்ட சுதந்திரக் கட்சித் தலைவர் வேங்கடசாமி ரெட்டியார். 6. செயலாளர் டாக்டர் கிருஷ்ணமூர்த்தி. 7. திரு கே. சுந்தரம். 8. திரு ராமச்சந்திர ரெட்டி. 9. இளைஞர் திரு கஜபதி.

# மனக்கொதிப்பும் கவலையும் ஜீரணத்தை பாதிக்கின்றன



நம் வயிறும், மூளையும் நரம்புகளின் மூலம் ஒன்றோடொன்று இணைக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு முறையும் நாம் மனக் கொதிப்பினாலோ அல்லது கவலையினாலோ பாதிக்கப்படும்பொழுது இந்த நரம்புகள் ஜீரணம் செய்வதை தற்காலிகமாக தடுப்பதுடன் ஆட்ரினலின் என்ற சக்திவாய்ந்த அமிலத்தை வெளிப்படுத்தி ரத்தத்துடன் கலக்கிறது. ஓடியாடி வேலை செய்வோருக்கு இந்த அமிலம் மனக்கொதிப்பை எதிர்த்துப் போராட உதவுகிறது. ஆனால் மற்றவர்கள் விஷயத்தில் இது தீமையைப் பயக்குவதுடன் அவர்கள் ஜீரண சக்தியையும் குறைக்கிறது அதனால்தான் வியாபாரத் துறையிலுள்ளவர்களில் 10 பேர்களில் 6 பேர் அஜீரணத்திற்குள்ளாகி, அதன் விளைவாக சாப்பிட்ட பின் வயிற்று வலியினால் கஷ்டப்படுகிறார்கள்.






ஹ்யூலட்ஸ் மிக்சர் வயிற்று வலியை விரைவாகவும் அடியோடும் நிவர்த்திக்கிறது. எரிச்சலை உண்டாக்கும் அமிலத்திலிருந்து இரைப்பையின் சுவற்றைக் காப்பாற்றுவதோடு உணவை நன்றாக கரைத்து ஜீரண சக்தி ஏற்படுவதற்கும் உதவுகிறது. 80 வருஷங்களுக்கு மேலாக உலகத்திலுள்ள எல்லா டாக்டர்களும் சிபாரிசு செய்யும் மருந்து இதுவே. குழந்தைகளின் வயிற்று உபாதையையும் நீக்க வல்லது ஹ்யூலட்ஸ் மிக்சர்.

வயிற்றுக் கடுப்புக்கு அபினி கலந்த ஹ்யூலட்ஸ் மிக்சரை உபயோகியுங்கள்.

## "ஹ்யூலட்ஸ் மிக்சரை

உபயோகிக்க ஆரம்பித்ததிலிருந்து
நான் நன்றாக சாப்பிட முடிகிறது"



ஸி. ஜே. ஹ்யூலட் & ஸன் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
86/A, கைனியப்ப நாயக்கன் தெரு, மதராஸ்-3

JWT-CJH-1316a

போர விட்டிட்டு என்னை நீ புறம்
போக்கலுற்றால், பின்னை யான்
ஆரைக்கொண்டு எத்தை? அந்தோ!
எனது என்பதுஎன் ? யான்
என்பதுஎன்?
தீர இரும்பு உண்ட நீர் - அதுபோல,
என் ஆர் உயிரை
ஆரப்பருக, எனக்கு ஆரா-அமுது
ஆனாயே!

என்னை நீ அகற்றி உபேக்ஷித்து விட்டால் எனக்கு என்ன வேறு கதி? நான் யாரைக் கொண்டு என்ன புருஷார்த்தத்தை அடைய முடியும்? எனது என்று ஓர் உடைமையையும் நான் கருதவில்லை. நான் என்று என்னையும் ஓர் உடையவனாகவும் நான் கருதவில்லை. நான் ஒரு தனிப் பொருளா? அல்ல, நீதான் மெய்ப் பொருள். பழுக்கக் காய்ச்சின இரும்பு போல் ஊற்றிய நீரை அது முற்றிலும் உறிஞ்சிவிடுவது போல் என் உயிரை நீ அருந்தித் தீர்த்துவிட்டாய். அவ்வாறு என்னை நீ பருகி விட்டதே நீ எனக்குத் தந்த தீராத இன்பம்.

புறம் போக்கல் உற்றால் - கைவிட நினைத்தாயானால்; பின்னை நான் ஆரைக் கொண்டு எத்தை - நீ கைவிட்ட பிறகு எந்த உபாயத்தைக் கொண்டு என்ன புருஷார்த்தத்தை முடிப்பது?

'எத்தை' என்பதற்குப் பின் 'முடிப்பது' என்கிற சொல்லை வருவித்துக் கொண்டு பொருள் காண வேண்டும். 'ஆரைக் கொண்டு' என்பதில் 'யாரைக்கொண்டு' 'எதைக்கொண்டு' என்று இரண்டும் அடங்கி நிற்கும்.

எனது என்பது என், யான் என்பது என்?— முடிந்தேன் என்று பொருள். நீ கைவிட்டால் நான் கெட்டேன். 'நீர் நுமது என்றிவை வேர் முதல் மாய்த்து' என்று ஆழ்வார் உபதேசித்ததைத் தாம் முற்றும் செய்து முடித்து விட்டார் என்பது பொருள். இப்படி மாய்த்தவர்கள் தானே எம்பெருமானைக் கூவிக்கொள்' என்று இறைஞ்சும் அதிகாரம் பெற்றவர்கள் ஆவார்கள்.

• • •

பெற்றுஇனிப் போக்குவனோ
உன்னை, என் தனிப்பேருயிரை ?
உற்ற இருவினை ஆய், உயிர் ஆய்,
பயன் ஆயவை ஆய்,
முற்ற இம்மூவுலகும் பெரும் தூறு
ஆய், தூற்றில்புக்கு
முற்றக் கரந்து ஒளித்தாய்! என்
முதல் தனி வித்தேயோ!

உன்னைப் பெற்று இனிப் போக்குவனோ - உன்னை அன்பினாலும் அறிவினாலும் அடைந்தேன், இனி உன்னை விடுவேனோ, மாட்டேன் - என்கிறார்

மிகத் தாழ்ந்தவனாயிருந்த எனக்குத் தாரகமாக வந்தாய், உன்னைப் பெற்று வைத்து இனி நான் விடுவேனோ?

என் தனிப் பேர் உயிரை - 'உன்னை' என்பதை இவ்வாறு விவரிக்கிறார். நீ அன்றி எனக்கு வேறு ஏது உயிர்?

இன்னும் எம்பெருமானை விவரிக்கிறார்: உற்ற இரு வினை ஆய் -



ஜீவாத்மாவைப் பற்றி நிற்கும் நல் வினை தீவினைகட்கெல்லாம் நீயே நிர்வாஹகன். உன்னை ஒழிய வேறு கர்மங்களைச் செய்யும் தன்மை எனக்கு இல்லை அல்லவா?

உயிராய் - வினைகளைச் செய்யும் ஆத்மாவுக்கும் நீயே நிர்வாஹகன்

பயன் ஆயவை ஆய்—கர்மங்களின் பயனுக்கும் நீயே நிர்வாஹகன்.

முற்ற இம் மூவுலகும் பெரும் தூறு ஆய் - இந்த மூன்று உலகங்களும் ஆகிய தூறு. (அதாவது காட்டுப் புதரும்) நீயே. சம்சாரம் ஒரு புதர்- வழி தெரியாத காடு.

தூறு ஆய் தூற்றில் புக்கு - சம்சாரம் என்கிற புதரை உண்டாக்கி அந்தப் புதரிலும் நீ புகுந்து அதனில் எல்லாப் பொருள்களிலும் நிற்கிறாய்.

இந்த உலகத்தில் எல்லா இடங்களிலும் எல்லாப் பொருள்களிலும் சர்வேசுவரன் இருக்கிறான்.

முற்றக் கரந்து - மறைந்து நிற்கிறான் எந்தப் பொருள்களில் நிற்கிறானோ, அந்தப் பொருள்களுக்கு அவன் தெரிவதில்லை.

'யம் ஆத்மா நவேத' என்பது சுருதி. எவனை ஆத்மா அறிகிறதில்லையோ (அவன் ஈசன்)

ஒளித்தாய் - உன்னை நீ ஒளித்தாய்.

*　　　*　　　*

**சூழ்ந்து, அகன்று, ஆழ்ந்து, உயர்ந்த**
**முடிவில் பெரும்பாழே! ஓ!**
**சூழ்ந்து அதனில் பெரிய பர நல்**
**மலர்ச்சோதீ! ஓ!**
**சூழ்ந்து, அதனில் பெரிய சுடர்**
**ஞான இன்பமே! ஓ!**
**சூழ்ந்து, அதனில் பெரிய என்**
**அவா அறச் சூழ்ந்தாயே**

பிரம்மன், சிவன், ஹரி என்று பிரித்துச் சொல்லும் மூர்த்திகள் எல்லாம் அவனே. பிரம்மம் என்று வேதாந்தத்தில் சொல்லப்படும் பரம் பொருளே தான் ஆழ்வார் இறைஞ்சும் எம்பெருமானும்.

'பாழ்' என்பது ஆகாசம்.

''சூழ்ந்து அகன்று, ஆழ்ந்து, உயர்ந்த முடிவு இல் பெரும்பாழே ஓ'' என்று வேதாந்த பரம்பொருளை எங்கும் பரவி நிற்கும் ஆகாசமாக வைத்துக் கூவுகிறார்.

ஆகாசமே, என்று முதலடியில் கூவி இறைஞ்சிவிட்டு அடுத்த அடியில் அதனில் (அதனைவிட) பரந்து நின்று - அதைவிடப் பெரிய ஜோதி சொரூபமே என்கிறார்.

மூன்றும் அடியில் இவை இரண்டையும் தன்னுள் அடக்கிக் கொண்டு அவற்றுக்கு நிர்வாஹகமாய் நிற்கும் கொழுந்து விட்டு எரியும் ஞானமய சொரூபமே என்று பகவானைக் கூவுகிறார். அந்த ஞானம் வெற்றல் அறிவு மட்டும் அல்ல 'ஞான இன்பம்'' வேறொன்றையும் பற்றாமல் தன்னில் தோன்றும் பூரண இன்ப சொரூபம்.

சுடர் - கொழுந்து விட்டு எரியும்.

இந்த மூன்று சொரூபங்களைக் காட்டிலுமே பெரியதாகும் என்று

---

ராஜாஜி அவர்களுக்கு,

சென்ற வாரம் கல்கி 'பக்திநெறி'யில் ஒரு சிறு பிழை. 'திருப்பேர் நகர்' என்னும் திவ்ய தேசத்தை ஆழ்வார் மங்களாசாஸனம் செய்துள்ளார். அதை விவரிக்கையில் 'தென்திருப்பேரை' என்றே தாங்கள் எழுதியுள்ளீர்கள். இது தவறு. தென்திருப்பேரை என்று வழங்கும் திவ்யதேசம் பொருநைக் கரையிலிருப்பது. ''வெள்ளைச் சுரிசங்கு'' என்னும் திருவாய்மொழியில் ''தென்திருப்பேரெயில்'' என்று ஆழ்வார் அதை மங்களாசாஸனம் செய்துள்ளார். பொன்னித் தென்பால் உள்ளதாக ஆழ்வார் மங்களாசாஸனம் செய்துள்ள 'தென் திருப்பேர் நகர்' தஞ்சாவூர் ஜில்லாவில் உள்ளது. 'அப்பக்குடத்தான்' என்றும், 'கோயிலடி' என்றும் தற்காலத்தில் வழங்குவது. ஆழ்வார் காலத்தில் 'திருப்பேர்' 'திருப்பேர் நகர்' 'தென்திருப்பேர் நகர்' என்று வழங்கி வந்திருக்கிறது.

தாங்கள் எழுதியிருப்பதைப் பார்ப்பவர்கள் பொருநைக் கரையிலுள்ள தென்திருப்பேரையே இது என்று மயங்கக் கூடும். இதைத் திருத்திக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளுகிறேன்.

தங்கள் அன்புள்ள,

திருச்சி
20—4—61

எஸ். கிருஷ்ணசுவாமி அய்யங்கார் எம். ஏ., பி. எல்.

'' இந்தக் கடிதத்துக்கு நன்றி. —ராஜாஜி''

டைய அவா என்கிறார். அதாவது உன்னை அடைய வேண்டும் என்று விரும்பும் என்னுடைய ஆசை. இப்படி எல்லாவற்றையும் கொள்ளுவதும் அவற்றைவிடப் பெரியதுமான என்னுடைய காதலை விடப் பெரிதாகவும் அந்தத் தாகத்தைத் தணிக்கும்படியானதுமான உன்னுடைய காதலைக் காட்டி வந்து கலந்தாயே என்கிறார்.

சூழ்ந்து அதனில் பெரிய என் அவா அறச் சூழ்ந்தாயே.

அன்பு மயமாக வந்த பரதனைத் தம் மடியில் வைத்து உச்சி மோந்து உகந்து அணைத்த ராம பத்ரனைப் போலே என்கிறார் ஈடு வியாக்யாதா வழக்கம்போல் ராமாயணத்தை எடுத்துக்கொண்டு.

என் அவா அற - என் விடாய் தீர்ந்து ஒழிய; 'சூழ்ந்தாயே' - என்னையே.

சர்வேசுவரனுடைய சங்கற்பம் அதாவது சர்வேசுவரன் எண்ணிய எண்ணமே உபாயமும் காரிய சித்தியுமாகும். அவனுடைய சங்கற்பமும் பயனும் கூடவே திகழும்.

முடிவில் பல சுருதிப் பாசுரம்:

**அவா அறச்சூழ் அரியை, அயனை,**
**அரனை அலற்றி,**
**அவா அற்று, வீடுபெற்ற**
**குருகூர்ச்சடகோபன் சொன்ன**
**அவா இல் அந்தாதிகளால் இவை**
**ஆயிரமும் முடிந்த**
**அவா இல் அந்தாதி இப்பத்து**
**அறிந்தார் பிறந்தார்—உயர்ந்தே.**

கடைசி அடியின் பொருளின் சட்டு விளக்கம்:

பரமபக்தியாலே பிறந்த அந்தாதியான இந்தக் கடைசிப் பத்தை ஓதி அறிந்தவர்கள் சம்சாரத்தில் பிறந்து வைத்தே அதாவது பிறந்தபோதே அயர்வு அறும் அமரர்களோடு ஒப்பர்.

பிறந்தார் உயர்ந்தே – பிறந்தே உயர்ந்தார்.

சர்வேசுவரன் அவதரிப்பதைப் போல் சம்சாரத்தில் பிறந்தும் அவர்கள் தேவர்களாவர்.

பக்தியும் பூரண ஞானமும் ஒப்பற்ற தமிழும் மூன்றும் கலந்த நம்மாழ்வார் பாசுரங்களைத் தமிழர் படித்துப் பயனடைவார்களாக.

பக்திநெறி முற்றிற்று



# மீண்டும் ஒருமுறை காலகெடுவுக்கு முன்னால்

துர்க்காபூரின் 24" மத்திமப் பகுதி ஆலை காலகெடுவுக்கு முன்னாலேயே தயாராகி விட்டது. தகடரைக்க ஆரம்பித்து விட்டது. ரயில்வேயிலும், கட்டுமான வேலையிலும் தேவைப்படும் பலவகைப் பொருட்களை இது உருவாக்குகிறது. துர்க்காபூர் உருக்காலையின் தகடரைக்கும் தொழிற்சாலையின் நான்காம் பகுதி இது.

ஐந்தாவதும், இறுதிப் பகுதியுமான பக்குவ ஆலையும் அநேகமாகப் பூர்த்தியடைந்து விட்டது.

## இஸ்கான்

இந்தியன் ஸ்டீல் ஒர்க்ஸ் கன்ஸ்ட்ரக்ஷன் கம்பெனி லிமிடெட்

டேவி & யுனைடெட் என்ஜினீரிங் கம்பெனி லிமிடெட், ஹெட் ரைட்ஸன் & கம்பெனி லிமிடெட், ஸைமன்-கார்வ்ஸ் லிமிடெட், தி வெல்மென் ஸ்மித் ஓவன் என்ஜினீரிங் கார்ப்பரேஷன் லிமிடெட், தி ஸிமிண்டேஷன் கம்பெனி லிமிடெட், அஸோசியேடட் எலெக்ட்ரிகல் இண்டஸ்ட்ரீஸ் (ரக்பி) லிமிடெட், தி இங்கிலீஷ் எலக்ட்ரிக் கம்பெனி லிமிடெட், தி ஜெனரல் எலக்ட்ரிக் கம்பெனி லிமிடெட், அஸோசியேடட் எலக்ட்ரிகல் இண்டஸ்ட்ரீஸ் (மான்செஸ்டர்) லிமிடெட், ஸர் வில்லியம் ஆர்ரோல் & கம்பெனி லிமிடெட், க்ளீவ்லண்ட் பிரிட்ஜ் & என்ஜினீரிங் கம்பெனி லிட், டோர்மென் லாங் (பிரிட்ஜ் & என்ஜினீரிங்) லிட், ஜோஸப் பார்க்ஸ் & ஸன் லிமிடெட். இவைகள் சேர்ந்த குழு.

இந்தியாவுக்காக வேலை செய்யும் பிரிட்டிஷ் கம்பெனிகள்

# மாயூரம் மஹா கும்பாபிஷேகம்

பொன்னி நதி பாயும் புண்ணியத் தலம். நம்மை வணங்கி வழிபடுவோருக்கு விரும்பும் பேறுகளை வழங்கி, பிறவிப் பயனை நீக்கும் கருணைக்கடல் அத்தலத்து ஈசன். ஒரு சமயம் அம்பிகைக்குத் தாக்ஷாயணி என்ற தன் பெயரில் அளவற்ற வெறுப்பு ஏற்பட்டது. பதியை நிந்தித்த தக்கனுக்குப் பெண்ணாகத் தான் பிறந்ததை நினைவூட்டியதால்தான் வெறுப்பு. ஆகவே இம் மாசு நீங்க, ஈசனை நோக்கித் தவமிருக்க இந்தப் புண்ணியத் தலத்துக்கு வந்தாள் அம்பிகை. மயிலுருவம் பெற்று இறைவனை வழிபடுவதிலேயே ஒன்றியிருந்தாள். வேண்டுவோர்க்கு வேண்டியவற்றை விரைந்து வழங்குவதிலே முதல்வோனான இத்தலத்து இறைவன் ஆண்மயிலாக வந்து அம்பிகைக்குக் காட்சியளித்து, நடனமாடித் திருவருள் செய்தான். மயில் வடிவம் நீங்கி அம்பிகை இயற்கை உரு எய்தியவுடன், "நாதா! தாங்கள் எனக்குக் காட்சியளித்து நடமாடிய இவ்விடத்திலே சபை யொன்று நிறுவ வேண்டும்" என்று வேண்டினாள். அம்மையின் ஆவலை அப்பன் பூர்த்தி செய்தான். திருமால் முதலிய தேவர்களின் விருப்பத்துக்கு இணங்க, அஞ்சல் நாயகியைத் திருமணம் செய்தருளினான். இறைவனால் அஞ்சல் என்று காக்கப்பட்ட தேவிதான் இப்போது பிறருக்கும் அஞ்சலென்றருளும் அஞ்சலிநாயகியாகிவிட்டாள்.

மயூரநாதர் நிறுவிய சபை ஆதி சபையென்றும், புரிந்த தாண்டவம் கௌரி தாண்டவமென்றும் வழங்கி வருகின்றன. 'மயிலாடுதுறையுறை' மணாளரின் திருமணம் வருஷந்தோறும் துலா மாதத்தில் ஏழாவது நாள் உத்ஸவத்தன்று நடைபெற்று வருகிறது.

தலம், மூர்த்தி, தீர்த்தம் ஆகிய முக்கீர்த்திகளும் பெற்ற மாயூரம் பாடல் பெற்ற க்ஷேத்திரம். வடமொழியிலுள்ள மாயூர புராணமும், ரிஷபதீர்த்த மகாத்மியமும், தமிழ் மொழியிலுள்ள அந்தாதி முதலிய பிரபந்தங்களும், தனிப் பாடல்களும், தோத்திரங்களும் மாயூரத்தின் மகிமையை மக்களுக்கு எடுத்தியம்புகின்றன. தம்மைச் சார்ந்த பாவங்களைப் போக்கிக் கொள்ளக் கங்கை முதலிய மகாநதிகளும், புண்ணிய தீர்த்தங்களும் துலா மாதத்தில் வந்து நீராடும் பேறு பெற்ற தீர்த்தமான பாபநாச தீர்த்தம் இந்தத் திவ்விய க்ஷேத்திரத்திலே தான் உள்ளது.

கங்கையின் பிரிவாற்றாமையைப் பொறுக்காது ஸ்ரீ காசி விசுவநாதர் தம்முடைய பரிவாரங்களுடன் இங்கு எழுந்தருளி இடபதீர்த்தத்தின் தென் பகுதியில் கோயில் கொண்டிருக்கிறார்.

ஸ்ரீ மயூரநாதரை வழிபட்டுப் பேறு பெற்ற சப்த மாதர்கள் தனித்தனியே பூசித்துத் தவம் செய்து கொண்டிருந்த ஏழு தலங்களும் இதன் பக்கத்தேதான் உள்ளன.

தித்திக்கும் தீஞ்சுவைத் தமிழில் தேவாரப் பதிகங்கள் பாடிய திருஞானசம்பந்தர் இந்தத் தலத்துக்கு எழுந்தருள முடியாதபடி காவிரியிலே வெள்ளம் பெருக்கெடுத்தோடியது. 'மயூர நாதனைத் தரிசிக்காமல் திரும்பலாமா?' என்று ஏங்கிய ஞானசம்பந்தப் பெருமானுக்குக் காவிரியை வடியச் செய்து, வழிகாட்டி அழைத்துச் சென்றார் துறை காட்டும் வள்ளல் மயூரநாதர்.

ஈசன் மானுட பக்தர்களுக்கு மட்டும்தான் அருள ஓடி வந்தார் என்பதில்லை; இத்தலத்துக்கு வந்து வழிபட்ட கழுகு, கிளி, குதிரை, நரி, பூனை, யானை, வானரம் அனைத்தும்கூட இறைவனருளால் பேறு பெற்றன.

தொண்டர்தம் பெருமை சொல்லவும் எளிதோ? முத்தியை வேண்டிப் பல சிவத் தலங்களுக்குச் சென்று ஈசனைத் தரிசித்துத் தவம் செய்தனர் நாதசன்மா, அநவித்தை தம்பதியர். திருவையாற்றிலே ஐயாறப்பரை வணங்கி எழுந்த போது, "நீங்கள் மாயூரம் சென்று மயூரநாதரை நோக்கித் தவமிருந்தால் பெரும் பேற்றையடையலாம்" என்று திருவாய் மலர்ந்தார். இறைவனின் அசரீரி வாக்குப்படியே மாயூரம் வந்து ஈசுவரனை நோக்கித் தவமிருந்தனர் அந்தத் தம்பதியர். மயூரநாதரும் அவர்களது தவத்தை மெச்சி அவர்களுக்கு அருள் பாலித்ததோடு, "எம்மைத் தரிசித்த பயனை உங்களைத் தரிசித்த பின்பே யாவரும் அடையக் கடவது" என்று கூறித் தொண்டர்களையும் தெய்வமாக்கினார்.



இத்தகைய பெருமை பெற்ற மாயூரத்தலத்தில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ மயூரநாதப் பெருமானுக்கு ஏப்ரல் மாதம் 28ந் தேதி வெள்ளிக்கிழமை காலை ஏழு மணி முதல் ஒன்பது மணி வரை அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேகம் வெகு விமரிசையாக நடைபெறுகிறது. வழிகாட்டும் வள்ளலும், அருள் பாலிக்கும் அண்ணலுமாகிய மயூரநாதர் கும்பாபிஷேகத்தில் மக்கள் திரளாகக் கலந்து கொண்டு ஈசனருளுக்குப் பாத்திரராகும்படி கோருகிறோம்.

# புவனாவின் காதல்

வத்ஸலா தேவி



பலாலி கண்ணகி அம்மன் கோவில் அந்த ஊர்ப் பக்கமெல்லாம் மிகவும் பிரசித்தி பெற்ற கோவில். பலாலி ஊரில் உள்ளவர்கள் எல்லாரும் தங்களுக்கு எது நேர்ந்தாலும் அம்மனைத்தான் வேண்டிக் கொள்வார்கள். கல்யாணம் கைகூடி வரவேண்டுமானாலும் நோய் மாற வேண்டுமானாலும் எல்லாவற்றுக்கும் கண்ணகி அம்மன்தான் அருள் செய்ய வேண்டும். அம்மனும் அவர்கள் கேட்டதையெல்லாம் நடக்கும்படி அருள் செய்வாள். இப்படியே அருள் புரிந்து அம்பிகை பெரிய பணக்காரி ஆகிவிட்டாள்.

ஆனால் அவளையே நம்பி வாழும் அருணாசலப் பண்டாரத்தை மட்டும் என்றைக்கும் ஏழையாகவே வைத்து விட்டாள். அருணாசலப் பண்டாரம் பெரிய பக்திமான். ஒவ்வொரு நாளும் அருணாசலப் பண்டாரம் காலையில் எழுந்ததும் கொல்லையில் உள்ள கிணற்றில் நீராடிவிட்டு நெற்றி நிறையத் திருநீற்றைப் பூசிக்கொள்வார். பக்கத்திலிருக்கும் பூக்குடலையையும் கொக்கித் தடியையும் எடுத்துக்கொண்டு பூ ஆயப் புறப்பட்டு விடுவார். கண்ணகி அம்மனுக்குத் தினமும் பூமாலை கட்டிச் சாத்துவதுதான் அவர் திருப்பணி. திருவிழாக் காலங்களில் அவருக்கு நிறைய வேலை இருக்கும். கடந்த முப்பது வருஷங்களாக அவர் அம்மன் கைங்கரியத்தைத் தவறாது செய்து வந்தார். அவர் மனைவி தங்கம்மா ஆச்சியும் அவருக்கேற்ற தர்மபத்தினிதான். இந்தத் தம்பதிகளுக்குப் பல வருஷங்களாகப் புத்திர பாக்கியம் இல்லாது இருந்து கடைசியாக அம்மன் அருளால் தங்க விக்கிரகம் போல் பெண் குழந்தை ஒன்று பிறந்தது. புவனேசுவரி என்று பெயர் வைத்துத் தாயும் தந்தையும் கண்ணை போல் போற்றி வளர்த்து வந்தார்கள்.

புவனா வளர்ந்தாள். பள்ளியில் படித்தாள். சட்டம்பிமார்களிடம் கெட்டிக்காரி என்று பெயர் வாங்கினாள். புவனாவுக்குப் பதினாறு வயதானதும் பள்ளிக்கூடம் போவதை நிறுத்தி விட்டார்கள். அந்த நாளில் பெண் குழந்தைகள் பருவம் அடைந்ததும் வெளியில் தனித்துச் செல்வது கூடாதென்று ஊரார் சொல்வார்கள்.

ஆனால் புவனா கெட்டிக்காரி இல்லையா? வீட்டிலிருந்தே தன் கல்வியை வளர்த்துக் கொண்டிருந்தாள். எப்படி என்று கேட்கிறீர்களா? நிறையக் கதைப் புத்தகங்கள், நாவல்கள் என்று வாங்கிப் படித்துத் தள்ளிக் கொண்டிருந்தாள். அவள் அப்பா யாழ்ப்பாணம் டவுனுக்குப் போகும் பொழுதெல்லாம் தன் அருமைப் பெண் ஆசையுடன் கேட்கும் புஸ்தகங்களை வாங்கிவந்து கொடுப்பார்.

புவனா நல்ல அழகி. தந்தத்தினால் கடைந்தெடுத்த சிலைமாதிரி அங்கங்களும், கரிய நீண்ட கூந்தலும், முத்துப்போன்ற பல் வரிசையும், சிவந்த பவளம் போன்ற அதரங்களும் காதளவோடிய அழகிய கண்களுமாகக் கண்டவர் மனங் கவரும் பூங்கொடிபோல் இருந்தாள்.

தனக்குக் கதைகளில் வரும் அழகிய வீரதீரமுள்ள ராஜகுமாரனோ அல்லது அழகிய நாகரிக வாலிபனோ வந்து மாலை சூட்டி மணக்கக் காத்திருப்பதாக விதம்விதமான கற்பனைக் கனவுகள் கண்டு கொண்டிருந்தாள்.

புவனாவின் கற்பனை உண்மையாகவே நடைபெற்றிருக்கும். அவளுடைய அழகுக்கும் புத்திசாலித்தனத்துக்கும் யாராவது ஒரு ராஜகுமாரன் வந்து கொத்திக்கொண்டு போயிருப்பான். அருணாசலப் பண்டாரமும் தங்கம்மா ஆச்சியும்கூட அப்படித்தான் நினைத்திருந்தார்கள். ஆனால் விதி வேறு விதமாக நினைத்திருந்தது. திடீரென்று ஒருநாள் அருணாசலப் பண்டாரம் ஜுரமென்று படுத்தவர்தான், அப்புறம்



எழுந்திருக்கவேயில்லை. புவனாவும் தங்கம்மா ஆச்சியும் இந்த இடியைத் தாங்கிக் கொள்ள முடியாமல் துடிதுடித்துப் போய் விட்டார்கள். பிறகு அவர்கள் இருவரும் பலாலி மண்ணை உதறிவிட்டு மட்டக்களப்புக்கு ரயில் ஏறினார்கள். மட்டக்களப்பிலுள்ள ஒரு பிள்ளையார் கோவிலில் அருணாசலப் பண்டாரத்தின் ஒன்றுவிட்ட தங்கையின் கணவன் கணபதிப் பண்டாரம் பூக் கைங்கர்யம் செய்து வந்தான். அவனுக்கு ஒரு மகன். அவனைத் தன் பண்டாரத் தொழிலில் பழக்காமல் படிக்க வைத்தான். இப்பொழுது மகன் உப்போடை ராமகிருஷ்ண வித்தியாலயத்தில் உபாத்தியாயர். கணபதிப் பண்டாரமும் ஒரு வருஷத்துக்கு முன் கண்ணை மூடி விட்டார். அவர் மகன் சுந்தரமூர்த்தி தனிக் கட்டையாக இருந்து வந்தான். இரண்டு வருஷங்களுக்கு முன்பே மூர்த்திக்குக் கல்யாணம் செய்துவைக்கக் கணபதிப் பண்டாரம் முயற்சி செய்தார். ஆனால் மூர்த்தி தனக்குக் கல்யாணம் வேண்டாமென ஒரே பிடிவாதமாக மறுத்து விட்டான். தன் வேலை நேரம் போக மிகுதி நேரமெல்லாம் தன் அறையில் ஆசனம், பிராணாயாமம், தியானம், ஜபம் என்று மூக்கைப் பிடித்துக் கொண்டு இருந்து விடுவான். நாள் முழுக்கப் பச்சை ஜலம்கூட அருந்தாமல் பட்டினியாக மௌன விரதம் இருப்பான். இதையெல்லாம் பார்த்துவிட்டுக் கணபதிப்பண்டாரம் ''இவன் எங்கே குடியும் குடித்தனமுமாக இருக்கப் போகிறான்? சாமியாராகத்தான் போகிறான்'' என்று சொல்லிக் கொண்டே அவரும் கண்ணை மூடிவிட்டார்.

தங்கம்மா ஆச்சிக்கு இப்பொழுதுதான் தன் மருமகனின் ஞாபகம் வந்தது. வயது வந்த பெண்ணை வைத்துக்கொண்டு திக்கற்ற நிலையில் இருக்கும்போது மருமகனின் ஞாபகம் வராமல் இருக்குமா? ஸ்டேஷனுக்கு மூர்த்தி வந்து அவர்களை வரவேற்றான். புவனா தன் அத்தானைச் சிவந்த நிறமும் அலை அலையாகப் படிய வாரி விடப்பட்ட கிராப்பும் கொள்ளை அழகும் நாகரிக உடையுமாகக் கற்பனை செய்திருந்தாள். இங்கு அவன் அத்தான் கதர் வேஷ்டியும் கதர் ஜிப்பாவுமாக மிகவும் தூய எளிய உடைதான் அணிந்திருந்தான். ஆனால் மாநிறமும் களையான முகமும் இனிய சுபாவமும் உள்ள வாலிபனாகத்தான் இருந்தான். எனினும் புவனாவின் கற்பனை வாலிபனுக்கும் இவனுக்கும் மலைக்கும் மடுவுக்குமுள்ள வித்தியாசம் இருந்தது. புவனாவின் கற்பனைக்



கோட்டை பொலபொல வென்று இடிந்து விழுந்தது. ஆனால் அதே சமயம் மூர்த்தியின் திடவைராக்கியம் பிரம்மச்சாரியாகவே இருந்து பெரிய மகான்களைப் போன்ற உன்னத நிலையை அடையவேண்டுமென்ற சங்கற்பமும் பொலபொலவென்று இடிந்துவிழுந்தது. மாமாவுக்கு இவ்வளவு அழகான பெண் இருப்பது முதலிலேயே தெரிந்திருந்தால்.... ஆகா! பெண்களால்தான் எவ்வளவு பொல்லாத காரியங்கள் நடந்துவிடுகின்றன?

ஒருநாள் தாயார் புவனாவைக் கூப்பிட்டு, "ஏண்டி புவனா! உனக்கும் மூர்த்திக்கும் வருகிற மாதம் கலியாணத்துக்கு நாள் பார்த்து வைத்திருக்கிறோம். ஏன் ஒரு மாதிரி இருக்கிறாய்?" என்றாள். புவனாவுக்கு அழுகையும் ஆத்திரமும் வந்தன.

"யாரைக் கேட்டுக்கொண்டு நாள் வைத்தீர்கள்? எனக்கு இந்தக் கல்யாணம் வேண்டாம்" என்று விசும்பலுடன் முடித்தாள். அம்மா திடுக்கிட்டுப் போனாள்.

"கல்யாணம் வேண்டாமா? ஏன்? தம்பி மூர்த்திக்கு என்ன குறை? வடிவாயிருக்கிறான்; படித்திருக்கிறான். உத்தியோகம் பார்க்கிறான். வீடு வாசல் இருக்கு. தங்கமான குணம். எல்லாத்துக்கும் மேலாகச் சீதனம் ஒரு சதமுமில்லாமல் உன்னை ஆசையோடு கல்யாணம் செய்துகொள்ளுகிறேன் என்கிறான். ஏன் இப்படி மூதேவி பிடிச்சவள் மாதிரி பேசுகிறாய்?" என்றாள் அவள் தாயார்.

புவனா, "எனக்கு இந்தக் கல்யாணம் வேண்டாம் என்றால் வேண்டாம். அப்படி நீ வில்லங்கமாகச் செய்து வைத்தால் நான் கிணற்றில் விழுந்து செத்துப் போய் விடுவேன்" என்று அழுகையுடனும் ஆத்திரத்துடனும் சொன்னாள். தங்கம்மா ஆச்சி விலவிலத்துப் போனாள். அருமையாகத் தவமிருந்து பெற்ற பெண் கண்கலங்கச் சகிக்குமா தாயுள்ளம்? என்ன செய்வதென்று அறியாமல் திகைத்தாள்.

அதன் பிறகும் பல முறை புவனாவுக்குத் தாயார் புத்திமதி சொல்லிப் பார்த்தாள். புவனா மூர்க்கமாக மறுத்தாள். பாவம்! அப்பாவி மூர்த்திக்கு இவை ஒன்றுமே தெரியாது. தான் இத்தனை நாட்களும் பிரம்மச்சாரியாக இருந்து தூய்மையான வாழ்க்கை நடத்தியதற்கு இறைவனின் கருணையால் தங்கச் சிலை போன்ற அழகும் மற்றும் எல்லாக் குண நலனும் ஒருங்கமைந்த மனைவி தனக்குக் கிடைக்கப் போவதாகவும் தன்னைப் போன்ற பாக்யசாலி ஒருவருமில்லை என்றும் இறுமாந்திருந்தான்.

அன்று புவனாவின் பிறந்த நாள். காலையில் எழுந்ததுமே மூர்த்தி, "மாமீ! இன்று புவனாவின் பிறந்த நாளைத் தடபுடலாகக் கொண்டாட வேணும். நல்ல விருந்துச் சமையலாகப் பண்ணுங்கள்" என்று சொல்லிவிட்டு எங்கோ வெளியில் போய் விட்டான். மத்தியானம் தாயார் சமையல் அறையில் ஏதோ காரியமாக இருந்தாள். புவனா கூடத்தில் ஏதோ எடுப்பதற்காகச் சென்றாள். கூடத்தில் சோபாவில் உட்கார்ந்திருந்த மூர்த்தி புவனாவின் கையைப் பற்றி "புவனா! உன் பிறந்த நாளுக்கு என் அன்புப் பரிசாக இதை வைத்துக் கொள்" என்று சொல்லி ஒரு பார்சலை அவள் கையில் திணித்தான். மூர்த்தி தன் கையைப் பற்றியதும் புவனா உதறி விடத்தான் எண்ணினாள். அவனுடைய அன்பு ஸ்பரிசம் அவளைச் செயல்படாமல் செய்து விட்டது. புவனா பார்சலைப் பிரித்துப் பார்த்தாள்.

நீலநிறத்தில் ஜரிகை வேலைப்பாடுகள் செய்த பட்டுப் புடவை ஒன்றும் அழகிய முத்துமாலை ஒன்றும் இருந்தன. "பாவம், அத்தான்! இவைகளை எத்தனை அன்புடன் வாங்கி வந்திருப்பார். ஆனால் என் மனம்தான் அவரை ஏற்றுக்கொள்ள மறுக்கிறதே? எதுவானாலும் அவர் அன்புப் பரிசையாவது ஏற்றுக் கொள்ளுவோம்" என்று நினைத்தாள் புவனா. புடவையை உடுத்தி முத்து மாலையையும் அணிந்து கொண்டு வெளியில் வந்தாள்.

புவனாவைப் பார்த்த மூர்த்தி அப்படியே பிரமித்துப் போனான். தேவலோகத்து அரம்பையர் கூட இத்தனை அழகாக இருக்க மாட்டார்கள் என்று எண்ணினான். அன்றெல்லாம் அவன் ஆனந்தத்தில் மூழ்கியிருந்தான். புவனாவும் கொஞ்சம் கலகலப்பாக இருந்தாள். புவனா கலகலப்பாக இருப்பதைப் பார்த்த தாயார் ஒரு வேளை புவனா மனம் மாறிக் கல்யாணத்துக்குச் சம்மதித்து விடுவாள் என்று எண்ணிச் சந்தோஷப்பட்டாள்.

இவர்கள் மூவருடைய சந்தோஷத்தையும் சிதற அடிக்கும்படியான காரியம் நடந்து விட்டது. மாலையில் தண்ணீர் அள்ளக் கிணற்றடிக்குச் சென்ற புவனாவின் தாயார் கால் வழுக்கி விழுந்து விட்டாள். மண்டையில் ஆழமான அடி. பெரிய டாக்டர் வந்து பார்த்து விட்டு ரத்தம் அதிகம் சேதமாகிவிட்டது, பிழைப்பது கடினம் என்று சொல்லிப் போய் விட்டார். அடுத்த நாள் தங்கம்மா ஆச்சி "தம்பி! புவனாவைக் காப்பாற்ற வேண்டும்" என்ற சொல்லுடன் மீளாத நித்திரையில் ஆழ்ந்து விட்டாள். புவனா அன்று அருமைத் தந்தையை இழந்தாள், இன்று தாயையும் இழந்துவிட்டாள்.

காலம் வளர்ந்து சென்றது. ஒரு நாள் சாயங்காலம் வீடு திரும்பிய மூர்த்தி, புவனா கிணற்றடியில் உட்கார்ந்திருப்பதைக் கண்டான். "புவனா! எத்தனை நாட்களுக்கு இப்படி என்னை வாட்டி வதைக்கப் போகிறாய்? கல்யாணமே செய்து கொள்வதில்லை என்று வைராக்கியமாக இருந்தேன். வந்த அன்றைக்கே என் வைராக்கியத்தைப் பொடிப் பொடி ஆக்கிவிட்டாய். இத்தனை நாட்களும் பக்கத்திலிருந்து கொண்டே கிட்ட நெருங்க விடாத நெருப்புக் கொழுந்துபோல் இருக்கிறாய்! உன் தாயார் இருந்தபொழுதே நம் கல்யாணம் முடிந்திருக்க வேணும். இப்பொழுதாவது உன் பவளவாய் திறந்து கல்யாணத்துக்கு உன்னுடைய சம்மதத்தைக் கொடு!" என்றான்.

சடாரென்று புவனா எழுந்தாள். "இந்தக் கல்யாணத்தில் எனக்கு விருப்பமில்லை. என்னைத் தொந்தரவு செய்ய வேண்டாம்" என்று சொல்லிவிட்டு அங்கிருந்து 'விர்'ரென்று போய்

விட்டாள். மூர்த்தியின் காதில் யாரோ நாராசத்தைக் காய்ச்சி ஊற்றினார்கள். தலையில் ஆயிரம் அணுகுண்டுகள் வெடித்துச் சிதறின. வானமும் வையமும் ஒரே சுழலாக வேகமாகச் சுழன்றன.

அதன்பிறகு நாலைந்து நாட்கள் மூர்த்தி பைத்தியக்காரன் போல் இருந்தான். புவனாவின்மேல் கொண்ட அன்புக் கொடியை அவ்வளவு சுலபத்தில் வேரோடு கெல்லி எறிய முடியவில்லை. தாயார் திடீரென்று இறந்து போனதால் ஒருவேளை மனம் வெறுத்து இப்படிப் பேசியிருக்கலாம் என்று எண்ணினான்.

ஒருநாள் இரவு புவனா தன் அறையில் உட்கார்ந்திருந்தாள். திடீரென்று அறைக் கதவு திறந்தது. வெறிகொண்ட தோற்றத்துடன் மூர்த்தி உள்ளே வந்தான். அவன் கிராப்புத் தலைமயிர் வாரப் படாமல் கலைந்து கிடந்தது. கண்கள் இரண்டும் குடிகாரன் கண்கள்போல் சிவந்திருந்தன. அமைதியும் அன்பும் ததும்பும் முகம் பயங்கரமாக மாறியிருந்தது. புவனா அவன் தோற்றத்தைக் கண்டு பயந்தாள். ''புவனா! ஒரே வார்த்தையில் பதில் சொல். என்னைக் கல்யாணம் செய்து கொள்வாயா மாட்டாயா?'' என்று உறுமினான். புவனாவும் கோபமாக ''உங்களை மணக்கமுடியாது என்று முதலிலேயே சொல்லி விட்டேனே'' என்றாள். அடிபட்ட வேங்கை போல் சீறினான் மூர்த்தி. ''என்ன சொன்னாய்? அடி சண்டாளி! அப்பனை இழந்து அனாதையாகத் தவித்த உன்னை ஆதரித்து ராணி மாதிரி வைத்திருந்தேன்! பொன்னும் பொருளும் வாங்கிக் குவித்தேன். என் இருதயத்தையே உனக்கு அர்ப்பணித்தேன். நன்றி கெட்டவளே! முடியாதென்று சொல்கிறாய். இதோ என் காலில் விழுந்து, 'அத்தான்! என்னைக் கல்யாணம் செய்து கொள்ளுங்கள்' என்று கதறும்படி செய்கிறேன், பார்'' என்று பயங்கரமாகக் கூறிக்கொண்டு அவள் கையைப் பிடித்து வெறியுடன் தன் பக்கமாக இழுத்தான்.

''ஐயோ!'' என்று கதறிக்கொண்டு அவன் பிடியிலிருந்து திமிறிய புவனா வெளியில் பாய்ந்தாள். அதே சமயம் கீழே விரித்திருந்த கம்பளம் காலில் சிக்கவே நிலை தடுமாறிக் கீழே விழுந்து விட்டாள். விழும்போது அருகிலிருந்த சோபாவின் முனை மண்டையில் தாக்கிவிட்டது. புவனா ரத்த வெள்ளத்தில் மிதந்தாள்.

அடுத்த க்ஷணம் மூர்த்தியைப் பிடித்திருந்த மிருகவெறி சடாரென்று மறைந்தது. ''ஐயோ! நான் என்ன காரியம் செய்து விட்டேன்?'' என்று கூவிக்கொண்டு ரத்த வெள்ளத்தில் கிடந்த புவனாவைக் குழந்தையைப் போல் வாரி யெடுத்துத் தூக்கினான். அவன் கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் வழிந்தது.

ஒரு மாதம் கழிந்தது. இந்த ஒருமாதமும் புவனா மயக்கமும் விழிப்புமான நிலையில் கிடந்தாள். மூர்த்தி தான் செய்த செயலுக்காக வருந்தினான். பணத்தைப் பணமென்று பாராமல் பெரிய டாக்டரை அழைத்து

## மறைவு



என். வி. பாஷ்யம் ரெட்டியார்

கடலூர் நகரசபை அங்கத்தினரும் முன்னாள் தலைவருமான ஸ்ரீ என். வி. பாஷ்யம் ரெட்டியார் தமது 56வது வயதில் 18 - 4 - 61 அன்று மாலை மஞ்சக்குப்பம் தமது இல்லத்தில் காலமானார். அவர் சுமார் 22 ஆண்டுகள் தொடர்ந்து நகரசபை அங்கத்தினராயும், இருமுறை நகர சபைத் தலைவராகவும் பணியாற்றியுள்ளார். அண்ணாமலை சர்வகலா சாலை செனெட் சபையில் அங்கத்தினராயும் இருந்தார். அவர் மிகுந்த தெய்வ பக்தியும், தர்ம சிந்தையும் உள்ளவர். அன்னாரால் சமீபத்தில் மஞ்சக்குப்பம் ஸ்ரீ செல்வ விநாயகர் கோயில் திருப்பணி செய்யப்பட்டுக் கும்பாபிஷேகமும் நடைபெற்றது. அவரது அன்பு மகன் பா. ராதா கிருஷ்ணன், அன்பு மகள் ருக்மணி ஆகியோரால் பிரகசிக்கப்பட்டது.



"ஏண்டா! பிளேடிலே கையை வெட்டிண்டிருக்கியே? வீட்டிலே பஞ்சு கூட இல்லையே?"

"இதோ இருக்கு, அப்பா! சோபாவைக் கிழிக்கிறபோதுதானே கையை வெட்டிண்டேன்!"

வந்து வைத்தியம் செய்வித்தான். புவனா பூரண குணமடைந்தாள்....

நடு இரவு புவனா மெதுவாக எழுந்து வாசலுக்கு வந்தாள். வாசல் அறையில் மூர்த்தி அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தான். அவனையே பார்த்துக் கொண்டு சற்று நேரம் நின்றாள். மூர்த்தி இந்த ஒரு மாதத்தில் மிகவும் மெலிந்து போய் விட்டிருந்தான். "பாவம், என்னால் அவருக்கு எவ்வளவு கவலை?" என்று எண்ணினாள். ஓசைப்படாமல் வாசல் கதவைத் திறந்து கொண்டு வீதியில் இறங்கினாள். நடு இரவில் தன்னந்தனியளாகப் புறப்பட்டு விட்டாள். புவனா போய்க் கொண்டே இருந்தாள். குளிர்ந்த காற்று உடலைச் சிலிர்க்கச் செய்தது. ஊர் முழுதும் ஆழ்ந்த துயிலில் மூழ்கி யிருந்தது. யாரோ ஒரு குடிகாரன் குடி போதையில் உளறிக் கொண்டு ரோட்டில் வந்து கொண்டிருந்தான். ஒரு பெண் பிள்ளை நட்டநடுச் சாமத்தில் தனியாகப் போவதைக் கண்டதும் அவனுக்குக் குஷி பிறந்துவிட்டது. அவளை நெருங்கி வந்தான். புவனாவுக்குப் பயத்தால் உடம்பு வெடவெடவென்று நடுங்கியது. தன் உடம்பில் உள்ள சக்தி யாவையும் சேர்த்து அந்தக் குடிகாரனிடமிருந்து தப்ப நினைத்து ஓட்டம் பிடித்தாள். எப்பொழுதும் ஓடுகிறவர்களைக் கண்டால் "துரத்துகிறவர்களுக்குக் குஷிதானே? குடிகாரனும் அவளைத் துரத்திக்கொண்டு ஓடினான்.

அதே சமயத்தில் அந்த வழியாக ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டர் தம் வேலை முடிந்து சைக்கிளில் வந்து கொண்டிருந்தார். பெண் ஒருத்தி ஓடி வருவதைக் கண்டதும் அவர் சைக்கிளை நிறுத்தினார். புவனா அவரருகில் ஓடிச் சென்று "ஐயா! என்னைக் காப்பாற்றுங்கள். முரடன் ஒருவன் என்னைத் துரத்துகிறான்" என்று பதறிக் கொண்டே கூறினாள்.

"பயப்படாதே, அம்மா! யார் அந்தப் பயல்?" என்று கேட்டுக்கொண்டே தன் பெல்ட்டை உருவினார் இன்ஸ்பெக்டர்.

குடிகாரனுக்கென்ன பைத்தியமா போலீஸிடம் உதை வாங்கிச் சாக? அவன் எப்பொழுதோ வேறு தெருவுக்குள் நுழைந்து கம்பி நீட்டிவிட்டான்.

இன்ஸ்பெக்டர் கொஞ்ச தூரம் அவனைத் தேடிப் பார்த்துவிட்டு, "சரி நீ என்னுடன் வா அம்மா! இரவு என் வீட்டில் தங்கி நாளைக் காலை நீ போகவேண்டிய இடத்துக்கு உன்னைப் பத்திரமாக அனுப்பி வைக்கிறேன்" என்று சொல்லி அவளை அழைத்துக் கொண்டு போனார். வீடு சென்றதும் அவளை வெளிச்சத்தில் பார்த்த இன்ஸ்பெக்டர் திடுக்கிட்டுப் போனார். "ஏன் அம்மா! இப்படி இளம் பெண்ணான நீ துணையில்லாமல் நடுச்சாமத்தில் வீட்டை விட்டு வெளிவரலாமா? எதற்காகப் புறப்பட்டாய்? என்னிடம் எல்லாவற்றையும் சொல். என்னால் முடிந்த உதவியைச் செய்கிறேன்" என்று கூறினார்.

"ஐயா! எனக்குச் சொந்த ஊர் யாழ்ப்பாணம். தந்தை முன்பே இறந்து போய் விட்டார். நானும் என் அம்மாவும் மட்டக்களப்பில் உள்ள ஒரு சொந்தக்காரர் வீட்டில் தங்கி யிருந்தோம். என் அம்மாவும் திடீரென்று இறந்துபோகவே அந்த வீட்டில் வேறு பெண் பிள்ளைகள் இல்லாததாலும் அந்த வீட்டுக்காரன் ஒரு கொடியவனானதாலும் என்னைத் துன்புறுத்தினான். அதனால் அங்கிருந்து அவனுக்குத் தெரியாமல் புறப்பட்டு விட்டேன். ஐயா உங்களை என் உடன் பிறந்த அண்ணனைப்போல் நினைத்துக் கேட்கிறேன். தயவுசெய்து என்னை நாளையே யாழ்ப்பாணம் போகும் ரயிலில் பெண்கள் பெட்டியில் ஏற்றி விடுங்கள். என்னுடைய சொந்தக்காரரிடம் போய்ச் சேர்ந்து விடுவேன்." என்று பரிதாபமாகக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டாள்.

"அழாதே அம்மா! நீ கேட்டபடி செய்கிறேன். இன்று இரவு ஏழு மணிக்கு வந்து உன்னை யாழ்ப்பாணத்துக்கு ரயிலேற்றி விடுகிறேன். அதுவரைக்கும் நீ இங்கேயே இருக்கலாம். உனக்கு வேண்டியவைகளை இங்குள்ள வேலைக்காரி செய்து தருவாள்" என்று சொல்லிப் போய் விட்டார்.

அடுத்த நாள் இரவு மணி ஏழாயிற்று, எட்டாயிற்று, ஒன்பது, பத்து, பதினொன்றுமாயிற்று. "ஏன் இன்ஸ்பெக்டர் வரவில்லை? யாழ்ப்பாண ரயில் எப்பொழுதோ சென்றிருக்குமே?" புவனாவுக்குத் திகில் பிடித்துக் கொண்டது. ஏதோ ஒரு கெடுதல் நடக்கப் போகிறதென்பது அவள் உள் உணர்ச்சிக்குத் தோன்றியது. உடம்பு நடுங்கியது. கண்ணை இருட்டிக் கொண்டு வந்தது.

மணி பன்னிரண்டாயிற்று. மெதுவாகப் புவனாவின் அறைக் கதவைத்திறந்து கொண்டு இன்ஸ்பெக்டர் உள்ளே வந்தார். அவர் இப்பொழுது நல்லஉடைகள் அணிந்து அலங்காரம் செய்துகொண்டிருந்தார். அவர் தரித்திருந்த வாசனையின் நறுமணம் அறை எங்கும் பரவியது. கதவைச் சாத்திவிட்டு அங்கிருந்த சோபாவில் உட்கார்ந்துகொண்டு புவனாவைப் பார்த்து உல்லாசமாக நகைத்தார். 'ஏன் புவனா! இப்படி நடுங்குகிறாய்? யாழ்ப்பாணம்

போய் நீ சிரமப்பட வேண்டாம். நீயோ மணமாகாத பெண். இப்படியிருந்தால் உனக்கு எப்பொழுதும் ஆபத்து. என்னுடைய விருப்பத்துக்கு இணங்கினையானால் உன்னை ராஜாத்தி மாதிரி ஒரு குறையுமில்லாமல் வைத்துக் கொள்வேன்'' என்றார்.

புவனாவின் உடலெல்லாம் அந்த வார்த்தையைக் கேட்டதும் பற்றி எரிவதுபோல் இருந்தது. எங்குபோனாலும் இந்த ஆபத்தா? பூமியே பிளந்து தன்னை விழுங்கி விடாதா? கண்ணகிமாதிரி சக்தி இருந்தால் இப்படிப் பேசிய இந்தக் கயவனை எரித்துச் சாம்பலாக்கி விடமாட்டாளா? பாவம் என்ன செய்வாள்?

''ஐயா! நீதியையும் நேர்மையையும் நிலைநிறுத்த வேண்டியவர், பேதைப்பெண்களின் மானத்தையும் உடைமையையும் பாதுகாக்க வேண்டிய நீங்கள் இப்படிப் பேசலாமா? உங்களுக்குக் கோடி புண்ணியம் உண்டு என்னை வெளியே அனுப்பி விடுங்கள்'' என்று கண்ணீர் பெருக வேண்டிக் கொண்டாள்.

காமவெறி தலைக்கேறியவன் காதில் இவை ஏறுமா? ''இந்த நீலிக் கண்ணீருக்கெல்லாம் நான் பயப்பட மாட்டேன். நீ இனிமேல் என்னுடையவள்தான்'' என்று சொல்லிக் கொண்டே அவளை நெருங்கினார்.

''அட சண்டாளா பாவி! இந்த அநியாயத்தைக் கேட்பாரில்லையா?'' என்று கதறிக் கொண்டு வெளியில் ஓடினாள்.

புவனா கண் விழித்ததும் மூர்த்தியின் வீட்டில் தன் அறையில் படுத்திருப்பதையும் பக்கத்தில் மூர்த்தி நின்று, ''புவனா! உனக்கு இப்பொழுது உடம்பு எப்படி இருக்கிறது?'' என்று கேட்பதையும் கண்டாள்.

அப்படியானால் நடந்தவைகள் எல்லாம் கனவுதானா? கனவு போலவும் இருக்கிறது; உண்மை போலவும் இருக்கிறதே. மூர்த்தி கேட்டான்: ''புவனா! எதற்காக நடு இரவில் வீட்டை விட்டுப் புறப்பட்டாய்? தெய்வந்தான் என்னைத் தக்க தருணத்தில் அந்த வழியாக வரச் செய்தது போலும். இங்கிருந்து எட்டு மைல்களுக்கு அப்பால் உள்ள ஒரு வீட்டு வாசலில் நீ மூர்ச்சையாகிக் கிடந்தாய்? காரில் அந்த வழியாக வந்த நான் உன்னை எடுத்து இங்கு கொண்டு வந்தேன்.

''புவனா! உன்னிடம் மிகவும் கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுகிறேன். தயவுசெய்து வீட்டை விட்டு வெளியேறும் எண்ணத்தை விட்டு விடு. இனிமேல் உன்னிடம் தகாத விதமாக நடந்து கொள்ளவோ, என்னைக் கல்யாணம் செய்து கொள்ளும்படி வற்புறுத்தவோ மாட்டேன். இனி நீ என் தங்கை. உனக்குப் பிடித்த கணவனைத் தேடி உங்கள் இருவருக்கும் கல்யாணம் செய்து வைப்பதுதான் என் லட்சியம்'' என்று மிகவும் கனிவாகக் கூறினான் மூர்த்தி.

புவனாவின் கண்களிலிருந்து கண்ணீர் வெள்ளம்போல் பொழிந்தது. இத்தனை காலமும் அவளை மூடியிருந்த மாயத்திரை படீரென்று அறுந்தது. வெறும் கற்பனையிலிருந்து அவளைப் பேயாக ஆட்டிய மாயப் புருஷன் மறைந்தான். அந்த இடமெல்லாம் மூர்த்தி நிறைந்தான். சட்டென்று புவனா எழுந்து மூர்த்தியின் பாதங்களில் விழுந்தாள். ''அத்தான்! இவ்வளவு உத்தம புருஷனை உங்களை வேண்டாமென்று உதறித் தள்ளிவிட்டு, கானல் நீரை நம்பி ஓடும் மானைப் போல் நடந்து கொண்டேனே. மல்லிகை மலரினும் மிருதுவான உங்கள் உள்ளத்தைப் புண்படுத்தியதை மறந்துவிடுங்கள். என்னை மனைவியாக ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்று கண்ணீருடன் கெஞ்சினாள்.

இன்ஸ்பெக்டர் செல்லத் துரையைப் பற்றியும் ஒரு வார்த்தை இப்பொழுது சொல்லி விட்டால்தான் நல்லது.

கல்யாணம் முடிந்து நாலைந்து நாட்களுக்குப் பின் ஒருநாள் இன்ஸ்பெக்டர் செல்லத்துரை வீட்டில் மூர்த்தியும் இன்ஸ்பெக்டரும் பேசிக் கொண்டிருந்தார்கள். மூர்த்தி சொன்னான்: ''ஐயா! உங்கள் பேருதவிக்கு எப்படி நன்றி தெரிவிப்பதென்றே தெரியவில்லை.''

''போதும் ஐயா! நீர் நன்றி ஒன்றும் எனக்குத் தெரிவிக்க வேண்டாம். பாலிய நண்பனுக்கு இந்தச் சிறு உதவிகூடச் செய்யக்கூடாதா? ஆனால் அந்தப் பெண்தான் என்னை எப்படிப்பட்ட கிராதகன் என்று எண்ணியிருப்பாள்? போகட்டும். நீங்கள் இருவரும் நல்வாழ்வு வாழ்ந்தாலே போதும்'' என்றார் அந்த நல்ல நண்பர் இன்ஸ்பெக்டர்.

உண்மையில் நடந்தது இதுதான்! மூர்த்தியும் செல்லத்துரையும் பாலிய நண்பர்கள். புவனாவையும் அவர் அறிவார். நடு இரவில் வழியில் அவளைக் கண்டதும் அவள் யார் என்று அறிந்து கொண்டார். மூர்த்தியிடம் போய் விவரங்களைச் சொல்லி இருவரும் சேர்ந்து ஒரு நாடகம் நடிக்கத் திட்டமிட்டார்கள். அப்படியாவது புவனாவின் மனம் மாறுமா என்று பார்க்க. மூர்த்தியின் வாழ்வை வளம்பெறச் செய்ய அவன் நண்பர் செல்லத்துரை கெட்டவனாகத் தோன்றித் தம்மீது பழியை ஏற்றுக் கொண்டார். அவர்கள் முயற்சி வெற்றி பெற்றது. மூர்த்தி புவனாவின் பொன் கரம் பற்றினான்.

### ப(ா)டாத பா(ட்)டு



பாடகர்: நான் கொஞ்ச நாள் பாடக் கூடாதுன்னு டாக்டர் சொல்லியிருக்கிறார்!

நண்பர்: எங்கே கேட்டார் உங்க பாட்டை அவர்?

இப்பொழுது நடைபெறுகிறது

சென்னை

## சித்ரா, மஹாராணி, சயானி

மற்றும் தென்னாடெங்கும்



பஞ்சாயத்து சபைகள்

# காங்கிரஸ் கமிட்டிகளா?

கோவை அ. அய்யாமுத்து

கேரளத்தில் கம்யூனிஸ்டு ஆட்சி நடைபெற்றபோது, அவர்கள் மீது பற்பலவிதமான குற்றங்கள் சுமத்தப்பட்டன.

கம்யூனிஸ்டுக் கட்சி தனது நலத்தை வலுப்படுத்திக் கொள்ளும் எண்ணத்தோடு சர்க்கார் காரியாலயங்களிலும், சர்க்கார் கமிட்டிகளிலும், சர்க்கார் ஆதரவு பெற்று நடைபெறும் கூட்டுறவுச் சங்கங்கள், தொழில்கள் சமுதாய வளர்ச்சித் திட்டத் துறைகள் போன்ற பற்பல இடங்களிலும் கட்சி நபர்களை நுழைத்து வந்ததாக ஒரு குற்றச்சாட்டு.

மற்றொன்று, கம்யூனிஸ்டுக் கட்சிக் காரியாலயங்களுக்கு வரும்படி பொது மக்களுக்கும், பொது ஸ்தாபனங்களைச் சேர்ந்தவர்களுக்கும் "சம்மன்கள்" அனுப்பி, வரவழைத்து இன்னது செய்யவேண்டும், இப்படி அப்படிச் செய்ய வேண்டும் என்று தாக்கீது வழங்கினார்கள் என்பதாகும்.

இங்கே தமிழகத்தில் ஆட்சி செலுத்திவரும் காங்கிரஸ் எசமானர்கள், கேரளத்தில் கம்யூனிஸ்டுகள் செய்ததாகச் சொல்லப்படும் அட்டூழியங்களைப் பெரும் அளவில் செய்து வருகிறார்கள் என்பதற்கு இதோ ஓர் எடுத்துக்காட்டு.

சி. எ. அய்யாமுத்துக் கவுண்டர்
பஞ்சாயத்துத் தலைவர்
கோடங்கிபாளையம்.

அன்புடையீர்,

வணக்கம், விஷயம். நாளது 29—3—61 புதன்கிழமை மாலை 4 மணிக்குக் கிணத்துக்கடவு ஜில்லாபோர்டு சத்திரத்தில் வரப்போகும் கிணத்துக்கடவு வட்டாரம் கவுன்சில் தேர்தலைப் பற்றிப் பஞ்சாயத்துத் தலைவர்கள் முடிவுசெய்ய இருப்பதால், அது சமயம் திரு என். மகாலிங்கம் எம். எல். ஏ. அவர்களும் கலந்து கொள்வார்கள். தாங்கள் தவறாமல் வந்து ஒரு நல்ல "முடிவாக்க" வேண்டுகிறோம்.

எஸ். வேலுசாமி செட்டியார்,
27—3—61 காரியதரிசி.
பொள்ளாச்சி பொ. தா. காங்கிரஸ் கமிட்டி.

கிணத்துக்கடவு வட்டாரத்திலுள்ள 32 பஞ்சாயத்துத் தலைவர்கள் சேர்ந்து ஒரு பஞ்சாயத்து யூனியன் தலைவரைத் தேர்ந்தெடுக்க வேண்டிய காரியத்தில் பொள்ளாச்சிதாலூகா காங்கிரஸ் கமிட்டியின் தலையீடு எதற்கு?

பஞ்சாயத்துத் தலைவர்களுக்குச் சுற்றறிக்கை அனுப்பி, அவர்களை ஓர் இடத்தில் சேர்த்து, முடிவுகாண இக்காங்கிரஸ் கமிட்டிக்கு என்ன அதிகாரம் யார் கொடுத்துள்ளார்கள்?

திரு என். மகாலிங்கம் எம். எல். ஏ. என்பவர் யார்? பஞ்சாயத்து யூனியன் தேர்தலில் முடிவு காணப் பஞ்சாயத்துத் தலைவர்களைக் கூட்டவும் பேசவும், எந்த அதிகாரம் அல்லது ஆதாரத்தின்மீது தலையிடத்துணிந்தார் இவர்?

பஞ்சாயத்துத் தலைவர்களில் காங்கிரசைச் சேர்ந்த அல்லது காங்கிரஸ் சார்புள்ள தலைவர்களைக் கூப்பிட்டிருந்தாலும் குற்றமில்லை. ஆனால் எல்லாத் தலைவர்களையும் அழைக்கத் துணிந்ததில் எத்தகைய பணச் செருக்கும், பதவி இறுமாப்பும் பக்கபலமாய் இருந்திருக்க வேண்டும்?

நாளை, பஞ்சாயத்து யூனியன்களில் இவர்கள் என்னென்ன செய்யத் துணிவு கொள்ள மாட்டார்கள்?

பஞ்சாயத்துத் தலைவர்களைப் பிடிக்க இது வரையில் நடைபெற்றுள்ள முயற்சிகள்:

1. ஜில்லாவாரியாக உள்ள பஞ்சாயத்துத்தலைவர்களை ஜில்லா தலைநகருக்கு வரவழைத்து, ஊர்வலம், கூட்டம், கண்காட்சி, கூத்து முதலியவை நடத்தினார்கள். இக்கூத்துக்கு ஏழைகள் வரிப் பணத்திலிருந்தும், பொது மக்களிடமிருந்து 'நன்கொடை லஞ்சமாகவும்' பெற்ற பணம் பல லட்சக் கணக்கில் விரயமாக்கப்பட்டது.

2. ஒவ்வொரு பஞ்சாயத்திலும் பஞ்சாயத்து விழாக் கொண்டாடும்படி ஏற்பாடு செய்து அதிலே காங்கிரஸ் கட்சிப் 'பிரமுகர்கள்' கலந்து கொண்டார்கள். இவ்வைபவத்துக்கும் பல்லாயிரக்கணக்கில் செலவு.

3. பஞ்சாயத்துத் தலைவர்களை விசேஷ பஸ்கள் மூலம் மாநிலத்தின் பல பாகங்களிலிருந்தும் சென்னைக்கு வரவழைத்து, அவர்களைக் காங்கிரஸ் மந்திரிகளுக்கும் பிறருக்கும் "அறிமுகம்" செய்து வைத்தார்கள். இதற்கும் பல லட்சங்கள் செலவாகி யிருக்கும்.

4. சென்னை மாநிலப் பஞ்சாயத்து யூனியன் என்றொரு ஸ்தாபனத்தைச் சட்டத்துக்குப் புறம்பாக Semi Official) சிருஷ்டித்து, அந்த யூனியனுக்குக் காங்கிரஸின் போக்கிஷதாரரான ராஜாராம் நாயுடுவைத் தலைவராக முடிசூட்டியுள்ளார்கள்.

5. மேற்படியார் ஒவ்வொரு தாலூகாவுக்கும் சென்று, பஞ்சாயத்துத் தலைவர்களின் கூட்டங்கள் சேர்த்துக் "தாலூகா பஞ்சாயத்து யூனியன்" அமைத்து, அதற்குக் காங்கிரஸ்காரரைத் தலைவராகத் 'தேர்ந்தெடுத்து' வைத்திருக்கிறார்கள்.

6. இப்போது "சட்டரீதியாக" அமைக்கவிருக்கும் வட்டாரப் பஞ்சாயத்து யூனியன்களுக்குத் தாலூகா காங்கிரஸ் கமிட்டிகளையே வழிகாட்டிகளாக்கப் பலவந்தம் நடக்கிறது.

7. பஞ்சாயத்து சம்பந்தமான விழாக்களிலும், வட்டார வளர்ச்சித் திட்ட சம்பந்தமான கூட்டங்களிலும் கலந்து கொள்ளக்காங்கிரஸ் 'பிரமுகர்களே' அழைக்கப்படுகிறார்கள்.

வட்டார வளர்ச்சி அதிகாரிகள் பொது ஜனங்களிடமிருந்து நன்கொடை வசூலித்துச்

செலவு செய்யலாமென்று அரசாங்கம் ''லைசென்ஸ்'' கொடுத்திருக்கிறது.

இதனை நிரூபிக்க இதோ ஒரு சம்பவம் :

இணைத்துக்கடவு பஞ்சாயத்து யூனியன் விழாவினை 13 — 4 — 61 கொண்டாடுவது சம்பந்தமாக ஆலோசிக்கப் பொள்ளாச்சி சப்-கலெக்டர் தலைமையில் ஒரு கூட்டம் 5-4-61 காலை 9 மணியளவில் நடைபெறு மென ஓர் அறிக்கை வந்தது.

அதன்படி இணைத்துக்கடவு வட்டார வளர்ச்சி அலுவலகத்துக்குப் போயிருந்தேன்.

32 பஞ்சாயத்துத் தலைவர்களில் பகுதிப் பேர்கள் கூடக் கூட்டத்துக்கு வரவில்லை. சப் - கலெக்டரும் வரவில்லை. சுற்றறிக்கை அனுப்பி யிருந்த பி. டி. ஓ.வும் இருக்கவில்லை.

கூட்டுறவு இலாகா அதிகாரியும், பஞ்சா யத்து விஸ்தரிப்பு அதிகாரியும் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

விழா சம்பந்தமாக அரசாங்கத்திடமிருந்து வந்திருந்த உத்தரவைப் படித்தனர். அந்த உத்தரவில் கூறப்பட்டிருந்ததாவது :

1. விழா 13-4-61 காலை 9 மணி அளவில் ஆரம்பிக்கப்பட வேண்டும்.

2. ஆனால் அதற்கு முந்தின நாளே பஞ்சா யத்துத் தலைவர்கள் வந்திருந்து, அடுத்த நாள் நடைபெறும் கூட்டத்தில் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதற்கு ஒத்திகை நடத்த வேண்டும்.

3. இந்தத் தாலுக்காவில் உள்ள எல்லாப் பஞ்சாயத்துத் தலைவர்களுக்கும் பிரமுகர்களுக் கும் அச்சிட்டஅழைப்புகள் அனுப்பவேண்டும்.

4. இதுவரை ஜில்லா போர்டால் நிர்வ கித்து வரப்பட்ட அதிகாரங்களையும் தஸ்தா வேஜுகளையும் ஜில்லா கலெக்டர் யூனிய னிடம் ஒப்புவிப்பார்.

5. தஸ்தாவேஜுகளின் பட்டியலை வைத் துக் கொடுக்க ஒரு தட்டம் வாங்க வேண்டும்.

6. விழா சம்பந்தமாக ஒரு பெரிய போர்டு எழுதித் தொங்கவிட வேண்டும்.

7. அன்று மாலை ஏழு மணிக்கு முதன் மந்திரி காமராஜர் ரேடியோவில் பேசுவதைப் பஞ்சாயத்துத் தலைவர்கள் கேட்பதற்கு வசதி செய்ய வேண்டும்.

8. அதுவரையில் அவர்கள் காலம் விரய மாகாமல் இருப்பதற்கு ஏதாவது கலை நிகழ்ச்சிகள் நடத்த வேண்டும்.

9. எல்லாருக்கும் தங்க இடம், முன்னிரவு போஜனம், காலைச் சிற்றுண்டி, பகல் உணவு, மாலைச் சிற்றுண்டி, இரவு போஜனம், பானங்கள் வழங்க ஏற்பாடுசெய்யவேண்டும்.

10. மேற்கண்ட வைபவச் செலவுகளின் நிமித்தம் அரசாங்கம் 250 ரூபாய் இட்ட வளர்ச்சி நிதியிலிருந்து அனுமதித்திருக்கிறது. மேற்கொண்டு செலவாகும் தொகை யைப் பொதுமக்களிடமிருந்து வசூலித் துக் கொள்ளலாம்.

மேற்கண்ட அறிக்கையைப் படித்து விட்டு, எல்லாப் பஞ்சாயத்துத் தலைவர்களும் நன்கொடை வழங்கவேண்டுமென்று அதிகாரி விண்ணப்பம் செய்து கொண்டார்.

நான் சொன்னதாவது :

''ஏழை எளியவர்களிடமிருந்து நாலணா, ஐந்தணா கூட வீட்டு வரியாக வசூல் செய் கிறோம். அந்த நாலணாவை வசூலிக்கத் தண்டல்காரர் தலையாரிகள் ஏழு நடை நடக்க வேண்டியிருக்கிறது. எனவே, நீங்கள் இம் மாதிரி ஊதாரிச் செலவுகள் செய்யக் கூடாது.

பஞ்சாயத்துத் தலைவர்கள் கௌரவமாக உத்தியோகம் பார்ப்பவர்கள். அவர்களிடம் நன்கொடைகேட்பது தண்டம் வேறு, முட்டுக் கோல் வேறு என்றாகி விடும். நீங்கள் இம் மாதிரி அவர்களிடம் 'தண்டல் வரி வசூல்' செய்து கொண்டேயிருந்தால் யூனியன் கூட் டத்துக்கு எவருமே வரமாட்டார்கள்.

ஒத்திகை, எதற்கு ஒத்திகை! எனவே முன்னாள் யாரும் வரத் தேவையில்லை. எனவே அன்று உணவும், அடுத்த நாள் காலைச் சிற்றுண்டியும் தேவையில்லை.

மறு நாள் விழா முடிந்ததும் கலைந்துவிட லாம். முதன் மந்திரி பேசுவதைக் கேட்பதற் காக ஒரு நாளெல்லாம் இங்கு காத்திருப்பது அனாவசியம். அவர் என்ன பேசினார் என் பதை ரேடியோ வசதியில்லாதவர்கள் பத் திரிகைகளைப் பார்த்து அறிவார்கள்.

கலை விருந்தும் தேவையில்லை.

சர்க்கார் அனுமதித்துள்ள 250 ரூபாய்க் குள் சாப்பாடு உள்பட எல்லாச் செலவையும் செய்யுங்கள். ஆடம்பரமான பகலுணவு வேண்டாம். கம்பஞ் சாதமும் மோரும் கரைத்துச் சாப்பிட்டால் கூட இவ் வெய்யில் காலத்தில் தேவாமிர்தமாய் இருக்கும்.''

மந்திரி வருகிறார், கலெக்டர் வருகிறார், பெரியமனுஷர்கள் வருவார்கள்என்றெல்லாம் சிலர் இடைமறித்தார்கள். 'பஞ்சாயத்து யூனியன் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படும் கனவான் அவர்களைக் கவனித்து உபசரிக் கட்டும். அதிகாரிகளால் பொதுஜன வசூல் கூடாது. அது கெட்ட வழக்கம். பல ஊழல்களுக்கு வழியேற்படும்' என்று சொல்லி முடித்தேன்.

காங்கிரஸ் கட்சியும் அரசாங்கமும் ஒன்றேதான் என்று பஞ்சாயத்துச் சபைகள் நம்பச் செய்யும் அளவுக்கு என்னென்ன செய்ய வேண்டுமோ அவ்வளவையும் ஆளுங் கட்சியார் செய்து வருகிறார்கள்.

இந்தச் சதியில் அரசாங்க உத்தியோகஸ் தர்கள் தெரிந்தோ தெரியாமலோ இரையாகி வருகிறார்கள்.

இச் சூழ்நிலை '' நன்குணர்ந்து விழிப்புடன் இராவிட்டால் இந்நாட்டில் ஜனநாயகம் பாதாளத்தில் புதைக்கப்படும்.

[பின் குறிப்பு: 'வட்டார வளர்ச்சி அலுவல கத்துக்குச் சர்க்காரின் அனுமதியின்றிக் காம் பவுண்டு சுவர் கட்ட ஆரம்பித்திருக்கிறோம். அதற்கும் நீங்கள் நன்கொடை அளிக்க வேண்டு'மென அதிகாரி கேட்டார். 'யூனியன் ஸ்தாபிதமான பிறகு, தேர்ந்தெடுக்கப்படும் தலைவரின் முன் இதைச் சொல்லுங்கள். இக் கூட்டத்தில் அதைப் பற்றிப் பேசா தீர்கள்' என்று தடுத்தேன்.

கடன் வாங்குபவர்கள், உரம் வாங்குபவர் கள், கட்டடங்கள் கட்டும் ஸ்பான்ஸர்கள், கண்டிராக்டர்கள் அல்லாமல் வேறு யார் நன்கொடை கொடுப்பார்கள்?]

"எதிர்பாராமல் வரும் விருந்தாளிகளுக்கு
என்றல்லவா இந்த பாட்டில்

# கிஸான் ஸ்க்வாஷ்

வைத்திருந்தேன்!"

முன்யோசனை மிகுந்த மனைவிமார்கள் எப்பொழுதும் எதிர்பாராமல் வரும் விருந்தினருக்காக தனியாக ஒரு பாட்டில் கிஸான் ஸ்க்வாஷை வைத்திருப்பார்கள். கனிந்த பழங்களிலிருந்து தயாரிக்கப்பட்ட இப்பானங்கள் விட்டமின் சத்துக்கள் கொண்டவை. வருஷம் முழுவதும் அருந்துவதற்கு ஏற்றவை. வீட்டில் எப்பொழுதும் கிஸான் ஸ்க்வாஷ் வைத்திருங்கள். ஆரெஞ்சு, லெமன் மற்றும் இதர ஆறு வகைகளில் கிஸான் ஸ்க்வாஷ் கிடைக்கின்றன.

கிஸான் பிராடக்ட்ஸ் லிமிடெட், பெங்களூர்




JWT/KP-1314-a



# தரத்திற்கும்

# தொழில் நுணுக்கத்திற்கும்

# எழில் மிக்க பார்வைக்கும்



மாடல் P 3

**விலை ரூ. 290/-**
(எக்சைஸ் மற்றும் டர்னோவர் வரி தனி)

**6 வால்வுகள், 3 பாண்டுகள்,**
**டோன் கண்ட்ரோல், அழகிய மரக் காபினெட்.**




*தயாரிப்பவர்கள்:*

## யு. எம். எஸ். ரேடியோ பாக்டரி
**கோயமுத்தூர்.**

*அங்கீகாரம்பெற்ற விநியோகஸ்தர்கள்:—*

*மெஸர்ஸ்* ரேடியோ ஸோனிக்ஸ், எக்ஸ்பிரஸ் எஸ்டேட்ஸ், ஜெனரல் பேட்டர்ஸ் ரோட், மதராஸ்-2.
*மெஸர்ஸ்* யுனைடெட் இன்ஜினியரிங் கம்பெனி, அவினாசி ரோட், கோயமுத்தூர்.
*மெஸர்ஸ்* T. S. N. சுந்தரராஜ பாகவதர் & சன்ஸ், 154, பாரதி தெரு, பாண்டிச்சேரி.
*மெஸர்ஸ்* ரேடியோ ஸோனிக்ஸ், ரெஸிடென்ஸி ரோட், பெங்களூர்-1.
*மெஸர்ஸ்* ராஜா ரேடியோஸ், 13/223, மேற்கு மாசி தெரு, மதுரை.
*மெஸர்ஸ்* பாம்பே ரேடியோ சர்வீஸ், காம்ப் பஜார், கண்ணனூர்.
*மெஸர்ஸ்* மாடர்ன் ரேடியோ ஹவுஸ், 290, லாமிங்டன் ரோடு, பம்பாய்-7.
*மெஸர்ஸ்* M. L. ஷா பிரைவேட் லிமிடெட், 45, மோதிலால் தெரு, கல்கத்தா-13.
*மெஸர்ஸ்* தி ஈஸ்டர்ன் ரேடியோ & ஜெனரல் சப்ளை கம்பெனி, 5, கன்னாட் பிளேஸ் P. B. 15, புதுடெல்லி-1.
*மெஸர்ஸ்* மெலோடி ரேடியோஸ் 10, கவர்ன்மெண்ட் சென்ட்ரல் பிளாக், ரெஸிடென்ஸி ரோடு, ஸ்ரீநகர்.

UMS-942

# வான வெளிப் பயணம்

விஞ்ஞான உலகில் சென்ற மூன்று ஆண்டுகளில் புரட்சிகரமான சாதனைகள் உருவாகிவிட்டன. இராக்கெட் விமானத்தைக் கொண்டு செயற்கைச் சந்திரனைப் பூமியை வட்டமிடுமாறு செய்ததுமல்லாமல், இராக்கெட் விமானத்தையே சந்திர மண்டலத்துக்கு அனுப்பியுள்ளான் விஞ்ஞானி. அடுத்தபடியாகச் சந்திர மண்டலத்திற்கேயன்றி, இதர மண்டலங்களுக்கும் மனிதனே சென்று வர வகை ஏற்படலாம் என்ற நம்பிக்கை இன்று எழுந்துள்ளது.

**இதுகாறும் கதாசிரியர்களின் கற்பனையிலிருந்து வந்த வான வெளிப் பயணத்தை யூரி காகரின் வெற்றிகரமாக முடித்துக் கொண்டு திரும்பி யுள்ளார். விஞ்ஞானிகளின் அபார சாதனையைக் கண்டு உலகமே அதிசயிக்கிறது. ராக்கெட் தோன்றிய விதத்தையும் ராக்கெட் பயணம் பற்றிய பல ரசமான விஷயங்களையும் மிகவும் சுவைபட எளிய நடையில் சொல்லுகிறார் இந்த விஞ்ஞானக் கட்டுரையின் ஆசிரியர்.**

பி. சவரிமுத்து எம்.ஏ.

இந்த அரிய சாதனைக்கு அடிப்படையாக அமைந்துள்ள இராக்கெட்டின் அமைப்பை நாம் முதன் முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். இராக்கெட் இயங்குவதில் அமைந்துள்ள தத்துவம், நியூட்டனின் மூன்றாவது விதியை அடிப்படையாகக் கொண்டதாகும். ஆகவே, இந்த நியூட்டனின் மூன்றாவது விதியைக் கவனிப்போம். "ஒவ்வொரு விசைக்கும் சமமான எதிர் விசை உண்டு" என்பதே இவ் விதியாகும். இதைச் சில எடுத்துக் காட்டுகளால் விளக்கலாம். ஒருவன் தண்ணீரில் நீந்தும்போது அவன் தன் கைகளால் தண்ணீரைப் பின்னேக்கித் தள்ளுகிறான். அத் தள்ளுதலின் எதிர் விசையால் அவன் முன்னேக்கி உந்தப்படுகிறான். இரண்டு படகுகள் நீரில் மிதந்து கொண்டிருக்கின்றன. இரண்டும் அருகில் வரும்போது ஒரு படகில் உள்ள ஒருவன் மறு படகைப் பிடித்து வேகமாகத் தள்ளுகிறான். இதனால் அவன் இருக்கும் படகு எதிர்த்திசையில் அதே வேகத்தில் தள்ளப் படுவதைக் காணலாம். ஒரு குளத்தில் கால் பவுண்டு எடையுள்ள பலகை மிதந்து கொண்டிருக்கிறது. அதன் மேல் கால் பவுண்டு எடையுள்ள ஒரு தவளை உட்கார்ந்துள்ளது. தவளைக்குத் தாங்கொணுப் பசி. சுற்றுமுற்றும் பார்க்கிறது. நாலடி தூரத்தில் ஓர் ஈ வருவதைப் பார்த்து அதைத் தாவிப் பிடிக்கிறது. பலகையை நோக்கினுல் அது எதிரான திசையில் நாலடி தூரம் உதைத்துத் தள்ளப்படுவதைக் காணலாம். இதற்குக் காரணம் எதிர்விசையே. இன்னும் சில எடுத்துக்காட்டுகளும் கூறலாம்.

துப்பாக்கியைச் சுடும்போது அதிலிருந்து குண்டுகள் பாய்ந்து செல்கின்றன. எதிர்விசையால் துப்பாக்கி எதிரான திசையில் உதைத்துத் தள்ளப் படுகிறது. சிறுவன் ஒருவன் உருண்டையான பலூன் ஒன்றைவாங்கி ஊதி, அதன் கழுத்தை அழுத்திப் பிடித்துக் கொண்டிருக்கிறான். அவன் அதன் வாயைக் கீழ் நோக்கியவாறு பிடித்து அப்பிடியைச் சட்டென்று விட்டுவிட்டால் பலூன் விருட்டென்று மேலே தாவுகிறது. அது ஏன் அவ்வாறு தாவுகிறது? பலூனுக்குள் உள்ள அழுக்கம் மிகுந்த காற்று கீழ்நோக்கிப் பாய்கிறது. அதன் எதிர் விசையால் பலூன் மேல் நோக்கி உந்தப்படுகிறது. இதைப் போலவேதான் இராக்கெட்டும் இயங்குகிறது. சிறுவனின் பலூன் பத்து அல்லது பதினைந்து அடி மேலே சென்று, பின் கீழே விழுந்துவிடுகிறது. ஏன்? பலூனுக்குள்ளே அடைபட்டிருந்த அழுக்கம் மிகுந்த காற்று வெளியே வந்த பிறகு அது கீழே விழுந்து விடுகிறது. இதே பலூன் தொடர்ந்து ஆயிரக்கணக்கான மைல்கள் மேல் நோக்கிச் செல்ல வேண்டுமானுல் என்ன செய்யவேண்டும்? பலூனுக்குள்ளே அழுக்கம் மிகுந்த காற்றுத் தொடர்ந்து இருந்துவருமாறு ஓர் அமைப்பைஏற்படுத்திவிட்டால்அப்போது பலூனின் வாய் வழியாகக் காற்றுத் தொடர்ந்து கீழ் நோக்கிப் பீறிட்ட வண்ணம் இருக்குமல்லவா? அப்போது அதன் எதிர் விசையால் பலூனும் தொடர்ந்து மேல்நோக்கிச் சென்று கொண்டேயிருக்கும். இராக்கெட்டில் ஆயிரக் கணக்கான இயந்திரப் பகுதிகள் இருந்த போதிலும் அவைகளின் முக்கிய அலுவல் இதுவே.

இராக்கெட்டின் தத்துவத்தை வெகு நாட்களாகவே பல நாட்டவரும் அறிந்திருந்தார்கள். குறிப்பாகச் சீனர்களும், பாரசீகர்களும், அரேபியரும், கிரேக்கர்களும் போர்க்காலங்களில் இராணுவத்தின் பல்வேறு முகாம்களுக்குச் செய்தியனுப்பும் சாதனமாகவும், எதிரிகளைத் தாக்கும் கணைகளாகவும் பயன்படுத்தி வந்தார்கள். திப்பு சுல்தான் கூட ஆங்கிலேயர்களை எதிர்த்தபோது ராக்கெட்டுக்கணைகளைப்பயன்படுத்தியதை நாம் வரலாற்றுவாயிலாக அறிகின்றோம்.

இதன் அமைப்பு வாணவெடியின் அமைப்பைப் போன்றதே. வாணக்காரன் ஒரு குச்சியின் மேல் நுனியில் வெடி மருந்துப் பொட்டலம் ஒன்றைக் கட்டுகிறான். பொட்டலத்தின் அடிப்பாகத்தில் ஒரு துளை செய்து அதில் தீ வைக்கிறான். வெடி மருந்து தீப்பிடித்து எரிவதால், உண்டாகும் வாயு கீழ் நோக்கிப் பீறிட்டுக் கொண்டு வருகின்றது. குச்சியை விட்டு விட்டால் வாணம் மேல் நோக்கிப் பாய்கின்றது. முற்காலத்து இராக்கெட்டுகள் இவ்வித அமைப்பைக் கொண்டவையே.

இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில்தான் இராக்கெட்டின் தத்துவத்தைக் கொண்டு பல சாதனைகளை உருவாக்கினார்கள். இரண்டாவது உலகப் பெரும் போரில் ஜெர்மானியர் இராக்கெட் அமைப்புக் கொண்டுகொடூரப்போர்க் கருவிகளை உருவாக்கி வெற்றி கண்டார்கள். அதற்குப் பின் தீவிரமாக இந்தத் துறையில் முன்னேற்றம் அடைந்து சந்திர மண்டலத்துக்கு மட்டுமன்றி இதர கிரகங்களுக்கும் சென்று வருவதற்கான இராக்கெட் விமானங்களை அமைத்து மக்களை ஆச்சர்யத்திலும் அச்சத்திலும் ஆழ்த்தியுள்ளனர் விஞ்ஞானிகள்.







எதிர் விசையால் பலூன் மேலே செல்லுதலும் ராக்கெட்டின் அமைப்பும்

தற்கால இராக்கெட் விமானம் ஒரு நீண்ட குழாயால் ஆனது. மேல் முனை ஒரு கூம்பு போன்று அமைந்துள்ளது. இதனால் எளிதாகக் காற்றைத் துளைத்துக் கொண்டு செல்ல அனுகூலமாயிருக்கிறது. அடிப்பாகம் திறந்திருக்கிறது. இராக்கெட் சாயாமல் செல்வதற்கு ஏற்றவாறு இரண்டு தகடுகள் குழாயின் அடியில் அமைந்துள்ளன. குழாயினுள்ளே இரு தொட்டிகள் உள்ளன. ஒரு தொட்டியில் எரிபொருளான ஆல்கஹால் (alcohol) பெட்ரோல் (petrol) போன்ற நீர்மப் பொருள்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. மற்றொரு தொட்டி, எரிபொருள் எரிவதற்கு இன்றியமையாத நீர்ம ஆக்ஸிஜனால் (liquid oxygen) நிரப்பப்பட்டிருக்கிறது. இவ்விரு நீர்மப் பொருள்களும் தனித்தனி குழாய்கள் வழியே எரியும் அறைக்குள் பன்னீர்போல் சிறு சிறு துளிகளாகத் தெளிக்கப்படுகின்றன. அவ்வறையில் மின்சாரத் தீப்பொறி எப்பொழுதும் உண்டாகிக் கொண்டேயிருக்கும். எரி பொருள் தீயகத்துடன் சேர்ந்து தீவிரமாய் எரிவதால் வெப்ப நிலை உயர்ந்து வாயுக்களின் அமுக்கம் அதிகரிக்கிறது. அமுக்கம் மிகுந்த வாயுக்கள், திறந்த வாயின் வழியாகக் கீழ் நோக்கிப் பீறிட்டுக் கொண்டு வெளி வருகின்றன. இதனால் இராக்கெட் விமானமும் மேல் நோக்கி உந்தப்படுகிறது. இவ்வாறாக விநாடிதோறும் வாயுக்கள் சுமார் முப்பது தடவைகள் வெடித்து வெளிவருவதால், இராக்கெட் விமானமும் மேல் நோக்கிச் சென்றுகொண்டேயிருக்கிறது. எரிபொருள் தீரும் வரையில் இராக்கெட் மேல்நோக்கியே செல்லும். இந்த விமானமே வான்வெளிச் செலவுக்கு ஏற்றது.

ரஷ்யாவும், அமெரிக்காவும் இத்தகைய இராக்கெட் அமைப்பில் போட்டி போட்டுக் கொண்டு முன்னேறி வருகின்றன. ரஷ்யா முதன் முதலில் இத்தகைய இராக்கெட்டின் மூலம் 183 பவுண்டு எடையுள்ள ஒரு செயற்கைச் சந்திரனைச் சுமார் 560 மைல் உயரத்தில் கொண்டு போய்விட்டுப் பூமியைச் சுற்றி வரும்படி செய்தது. அதற்கு முதல் ஸ்புட்னிக் என்று பெயர். இது உருண்டை வடிவமானது. அதனுள்ளே பல நுண்ணிய விஞ்ஞானக் கருவிகள் அமைக்கப்பட்டிருந்தன. அவற்றின் மூலம் அச்செயற்கைச் சந்திரன் பற்பல விஞ்ஞானப் புள்ளி விவரங்களைத் திரட்டித் தந்தது. அதை இயக்கிய இராக்கெட் விமானத்தின் எடை 11 டன். இந்த இராக்கெட் ஒரே அடுக்கு இராக்கெட்டாக இருந்தால் இது 560 மைல் தூரம் தன் 11 டன் எடையையும் தூக்கிக் கொண்டு போகத்தானே வேண்டும்? இதைத் தவிர்க்க ரஷ்ய விஞ்ஞானிகள் மூன்று அடுக்கு இராக்கெட்டைப் பயன்படுத்தினர். இதில் மூன்று இராக்கெட்டுகள் அடுக்கடுக்காகப் பொருத்தப்பட்டிருந்தன. அடியிலுள்ள முதல் இராக்கெட் சுமார் முப்பது மைல் சென்றதும் அதிலுள்ள எரிபொருள் தீர்ந்தவுடன் அது 2 - வது இராக்கெட்டை இயக்கிவிட்டுக் கீழே நழுவிவிட்டது. இப்போது இராக்கெட் விமானம், இரண்டு அடுக்குடன் முன்னைவிட அதிக வேகத்தில் செல்லுமல்லவா? அவ்வாறேசுமார்

செயற்கைச் சந்திரனும் அதனை இயக்கும் யந்திரமும்






260 மைல் உயரத்தில் சென்று 2வது இராக்கெட்டில் உள்ள எரிபொருள் தீர்ந்ததும் அது 3வது இராக்கெட்டை இயக்கிவிட்டுக் கீழே கழன்று விழுந்துவிட்டது. இப்போது 3வது இராக்கெட்டு மட்டும் செயற்கைச் சந்திரனைச் சுமந்துகொண்டு முன்னைய வேகத்தைக் காட்டிலும் அதிக வேகத்தில் சுமார் 560 மைல் சென்றதும் செயற்கைச் சந்திரனைப் பூமியைச் சுற்றுமாறு விடுவித்து விட்டுத் தானும் கழன்று விட்டது. இதன்மூலம் அடுக்கு இராக்கெட்டுகளைப் பயன்படுத்துவதின் நன்மை புலப்படுகிறதல்லவா?

பூமியைச்சூழ்ந்துள்ள காற்றுமண்டலக்கவசமாகத் திகழ்ந்து, விண்கற்கள் பூமியில் விழுந்து நமக்குத் தீங்கு விளைவிக்காதபடி காப்பாற்றுகிறது. கிரகங்களைப் போன்று சிறிதும் பெரிதுமான கற்கள் ஒரே திரளாகச் சூரியனைச் சுற்றி வந்து கொண்டிருக்கின்றன. மற்றக் கிரகங்களுக்கு அருகில் வர நேரிடும்போது அவை கிரகிக்கப்படுகின்றன. இதனால் அவை திசை மாறி வான வெளியில் செல்கின்றன. இவைகளில் சில நம் பூமியை நோக்கி வருகின்றன. பூமியை நோக்கி வரும்போது காற்றினூடே உராய்ந்து செல்வதால் வெப்பம் மிகுந்து ஒளி வீசிக் கடைசியாக எரிந்து சாம்பலாகி விடுகின்றன. இவைகளைத்தான் எரிநட்சத்திரம் என்று சொல்லுகிறோம். ஒவ்வொரு நாளும் ஏறக்குறைய லட்சக்கணக்கான விண்கற்கள் நம் காற்றினூடே உராய்ந்து செல்லுகின்றன என்று கணக்கிட்டுள்ளார்கள். நம் பூமியைச் சுற்றி ஒரு காற்றுக் கவசம் இல்லாவிட்டால் அவை பூமியில் வந்து விழுந்து பெரும் தொல்லைகளை உண்டுபண்ணும்.

இந்தக் காற்றுக் கவசம் ராக்கெட்டுகளை வானவெளியிலிருந்து திரும்பப் பெறுவதற்குப் பெரும் தடையாகவும் உள்ளது. விண் கற்களைப்போலவே ராக்கெட்டும் வெப்பம்மிகுந்து பாழாகாமலிருக்க நெடுநாட்களாக ஆராய்ச்சி செய்து இறுதியில் வெற்றி கண்டார்கள்.

அது மட்டுமா? ஒரு காந்தத்தின் மேல் எப்படி இரும்புத் தூள்கள் ஒட்டிக் கொள்கின்றனவோ அது போலல்லவா பூமியின் ஈர்ப்பு விசையால் நாம் பூமியிலே ஒட்டிக் கொண்டிருக்கிறோம்? வானவெளியில் குறிப்பிட்ட உயரத்துக்கு மேல் போய் விட்டால் இந்த ஈர்ப்பு விசை நம்மைப் பாதிக்காமல் போக எடையில்லாத ஒரு நிலையை அடைந்து விடுவோம்! வானவெளிப் பயணத்துக்குட்படும் ராக்கெட் விமானி இதற்கெல்லாம் தயாராயிருக்க வேண்டும்!

நாளடைவில் மனிதன் வானவெளிக் கப்பல் மூலம் மற்றக் கிரகங்களுக்கும் சென்றுவர விஞ்ஞானிகள் தற்போது முயன்று வருகிறார்கள்.

மனிதன் இத்தகைய பேராற்றல் வாய்ந்த இராக்கெட்டுகளை அழிவுக் குண்டுகளைத் தாங்கிச் செல்லப் பயன்படுத்தாமல் நன்மைக்கே பயன்படுத்தினால் உலகம் உய்யும்.

---

"விஞ்ஞான உலகில்" என்னும் புத்தகத்திலிருந்து ஒரு கட்டுரை. பிரசுரம்: தென்மொழிகள் புத்தக டிரஸ்டுக்காக அருணோதயம், ராயப்பேட்டை, சென்னை-14 விலை: ரூ. 1-50.

தோழி வசந்தமாலை தீபத்தை ஏந்திக் கொண்டு உடன் வர, மாடத்துக்குள் நுழைந்த கரமஞ்சரி அங்கே முன் கூடத்தில் சினத்தோடு வீற்றிருந்த தன் தந்தையாரையும், நகைவேழம்பரையும், கண்டும் காணாதவள் போல், அவர்களைப் புறக்கணிக்கும் குறிப்புடன் விலகி நேரே நடக்கலானாள். வேளையில்லாத வேளையில் அவர்கள் அங்கே வந்து அமர்ந்திருப்பது முறையில்லை என்பதை அவர்களுக்கே உணர்த்த வேண்டுமென்பதற்காகத் தான் கரமஞ்சரி அப்படிப் புறக்கணித்தாற் போல் பராமுகமாக நடந்து சென்றாள்.

ஆனால் அவளும், தோழியும் முன் கூடத்தைக் கடந்து, அலங்கார மண்டபம், சித்திரசாலை முதலிய பகுதிகளுக்குச் செல்லும் இரண்டாம் கூடத்து வாயிலை நெருங்கியபோது தந்தையாரின் குரல் பின்புறமிருந்து அவளைத் தடுத்து நிறுத்தியது. அந்தக் குரலில் சினமும், கடுமையும் மிகுதியாயிருந்தன.

“கரமஞ்சரி! இப்படி வந்துவிட்டுப் போ. உன்னை எதிர்பார்த்துத்தான் காத்துக் கொண்டிருக்கிறோம்.”

அவள் திரும்பி நின்றாள். தந்தையார் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்கிறாற் போல் ஆத்திரத்தோடு காட்சியளித்தார். நகைவேழம்பர் என்னும் கொடுமையின் வடிவம் அவர் அருகில் இருந்தது.

“உன்னைத்தான் கூப்பிடுகிறேன். இப்படி வா, மகளே!”

அமைதியான அந்த இரவு நேரத்தில் கரமஞ்சரியின் மாடத்துச் சுவர்களில் அவளுடைய தந்தையாரின் இடி முழக்கக் குரல் இரண்டாம் முறையாக எதிரொலித்து அதிர்ந்தது. பயத்தினால் வசந்தமாலை நடுங்கினாள். அவளுடைய கையிலிருந்த தீபமும், தீபத்தின் சுடரும் சேர்ந்து நடுங்கின. கரமஞ்சரி பதில் கூறாமல் நின்ற இடத்திலேயே நின்றாள். ஊன்றுகோலை ஊன்றிக் கொண்டே வலது காலைச் சாய்த்துச் சாய்த்து நடந்து அவரே அவளருகில் வந்தார். அவருடைய ஊன்றுகோலின் கைப்பிடி ஒரு யாளி வாயைப் பிளந்து கொண்டிருப்பது போன்ற சிங்க முகத் தோற்றம் செதுக்கப் பெற்று அதன் கண்களுக்கு இரத்தக் குமிழிகள் போல் இரண்டு சிவப்பு இரத்தினக் கற்களும் பதிக்கப்பட்

# மணிபல்லவம்

நா. பார்த்தசாரதி

டிருந்தன. அவர் கரமஞ்சரியை நோக்கிக் கோபத்தோடு பாய்ந்து, பாய்ந்து நடந்து வந்த வேகத்தில் அவருடைய முகமே, ஊன்றுகோலின் சிங்க முகத்தை விடக் கடுமையாகத் தோன்றுவது போலிருந்தது. கைப்பிடியின் சிங்க முகத்தில் கண்களுக்காகப் பதித்திருந்த இரத்தினக் கற்கள் தீ மொட்டுக்களைப் போல் விளக்கின் ஒளியில் மின்னின.

அசையாமல் நின்றுகொண்டிருந்த கரமஞ்சரிக்கு அருகில் வந்து சாய்ந்தாற் போல் ஊன்றுகோலை ஊன்றிக்கொண்டு நின்றபடி அவர் கேட்டார் :

"பொன்னையும், மணிகளையும், முத்துக்களையும், கப்பலேற்றி வாணிகம் செய்து செல்வம் குவித்துக் கொண்டிருப்பதாக நேற்றுவரையில் நான் பெருமைப்பட்டதுண்டு, மகளே! ஆனால் இன்றுதான், உன்னைப் போல் குடிப் பெருமையையும். மானத்தையும் சேர்த்துக் கப்பலேற்றும் மகள் ஒருத்திக்கு நான் தந்தையாக இருக்கிறேன் என்ற சிறுமையை முதல் முதலாக உணர்கிறேன்."

இதைக்கேட்டுச் கரமஞ்சரியின் அழகிய கண்கள் சிவந்தன. பவழ மொட்டுக்களைப் போன்ற இதழ்கள் கோபத்தினால் துடித்தன. பிறை நிலாவைப் போல மென்மையும் தண்மையும் ஒளிரும் அவளுடைய நெற்றி மெல்லச் கருங்கியது. சிவந்த கண்களும் துடிக்கும் இதழ்களும், சுருங்கிய நெற்றியுமாக, நிமிர்ந்து தந்தையாரின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள் கரமஞ்சரி. பார்த்துக் கொண்டே அவரைக் கேட்டாள் :

"மானம் கப்பலேறும்படி கெடுதலாக நான் என்ன செய்துவிட்டேன், அப்பா?"

"இன்னும் என்ன செய்ய வேண்டும், மகளே? இது வரை செய்திருப்பது போதாதா? இதோ இந்த மடல் நீ எழுதியதுதானே?" என்று கேட்டுக் கொண்டே பின்புறம் நின்றிருந்த நகைவேழம்பர் பக்கமாகத் திரும்பினார் அவர். உடனே நகைவேழம்பர் முன்னால் வந்து தம் இடுப்புக் கச்சையிலிருந்து சற்றே கசங்கினாற்போல் இருந்த வெண் தாழை மடல் ஒன்றை எடுத்து அவரிடம் கொடுத்தார். அவர் அதை வாங்கிக் கரமஞ்சரியிடம் நீட்டினார். அதை வாங்கிப் பார்த்ததும் கரமஞ்சரி தலைகுனிந்தாள். திருட்டைச் செய்கிறபோதே அகப்பட்டுக் கொண்ட திருடன்போல் நாணி நின்றாள் அவள். தான் இளங்குமரனுக்காக எழுதி மணிமார்பனிடம் கொடுத்தனுப்பிய மடல் தந்தையாருக்கும், நகைவேழம்பருக்கும் எப்படிக் கிடைத்ததென்று விளங்கிக் கொள்ள முடியாமல் தவித்தது அவள் மனம். ஓவியன் தனக்கு மிகவும் வேண்டியவனைப் போல நடித்துத் தன்னையே ஏமாற்றி விட்டானே என்று சந்தேகம் கொண்டாள் அவள். அந்த ஒரு கணம் அவள் மனத்தில் உலகமே சூழ்ச்சிகளாலும், சந்தேகங்களாலும், ஏமாற்றுக்களாலும் உருவாக்கப்பட்டிருப்பது போல் பயம் ஏற்பட்டது.

"ஏன் தலை குனிகிறாய் மகளே? நாணமும் அச்சமும் இருந்தால் நடு இரவுக்கு மேல் எவரிடமும் சொல்லிக் கொள்ளாமல் வெளியேறிச் சென்று அப்பன் பெயர் அம்மை பெயர் தெரியாத ஆண் பிள்ளையைச் சந்தித்து வரத் துணிவு ஏற்படுமா? சந்திப்பதற்கு வரச் சொல்லி மடல் எழுதத்தான் துணிவு ஏற்படுமா? இந்த மாளிகையின் பெருமை, நமது குடிப்பிறப்பு, செல்வநிலை, தகுதி எல்லாவற்றையும் மறந்து எவனோ ஊர் சுற்றும் விடலைப் பயலுக்கு. 'நெஞ்சு கனம் கொண்ட அன்பரே' என்று மடல் எழுத எப்படித்தான் துணிந்தாயோ?"

நகைவேழம்பரையும் அருகில் வைத்துக் கொண்டு தந்தையார் தன்னை இப்படிப் பேசியது கரமஞ்சரிக்கு வேதனையாகவும், அவமானமாகவும் இருந்தது. 'அவரையும் வைத்துக் கொண்டு தந்தையார் தன்னை இப்படிக் கண்டித்துப் பேசினால் நாளைக்கு அவர் எப்படித் தன்னை மதிப்பார்?' என்று நினைத்து மனங்குன்றிப் போய் நின்றாள் கரமஞ்சரி.

"இந்த வேளையில் இதற்கு மேல் அதிகமாக எதையும் உன்னிடம் பேசிக்கொண்டிருக்க நான் விரும்பவில்லை மகளே! ஆனால் ஒன்றை மட்டும் நன்றாக நினைவு வைத்துக் கொள். இந்த ஏழடுக்கு மாளிகையைக் கல்லினாலும், மரத்தினாலும் மட்டும் இவ்வளவு பெரிதாக நான் ஆக்கவில்லை. இந்த மாளிகையின் கல்லோடு கல்லாய், மரத்தோடு மரமாய்ப் பன்னெடுங்காலம் பரிந்து பயந்து சேர்த்த குடிப் பெருமையையும், செல்வாக்கையும், புகழையும், சேர்த்துத்தான் இவ்வளவு உயரமாக இதை நிமிர்ந்து நிற்கச் செய்திருக்கிறேன். இந்த உயரம் சரிந்து போக நீயே காரணமாகி விடக் கூடாது! போ, போய்ப் படுத்துக் கொள். மற்றவற்றை நாளைக்குப் பேசிக் கொள்ளலாம்" என்று கூறிவிட்டு நகைவேழம்பரையும் உடன் அழைத்துக் கொண்டு தந்தையார் கீழே இறங்கிச் சென்று விட்டார்.

அவர் அந்த இடத்திலிருந்து சென்ற பின்பும் சிறிதுநேரம் அங்கேயே, அப்படியே, தலைகுனிந்து நின்று கொண்டிருந்தாள் கரமஞ்சரி. தந்தையார் குடிப் பெருமையைப் பற்றிக் கூறிய சொற்

களுக்காக அவள் கவலைப்படவில்லை. கப்பல் வாணிகத்திலும் பிறவற்றிலும் பல்லாண்டுகளாகப் பழகிப் பழகிச் சூழ்ச்சிகளும், சாதுரியமாகப் பேசும் ஆற்றலும் பெற்றிருந்ததைப் போலவே எதிராளியைத் தம் கருத்துக்கேற்ப வளையச் செய்ய எந்த வார்த்தைகளை எப்படி இணைத்துப் பேச வேண்டுமோ அப்படிப் பேசி விடுவதிலும் தந்தையார் தேர்ந்தவர் என்பது அவளுக்குத் தெரியும். மாளிகையையே குடிப் பெருமையால் நிமிர்ந்து நிற்கச் செய்திருப்பதாக அவர் கூறிய விதம் அழகாகவும், உருக்கமாகவும் இருந்தது அவளுக்கு. ஆனால் அவர் அப்படிக் கூறிவிட்டதற்கு ஏற்பத் தான் இளங்குமரனுக்கு மடல் எழுதியதோ, இரவில் சந்திப்பதற்காகத் தேடிக்கொண்டு சென்றதோ, குடிப் பெருமைக்குக் குறை தேடும் காரியங்கள் என்று அவள் ஒருபோதும் நினைக்கவோ ஒப்புக் கொள்ளவோ சித்தமாயில்லை. இளங்குமரனைக் கண்களாற் காணும் போதும், நெஞ்சினால் நினைக்கும் போதும் தான் உணரும் பெருமை, வேறெந்த நினைவினாலும் எய்துவதற்கு அரியதாயிருந்தது அவளுக்கு. தான் எவற்றையும் வேண்டித் தவிக்காமல், தன்னுடையவை என்றிருக்கும் எல்லாவற்றுக்காகவும் எல்லாரும், ஏங்கவும் தவிக்கவும் செய்து விடுகிற ஓர் ஒளி அவன் முகத்திலும் கண்களிலும், இருக்கிறதே; அதற்குமுன் அவள் குடிப்பெருமை எம்மாத்திரம்? அவள் தந்தையின் அரசபோக ஆடம்பரங்களும், மலைபோற் குவிந்த செல்வமும் எம்மாத்திரம்? விழியிலும், மொழியிலும், இதழிலும், நகைப்பிலுமாக ஆண்மையைச் சூறையாடுவதற்கு அவன் சேர்த்து வைத்துக் கொண்டிருக்கும் எழில் நுணுக்கங்கள் எம்மாத்திரம்? இளங்குமரனின் மனத்தையும், அந்த மனத்தின் விருப்பத்தையும் வெற்றி கொள்வதைவிட உயர்ந்த பெருமை இந்த உலகத்தில் வேறொன்றும் இருக்க முடியாது என்பதை இந்திர விழாவின் முதல்நாள் மாலை கடற்கரையில் அவனைச் சந்தித்துப் பேசிய சில விநாடிகளிலேயே அவள் உறுதி செய்து கொண்டு விட்டாள். அந்த உறுதியையும், முடிவையும் அவள் இனிமேல் யாருக்காகவும் மாற்றிக் கொள்ளப்போவதில்லை. இளங்குமரனின் இறுமாப்போடு கூடிய அழகை வெற்றி கொள்வதற்காகத் தன்னுடைய இறுமாப்பை இழந்துவிட நேருமானாலும் அவள் அந்த இழப்பை ஏற்றுக் கொள்ளத் துணிந்திருந்தாள். காதலில் இழப்பதும், தோற்பதும், விட்டுக் கொடுப்பதும் கூட வெற்றிகள் தானே?

இவ்வாறு கையில் கசங்கிய தாழை மடலும், நெஞ்சில் மணக்கும் நினைவுகளுமாக நின்று கொண்டிருந்த சுரமஞ்சரி, 'படுத்துக் கொள்ளப் போகலாமே, அம்மா' என்று வசந்தமாலை அழைத்தபோதுதான் தன் நினைவு பெற்றாள்.

மென்மையான பூக்களைக் குவித்து அவற்றின் மேல் படுத்துறங்குவது போல் பட்டு மெத்தை விரித்த மஞ்சத்தில் பஞ்சணைகளிற் சாய்ந்து படுத்தபோது சோர்ந்து களைத்த அவள் உடல் சுகம் கண்டது. 'இதே வேளையில் படைக்கலச்சாலையின் கரடு முரடான தரையில் எங்காவது ஒரு மூலையில் இளங்குமரனின் பொன்னுடல் புரண்டு கொண்டிருக்கும் என்று நினைத்தபோது தானும் மஞ்சத்திலிருந்து கீழிறங்கி வெறுந் தரையில் படுத்துக் கொள்ள வேண்டும் போலிருந்தது. இளங்குமரன் எங்கெங்கே எந்தெந்த நேரங்களில் என்னென்ன வசதிக் குறை



வுகளை அநுபவித்துத் துன்பப்பட்டுக் கொண்டிருப்பானே, அவ்வளவையும் தானும் தனக்கு ஏற்படுத்திக் கொண்டு துன்பத்தை அநுபவிக்க வேண்டும்போல் மனத்துடிப்பு அடைந்தாள் சுரமஞ்சரி.

அருகில் வசந்தமாலை இருந்ததனால் வெறுந் தரையில் படுக்கும் எண்ணத்தை அன்றிரவு அவள் நிறைவேற்றிக் கொள்ள இயலவில்லை. வெறுந்தரையில் படுத்தால் வசந்தமாலை 'ஏன்' என்று கேட்பாள். 'இளங்குமரன் அங்கே வெறுந் தரையில்



படுத்திருப்பார். அதனால்தான் நானும் இங்கே வெறுந் தரையில் படுத்துக்கொள்கிறேன்' என்று வெட்கத்தை விட்டு அவளுக்குப் பதில் சொல்லமுடியுமா? 'பெண்ணுக்கு நாணமும், அந்த நாணத்துக்கு ஓர் அழகும் இருப்பதற்குக் காரணமே அவளுடைய மனத்துக்கு மட்டுமே சொந்தமான சில மெல்லிய நினைவுகள் இருப்பதுதானே? அப்படிப்பட்ட மெல்லிய நினைவுகளை எல்லாரிடமும் எப்படிப் பங்கிட்டுக் கொள்ள முடியும்?' இதை நினைத்த போது சுரமஞ்சரி தனக்குத் தானே புன்னகை புரிந்து கொண்டாள்.

சிறிதுநேர மௌனத்துக்குப்பின் இருந்தாற்போலிருந்து தனக்கு அருகில் கீழே தரையில் படுத்திருந்த வசந்தமாலையிடம் ஒரு கேள்வி கேட்டாள் சுரமஞ்சரி :

"ஏனடி வசந்தமாலை! செல்வத்தைச் சேர்ப்பதும் சேர்த்து ஆள்வதும் பெருமைக்கும், கர்வப்படுவதற்கும் உரிய காரியமானால், செல்வத்தையே அலட்சியம் செய்கிற தீரன் அதைவிட அதிகமாகப் பெருமையும், கர்வமும் கொண்டாடலாம் அல்லவா?"

"இப்போது திடீரென்று இந்தச் சந்தேகம் எப்படி முளைத்தது அம்மா?"

"சந்தேகத்துக்காகக் கேட்கவில்லையடி; அப்படிப் பெருமை கொண்டாடுகிற ஒருவரை எனக்குத் தெரியும். இப்போது அவர் நினைவு வந்தது. அதனால் தான் கேட்டேன்."

இவ்வாறு சொல்லிச் சுரமஞ்சரி சிரித்த போது வசந்தமாலையும் எதையோ புரிந்து கொண்டவள்போல் தலைவியோடு சேர்ந்து சிரித்தாள். அப்போது தான் படுத்திருந்த மஞ்சத்துக்கு எதிரே சாளரத்தின் வழியே விண்மீன்களும், சந்திரனும் திகழும் வானத்தைக் கண்டாள் சுரமஞ்சரி. விண்மீன்கள் சாதாரண ஆண்பிள்ளைகளாகவும் சந்திரன், பேராண்மையாளனாகிய இளங்குமரனாகவும் மாறி அவள் கண்களுக்குத் தோன்றினார்கள்.

## 31- இருள் மயங்கும் வேளையில்!

காலம்தான் எவ்வளவு வேகமாக ஓடுகிறது. மாபெரும் காவிரிப்பூம் பட்டின நகரத்தின் தோற்றத்துக்கே புதிய மகிழ்ச்சியையும், கொண்டாட்டமான ஆரவாரங்களையும் அளித்துக் கொண்டிருந்த இந்திர விழாவின் நாட்களில் இன்னும் ஒன்றே ஒன்றுதான் எஞ்சியிருந்தது. இருபத்தேழு நாட்கள் இருபத்தேழு விநாடிகள் போல் வேகமாகக் கழிந்து விட்டன. நாளைக்கு எஞ்சியிருக்கும் ஒருநாளும் முடிந்து விட்டால் மறுபடியும் இந்திர விழாவின் இனிய நாட்களை நுகரப் பன்னிரண்டு மாதங்கள் காத்திருக்க வேண்டும். வெறும் நாளிலேயே திருநாள் கொண்டாடுவது போலிருக்கும் அந்த நகரம் திருநாள் கொண்டாடும்போது இன்னும் சிறப்பாக இருக்கும். விழா முடிந்த மறு நாளிலிருந்து நாளங்காடியின் கடைகள், பட்டினப்பாக்கத்தின் செல்வ வளமிக்க வீதிகள், மருவூர்ப்பாக்கத்தின் நெருக்கமான பகுதிகள் ஆகிய எல்லா இடங்களிலும் இந்திர விழாவின் புதுமை ஆரவாரங்களெல்லாம் குறைந்து, வழக்கமான ஆரவாரங்களோடு அமைதி பெற்று விடும்.

இந்திர விழாவின் இறுதி நாள் சிறப்பு வாய்ந்தது. அன்றுதான் காவிரியின் நீராடு துறைகளில் சிறந்ததும், நகரத்திலேயே இயற்கையழகு மிக்க பகுதியுமாகிய கழார்ப் பெருந்துறையில் மக்கள் நீராட்டு விழா கொண்டாடுவது வழக்கம். காவிரிப்பூம் பட்டினத்தின் மேற்குப் பகுதியில் காவிரி அகன்றும் ஆழ்ந்தும் பாயும் ஓரிடத்தில் கழார்ப் பெருந்துறை என்னும் நீராடு துறை அமைந்திருந்தது. நீராட்டு விழாவுக்கு முதல் நாள் மாலையிலேயே நகர மக்கள் காவிரிக் கரையிலுள்ள பொழில்களிலும், பெருமரச் சோலைகளிலும் தங்குவதற்குத் தொடங்கி விட்டார்கள். நகரமே வெறுமையாகிக் காவிரிக் கரையில் குடியேறி விட்டதுபோல் தோன்றியது. கடுமையான வேனிற் காலத்தில் குளிர்ந்த பொழில்களிலும், நதிக்கரையிலும், வசிக்கும் வாய்ப்புக் கிடைத்தால் அதை அநுபவிக்காமல் விடுவார்களா? காவிரிக் கரையில் சித்திரக் கூடாரங்களும், கூரை வேய்ந்த கீற்றுக் கொட்டகைகளும் அமைத்துத் தங்கி மறுநாள் பொழுது விடிவதையும், நீராட்டு விழா இன்பத்தையும், ஒருங்கே எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள் நகர மக்கள்.

கழார்ப் பெருந்துறைக்குச் செல்லும் சோலைசூழ் சாலையின் இருபுறமும் தேர்களும், பல்லக்குகளும், யானைகளும், குதிரைகளும், வேறு பல சித்திர ஊர்திகளும் நிறைந்திருந்தன. குளிர்ச்சியும்

பூஞ்சோலைகளின் நறுமணமும் மிகுந்து விளங்கும் இந்தச் சாலையைத் தண்பதப் பெருவழி என்றும், திருமஞ்சனப் பெருவழி என்றும் இதன் சுகத்தையும், இன்பத்தையும் உணர்ந்த பூம்புகார் மக்கள் பேரிட்டுப் போற்றி வந்தார்கள். காவேரியின் நீரோட்டத்தைத் தழுவினாற்போல் அமைந்த காரணத்தினால் எக்காலத்திலும் சில்லென்று தண்மை பரவித் தங்கிய சாலையாயிருந்தது இது. அதனால்தான் 'தண்பதப் பெருவழி என்று பெயரும் பெற்றிருந்தது. திருமஞ்சனம் என்றால் மங்கல நீராடல் என்று பொருள். பல விதமான மங்கல நீராடல்களுக்கும் இந்தத் துறை இடமாக இருந்தது. காவிரித் துறைக்குப் போய் நீராடுவது ஒருபுறமிருக்க, நீராடுவதற்காக இந்தச் சாலையின் வழியே நடந்து போகும்போதே உடம்பு நீராடின சுகத்தை உணர்ந்து விடும்.



நகரின் கிழக்குப் பகுதியாகிய மருவூர்ப்பாக்கத்து மக்கள் மேற்குப் பகுதியாகிய காவிரித் துறையிற் சென்று தங்கி விட்டதனால் மருவூர்ப் பாக்கமும் கடற்கரைப் பகுதிகளும், வழக்கத்துக்குமாறான தனிமையைக் கொண்டிருந்தன. கடல் அலைகளின் ஓலமும் காற்றில் மரங்கள் ஆடும் ஓசையையும் தவிர மருவூர்ப்பாக்கத்துக்கடலோரத்து இடங்களில் வேறு ஒலிகள் இல்லை. எப்போதும் ஆள் பழக்கம் மிகுந்து தோன்றும் நீலநாகர் படைக்கலச் சாலையில்கூட அன்று பெரும் அமைதி நிலவியது. படைக்கலச் சாலையைச் சேர்ந்த இளைஞர்கள் எல்லாரும் கழார்ப் பெருந்துறைக்குப் போய் விட்டார்கள். நீலநாகமறவரும் அன்று ஊரில் இல்லை. காவிரிப்பூம்பட்டினத்துக்கு அருகில் சிற்றரசர் குடியினரான வேளிர்களின் நகரம் ஒன்று இருந்தது. அந்த நகரத்துக்குத் திருநாங்கூர் என்று பெயர். சிறப்புக்குரிய குறுநில மன்னர் மரபினரான நாங்கூர் வேளிர்களின் தலைநகராகிய அவ்வூரில் நீலநாக மறவருக்கு ஞானநூல்களைக் கற்பித்த முதுபெரும் புலமை வாய்ந்த ஆசிரியர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அந்த முதுபெரும் புலவருக்கு நாங்கூர் அடிகள் என்று பெயர். ஆண்டு தோறும் சித்திரைத் திங்களில் இந்திர விழா முடியும்போது நாங்கூர் அடிகளைச் சந்தித்து வணங்கி வாழ்த்துப் பெற்றுக் கொண்டு வருவது நீலநாக மறவரின் வழக்கம். பூம்புகாரின் மக்கள் காவிரியின் குளிர்புனலாடிக் களிமகிழ்கொண்டு திரியும் இந்திர விழாவின் இறுதி நாட்களில் நீலநாக மறவர் நாங்கூரில் வயது மூத்துத் தளர்ந்த தம் ஆசிரியருக்குப் பணிவிடைகள் புரிந்து கொண்டிருப்பார். அவ்வாறு தம் ஆசிரியருக்குப் பணிவிடைகள் புரியும் காலத்தில் தாம் சோழ நாட்டிலேயே இணையற்ற வீரர் என்பதையும், தம்முடைய மாபெரும் படைக்கலச்சாலையில் தாம் பல மாணவர்களுக்கு ஆசிரியர் என்பதையும் அவர் மறந்து விடுவார். தம்மை ஆசிரியராக்கிய ஆசிரியருக்கு முன்பு தாம் என்றும் மாணவ நிலையில் இருக்கவேண்டுமென்ற கருத்து அவருக்கு எப்போதும் உண்டு. அந்தக் கருத்திலிருந்து அவர் மனம் மாறுபட்டதே கிடையாது.

அந்த ஆண்டிலும் இந்திர விழாவின் இறுதி நாளுக்கு முதல் நாள் காலையிலேயே படைக்கலச் சாலையைச் சேர்ந்த தேரில் திருநாங்கூருக்குப் புறப்பட்டுப் போயிருந்தார் நீலநாக மறவர். நீராட்டு விழாவுக்கு முந்திய நாள் பகலிலேயே படைக்கலச் சாலை ஆளரவமற்று வெறிச் சோடிப் போய்விட்டது. நீலநாக மறவர் திருநாங்கூர் நோக்கிப் புறப்பட்ட சிறிது நேரத்துக்கெல்லாம் அங்கிருந்த மற்ற இளைஞர்களும் கூட்டம் கூட்டமாகக் காவிரித் துறைக்கு நீராட்டு விழாக் கோலாகலத்தில் மூழ்கி மகிழச் சென்று விட்டார்கள். நாளைக்குத்தான் விழா நாள் என்றாலும் உற்சாகத்தை அதுவரை தேக்கி வைக்க முடியாமல் புறப்பட்டுச் சென்றிருந்தார்கள் அவர்கள்

ஆனால் அதே நாளில், அதே வேளையில் வெளியே சென்று நகரத்தின் இந்திர விழா மகிழ்ச்சியில் கலந்து கொள்ள விரும்பாமல் படைக்கலச் சாலையின் எல்லைக்குள்ளேயே தனிமையும், தானுமாக இருந்தான் இளங்குமரன்.

# சின்னஞ் சிறு குழந்தை முதல்

## குடும்பத்தில் அனைவரும் சொல்வதைக் கேளுங்கள்

எப்போதும் புகழ் பெற்ற வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் கலவையில் இப்பொழுது உடலுக்கு சக்தி அளிக்கும் விட்டமின்களால் வீர்யம் அதிகப்படுத்தப் பட்டு குடும்பத்திலுள்ள அனைவருக்கும் பரிபூர்ணமாக உபயோகப்படும் புதிய டானிக்காக விளங்குகிறது. ஏனெனில் வாட்டர்பரீஸ் விட்டமின் காம்பவுண்ட் குழந்தைகளுக்கு வேண்டிய தசை வளர்ச்சிக்கும், உறுதியான எலும்பு வளர்ச்சிக்கும், பல் வளர்ச்சிக்கும் உதவுகிறது. உழைக்கும் மனிதருக்கு இழந்த சக்தியையும் புத்துணர்ச்சியையும் வீர்யத்தையும் தேவையானபொழுதெல்லாம் அளிக்கிறது. வயோதிகர்களுக்கு பலஹீனமான தசைகளை ஊக்குவிக்கவும், பசியின்மையை போக்கடிக்கவும், ரத்தத்தை சக்தி பெறச்செய்யவும் உதவுகிறது. நோயுற்றுக் குணமடைந்த பிறகு அதி சீக்கிரம் உடம்பு தேற உதவுகிறது. ஆகையால் வாட்டர்பரீஸ் விட்டமின் காம்பவுண்ட் பெரியவர்களுக்கும் குழந்தைகளுக்கும் பொதுவான ஒரு சிறந்த டானிக்.



பா... பா
தா... தா
இங்கா!

அம்மா நமக்கு வாட்டர்பரீஸ் விட்டமின் காம்பவுண்ட் கொடுக்க ஆரம்பித்ததிலிருந்து நமக்கு யாதொரு சுகக்குறைவும் இல்லை.

ஆஹா! வாட்டர்பரீஸ் விட்டமின் காம்பவுண்ட் உட்கொள்ள ஆரம்பித்ததிலிருந்து நமக்குத்தான் எவ்வளவு புத்துணர்ச்சியும், ஆரோக்கியமாக வாழ போதிய சக்தியும் ஏராளமாக கிடைக்கின்றன.

வாட்டர்பரீஸ் விட்டமின் காம்பவுண்ட் பசியை அதிகரிக்கச் செய்து, அதிக விட்டமின்களை அளித்து, ஜீரணசக்திக்கும் உதவுகிறது.

# வாட்டர்பரீஸ்

## விட்டமின்

# காம்பவுண்ட்

நீங்கள் தேக புஷ்டியுடன் விளங்க






இருமல் மற்றும் ஜலதோஷத்திற்கு கிரியோஸோட் மற்றும் க்வயகால சேர்க்கப்பட்ட சிகப்பு லேபிளுடைய வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சிறந்த டானிக்காகும்.

வார்னர்–லாம்பர்ட் பார்மஸ்யூடிகல் கம்பனி

(யு. எஸ். ஏ.யில் வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் பதிவு செய்யப்பட்டது)

WVC 161

கடந்த இருபது நாட்களில் 'இளங்குமரன் படைக்கலச்சாலையின் எல்லைக்குள்ளிருந்து வெளியேறலாகாது' என்ற கட்டுப்பாட்டையும் படிப்படியாகத் தளர்த்தி யிருந்தார் நீலநாகமறவர். அருட்செல்வ முனிவரின் மறைவால் இளங்குமரன் அடைந்திருந்த துக்கமும், அதிர்ச்சியும் அவனை ஒரே இடத்தில் கட்டுப்படுத்தி அடைத்து வைத்திருப்பதனால் இன்னும் அதிகமாகி விடக் கூடாதே என்று கருதித்தான் அப்படிச் செய்திருந்தார் அவர்.

"இளங்குமரன் படைக்கலச் சாலையிலிருந்து வெளியேறி எங்காவது சென்றாலும் தடுக்க வேண்டாம். ஆனால் நீங்கள் யாராவது உடன் போய் வருவது அவசியம்" என்று திருநாங்கூருக்குப் புறப்படுவதற்கு முன்புகூடக் கதக்கண்ணன் முதலிய நண்பர்களிடம் சொல்லி விட்டுப் போயிருந்தார். அப்படி இருந்தும் இளங்குமரன் தானாகவே வெளியில் எங்கும் செல்வதற்கு விருப்பமின்றிப் பித்துக் கொண்டவன் போலப் படைக்கலச்சாலைக்குள்ளேயே சுற்றிச் சுற்றி வந்தான்.

நீலநாகமறவரைத் திருநாங்கூருக்கு வழியனுப்பி விட்டுக் கதக்கண்ணன் இளங்குமரனிடம் வந்து அவனை நீராட்டு விழா நடக்குமிடத்துக்குப் போகலாமென அழைத்தான். "இன்று என் மனமே சரியாயில்லை. வெளியில் எங்கும் போய் வரவேண்டுமென்ற உற்சாகமும் இல்லை. முடிந்தால் நாளைக்குக் காலையில் வந்து கூப்பிடு! உன்னோடு காவிரித் துறைக்கு வந்தாலும் வருவேன்" என்று கதக்கண்ணனுக்கு மறுமொழி கூறி அவனை அனுப்பினான் இளங்குமரன்.

நீராடு துறைக்கு எல்லாரும் புறப்பட்டுச் சென்று விட்டார்கள். இருள் மயங்கும் நேரத்துக்குப் படைக்கலச் சாலையின் முற்றத்தில் இருந்த மேடையில் வந்து காற்றாட உட்கார்ந்து கொண்டிருந்தான் இளங்குமரன். அருட்செல்வ முனிவரின் மறைவுக்குப் பின் அவனுடைய மனமும், நினைவுகளும் துவண்டு சோர்ந்திருந்தன.

நீலநாகமறவர் அவ்வப்போது ஆறுதல் கூறி, அவன் மனத்தைத் தேற்றிக் கொண்டிருந்தார். அன்று அவரும் ஊரில் இல்லாததனால் அவன் மனம் மிகவும் வருந்திக் கொண்டிருந்தது.

'என்னுடைய கைகளில் வலிமை இருக்கிறது. மனத்தில் ஆவல் இருக்கிறது. ஆனால் இந்த வலிமையைப் பயன்படுத்தி என் பெற்றோரை அறியவும், காணவும், துடிக்கும் ஆவலை நிறைவேற்றிக் கொள்ள முடியவில்லையே. என் ஆவலைத் தக்க சமயத்தில் நிறைவேற்றுவதாகச் சொல்லிக்கொண்டிருந்த முனிவரும் போய் விட்டார். அவர் இருந்தவரை-ஆவல் நிறைவேறாவிடினும், என்றாவது ஒருநாள் அவரால் நிறைவேறுமென்ற நம்பிக்கையாவது இருந்தது. இப்போது அதுவும் இல்லையே' என்று நினைந்து நினைந்து அந்நினைவு மாறுவதற்கு ஆறுதல் ஒன்றும் காணாமல் அதிலேயே மூழ்கியவனாக அமர்ந்திருந்தான் இளங்குமரன்.

மாலைப்போது மெல்ல மெல்ல மங்கி இருள் சூழ்ந்து கொண்டிருந்தது. படைக்கலச் சாலையின் பெரிய வாயிற் கதவுகள் மூடப் பெற்று நடுவிலுள்ள சிறிய இட்டி வாயிற் கதவுமட்டும் திறந்திருந்தது. அதையும் மூடிவிடலாம் என்று இளங்குமரன் எழுந்து சென்றபோது, காற்சிலம்புகளும், கைவளைகளும் ஒலிக்க நறுமணங்கள் முன்னால் வந்து பரவிக் கட்டியங் கூறிடச் சுரமஞ்சரியும் மற்றோர் இளம் பெண்ணும் அந்த வாயிலை நோக்கி உள்ளே நுழைவதற்காகச் சிறிது தொலைவில் வந்து கொண்டிருப்பதைப் பார்த்தான். அவன் மனத்தில் அவள் மேல் கொண்டிருந்த ஆத்திரமெல்லாம் ஒன்று சேர்ந்தது. 'இப்படி ஒரு நாள் வேளையற்ற வேளையில் இங்கே இந்தப் பெண் தேடி வந்ததனால்தானே நீலநாக

## முதல் சிகிச்சை !



ஆரம்ப விழாவில் பிரமுகர் (இந்தப் புது ஆஸ்பத்திரிக்கு நிறையப் பேர் வரவேண்டும் என்று கூறிக்கொண்டு ரிப்பனைக் கத்திரித்து...):- ஐயோ! கத்திரிக்கோல் என் கையையே வெட்டிவிட்டதே! நானே முதல் ஆள். சீக்கிரம் உள்ளே வந்து பாண்டேஜ் போடப்பா!

மறவர் தன்மேல் சந்தேகமுற்றுத் தன்னைக் கடிந்து கொண்டார்' என்பது நினைவு வந்தது அவனுக்கு.

கதவுக்கு வெளியிலேயே நிறுத்தி அவர்களைக் கடுமையாகக் கண்டித்துத் துரத்திவிட வேண்டுமென்று இளங்குமரன் முடிவு செய்து கொண்டான். ஆனால் அவனுடைய ஆத்திரமும் கடுமையும் வீணாகும்படி அந்தப் பெண்கள் நடந்து கொண்டு விட்டார்கள் அவர்கள் படைக்கலச் சாலையின் இட்டி வாயிற் கதவருகே அவன் நின்று கொண்டிருப்பதைப் பார்த்ததும் அவனருகில் வராமலே நேராக ஆலமுற்றத்துக் கோவிலுக்குப் போகும் வழியில் திரும்பி நடக்கத் தொடங்கிவிட்டார்கள் அவர்களை எப்படியும் கோபித்துக் கொண்டு, 'இனிமேல் என்னைத் தேடி இங்கே வராதீர்கள்' — என்று கடிந்து சொல்லி விடவும் துணிந்திருந்த இளங்குமரனுக்கு இது ஏமாற்றத்தை அளித்தது

'அவள் எங்கே போனால் என்ன? சிறிது தொலைவு பின்தொடர்ந்து சென்றாவது அவளைக் கோபித்துக் கொண்டு தன் ஆத்திரத்தைச் சொல்லித் தீர்த்து விட வேண்டும்' — என்ற நினைப்புடன் இளங்குமரனும் அந்தப் பெண்களைப் பின்தொடர்ந்தான்.

ஆனால் என்ன மாயமோ? ஆலமுற்றத்தில் பெரிய மரவிழுதுகளின் அடர்த்தியில் அந்தப் பெண்கள் வேகமாக எங்கே மறைந்தார்கள் என்று அவனால் விளங்கிக்கொள்ள முடியவில்லை. அதை விளங்கிக் கொள்ள முடியாமல் ஆத்திரமும் திகைப்பும் மாறி மாறித் தோன்ற அவன் ஆலமரத்தடியில் நின்றபோது அவனால் அப்போது அங்கே முற்றிலும் எதிர்பார்க்கப்படாத வேறு இரண்டு மனிதர்கள் அவனுக்கு முன்னால் வந்து நின்றார்கள்.

அன்று பட்டினப்பாக்கத்திலிருந்து அவனைப் பின்தொடர்ந்த ஒற்றைக்கண் மனிதனும். சுரமஞ்சரியின் தந்தையும் அவன் எதிரே வந்து வழியை மறித்துக் கொள்கிறாற்போல நின்றார்கள்

"என்ன தம்பி! மிகவும் உடைந்து போயிருக்கிறாயே? அருட்செல்வ முனிவர் காலமான துக்கம் உன்னை மிகவும் வாட்டி விட்டது போலிருக்கிறது?"— என்று விசாரிக்கத் தொடங்கிய சுரமஞ்சரியின் தந்தைக்குப் பதில் பேசாமல் வந்த வழியே திரும்பி நடக்கலானான் இளங்குமரன். "சிறிது பேசிவிட்டு அப்புறம் போகலாமே, தம்பீ!"—என்று கூறிக்கொண்டே உடன் நடந்து வந்து பிடி நழுவாமல் இளங்குமரனின் கையை அழுத்திப் பிடித்தார் அவர். (தொடரும்)












"என்னாங்க இது! எதுக்கு இந்தப்-
படகை வாங்கி வந்திருக்கீங்க?"
என்ன விசேஷம்?.... புரியலியே!"

"கோடைக்காலம் ஆரம்பிச்சுடுச்சு. இனி
பட்டணத்து ரோடிலே தார் உருகி ஆறு
போல் ஓடுமே!.. நடக்க முடியுமா?......"

# பண்பாட்டின் சிகரம்

குண்டுமணி

கைசேயில் கிடைத்த வெற்றிக் கனியை யாருக்காவது கைநழுவவிட மனம் வருமா? அதுவும் இந்தியாவுக்கும் ஆஸ்திரேலியாவுக்கும் நடக்கும் டென்னிஸ் பந்தயத்தில் வெற்றி கிட்டும் தருணத்தில் அந்த வெற்றியை வேண்டாமென்று உதறித் தள்ளினால் அதற்கு எவ்வளவு தாராளப் பண்பிலே சிறந்திருக்க வேண்டும்?

எழும்பூர் நகரசபை மைதானத்தில் ஆஸ்திரேலிய டென்னிஸ் வீரர்களான ஸ்டோலியும் நியூகோம்பும் இந்திய ஆட்டக்காரர்களான கிருஷ்ணனும், பிரேம்ஜித்லாலும் ஆடிக்கொண்டிருந்தனர். இரு கட்சியினருக்கும் ஆளுக்கு ஓர் ஆட்டம் வெற்றி கிட்டியது. மூன்றாவது ஆட்டத்தில் இந்தியக் கோஷ்டி ஒரேயொரு எண்ணிக்கை எடுத்திருந்தால் மூன்றாவது ஆட்டத்தில் இந்தியக் குழுவினருக்கு ஜயம் கிடைத்திருக்கும். அன்றைய ஆட்டத்தில் ஒரு திருப்பமும் கண்டிருக்கும். கடைசி எண்ணிக்கைக்காக இந்திய விளையாட்டு வீரர்கள் உயிரைக் கொடுத்துப் பந்தையடித்துக் கொண்டிருந்தனர். ஆஸ்திரேலிய ஆட்டக்காரர்களோ சளைக்காமல் பந்தைத் திருப்பியடித்துக் கொண்டிருந்தனர். அந்தச் சமயத்தில் ஆஸ்திரேலியர் அடித்த பந்து 'அவுட்'டுக்குப் போய்விட்டது. இந்தியாவுக்கு எண்ணிக்கை கிடைத்து மூன்றாவது ஆட்டம் இந்திய கட்சிக்குச் சேர வேண்டியதுதானே? அம்பயரும் அவ்வாறே முடிவு செய்திருப்பார். ஆனால் இந்தத் தருணத்தில் 'பந்து 'அவுட்'டுக்குப் போகும்போது தம் மட்டையில் பட்டுச் சென்றது' என்பதைப் பெருந்தன்மையுடன் திரு கிருஷ்ணன் அம்பயருக்கு எடுத்துக் காட்டினார். அம்பயர் தவறான முடிவு செய்யாமலிருக்க, உண்மையை வெட்ட வெளிச்சமாக்கியது அனைவரும் போற்றிப் பாராட்டும்படியான நிகழ்ச்சியாக இருந்தது. கடைசியில் ஆஸ்திரேலிய கோஷ்டியினர் ஆட்டத்தில் வெற்றி பெற்றனர். ஆனால் 'தருமம் குன்றி அதருமம் மேலோங்கும்போது நான் அவதாரம் செய்வேன்' என்று கிருஷ்ணன் கீதையில் கூறியதுபோல, டென்னிஸ் மைதானத்தில் கிருஷ்ணன் தருமத்தை நிலைநாட்டி மக்களின் மனத்தை வெற்றி கொண்டார்.

கிருஷ்ணன் தம்மைப் பொறுத்தவரையில் தனியாட்டத்தில் ஆஸ்திரேலிய டென்னிஸ் மன்னர்களான ஸ்டோலியையும், ஹெவிட்டையும் பிரமாதமாக ஆடி வென்று வெற்றிக் கொடி நாட்டினார். பல சமயங்களில் கிருஷ்ணன் பந்து அடித்த அழகைக் கண்டு செய்வதறியாது திகைத்து நின்ற எதிர்க் கட்சியினரே கைதட்டிப் பாராட்டினர். ரஸிகர்களின் கரகோஷத்துக்குக் கேட்க வேண்டுமா?

இரட்டை மாட்டு வண்டியில் இரண்டு மாடுகளும் ஒத்துழைத்தால்தானே முன்னேற முடியும்? ஒன்று பின்வாங்கினால் மற்றொன்று மட்டும் ஓடி என்ன புண்ணியம்? லால் கிருஷ்ணன் இரட்டையர் ஆட்டத்தைப் பார்த்தபோது இந்த உவமைதான் நினைவுக்கு வந்தது. பந்தை அபாரமாகத் தாக்கிப் போடுவதில் வல்லவர்களும் நன்கு இணைந்து ஆடியவர்களுமான ஸ்டோலியும், நியூகோம்பும் வெற்றி பெற்றதில் வியப்பில்லை. பதினேழே வயதான நியூகோம்பின் ஆட்டம் சென்னை ரஸிகர்களின் மனத்தைக் கவர்ந்தது. ஆஸ்திரேலிய இளைஞரும் டென்னிஸ் வீரருமான நியூ கோம்ப் எதிர்காலத்தில் விம்பிள்டனில் வெற்றி கொண்டு புகழ்பெற்றால் அதில் ஆச்சரியமிருக்காது. விளையும் பயிர் முளையிலே தெரியுமல்லவா?

கல்கத்தாவிலே நடந்த டென்னிஸ் பந்தயத்திலே ஸ்டோலியைத் தோற்கடித்துப் பெருமை பெற்ற முகர்ஜி சென்னையில் ஹெவிட், ஸ்டோலி இருவரிடமுமே தோற்றுப் போனார். டென்னிஸ் பந்தயத்தில் இந்தியா ரப்பரை இழப்பதற்கும் காரண புருஷராக இருந்து விட்டார். என்ன செய்வது? முன்னுக்கு வந்துகொண்டிருக்கும் வாலிபர் இம்முறை இந்த டென்னிஸ் பந்தயத்தில் பின்வாங்கினார். வேங்கை பதுங்கிப் பின் பாய்ந்துதானே பிறகு முன் பாயும்? இந்தத் தோல்வியெல்லாம் அவர் முன்னேற்றத்துக்கு அடிக்கல்லாக இருக்கலாம், யார் கண்டார்கள்?

'அம்பயரி'ங்கில் சில சமயம் கோளாறுகள் ஏற்பட்டன. இருந்தாலும் சென்னையில் நடைபெற்ற டென்னிஸ் டெஸ்டை மின்சார ஒளி விளக்கினிலே ரஸிகர்கள் வெய்யிலின் கொடுமையை அனுபவிக்காமல் காணும்படி செய்வித்தது பாராட்டுக்குரியது.

ஹெவிட் லால் கிருஷ்ணன் ஸ்டோலி நியூகோம்ப் முக்கர்ஜி



# மாலை மயக்கம்



**நா**லு வீட்டில் 'முறை வாசல்' செய்து, இரண்டு வீட்டில் பாத்திரம் தேய்த்துத் தன் ஒரு வயிற்றை நிரப்பிக் கொள்ளும் பிழைப்புத் தான் பொன்னம்மாளுக்கு.

முப்பது வருஷங்களுக்கு முன் நேர்ந்த புருஷனின் மறைவுக்குப் பின், அன்றிருந்த அடிமை பாரதத்தில் எழுத்து வாசனையில்லாத ஓர் அனாதைப் பெண், அதுவும் மாட்சிமை தங்கிய பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை எதிர்த்த ஒரு ராஜத் துவேஷியின் விதவை, வேறு என்னமாய் வாழ்ந்திருக்க முடியும்? எந்த அரசாங்கத்தை அவள் புருஷன் எதிர்த்து, விதேசிப் பொருள் பகிஷ்கரிப்பு இயக்கத்தில் பங்கு பெற்றுத் தடியடிபட்டு மாண்டு போனானே, அதே அரசாங்கத்தின், விசுவாசமிக்க ஊழியர்களின் இல்லத்தில் அவள் பணிப்பெண்ணானாள். அந்தச் சொற்ப வருமானத்தில், அந்தத் தியாகி விட்டுச் சென்ற இரண்டு ஆண் குழந்தைகளையும், ஒரு பெண் குழந்தையையும் போஷித்து, கொஞ்ச காலத்தில் இரண்டு ஆண் குழந்தைகளுக்கும் ஒன்றன்பின் ஒன்றாகக் 'கருமம்' செய்ததும், எஞ்சி நின்ற பெண் குழந்தையை மட்டும் உயிரினும் மேலாகக் காப்பாற்றி வளர்த்துப் பத்து வருஷங்களுக்கு முன், பட்டணத்தில் ஏதோ ஒரு வெள்ளைக்காரக் கம்பெனியில் அட்டெண்டராயிருக்கும் ரங்கசாமிக்குக் கல்யாணம் செய்து அனுப்பிவிட்டு நிம்மதியாக வாழ்வதும் அந்தத் தியாகியின் லட்சியக் கனவுகளுக்கு விடப்பட்ட சவாலா?......தியாகத்தின் பரிசா?...

போகட்டும்! தியாகம் என்பது பரிசுக்குரிய போட்டிப் பந்தயமோ, நற்சாட்சிப் பத்திரத்துக்குரிய பரீட்சைத் தேர்வோ அல்ல.

ஊரில், ஆறு மாதங்கள் ஜெயிலுக்குப் போய்விட்டுவந்த பெருமையைக் கொண்டாடியே கௌன்ஸிலராகி, பிறகு சட்டசபை அங்கத்தினராகவும், வரப் போகும் தேர்தலில் பார்லிமெண்ட் உறுப்பினராகவும் ஆக இருக்கும் இன்னொரு பெரிய மனிதர் அகில இந்தியப் புகழ் வாய்ந்தவர். அவர் பேரில் ஓர் ஆஸ்பத்திரி, நூல் நிலையம், பொதுப் பூங்கா போன்ற 'விருது'கள் தியாகத்தைப் பறைஅடித்து நிற்கின்றன. அவரைக் குறை சொல்லலாமா? அவரைப் போல் ஆயிரம் பேர் ஊர்கள் தோறும் உருவான பிறகு அவர் மட்டும் வாளாவிருந்தால் அது ஏமாளித்தனமல்லவா?

ஆனால், ஊரும் தேசமும் சின்னசாமியை, பொன்னம்மாளின் புருஷனை, அந்த எளிய மனிதனை, ஆனால் பெரிய





ஜெயகாந்தன்

தியாகியை மறந்து விட்டது. சுதந்திரம் பெற்ற பிறகு, சுதந்திர சர்க்காரின் முன்னிருக்கும் எத்தனையோ கடமைகளில் இந்த அற்ப விஷயங்களை நினைவில் வைத்துக் கொள்ள முடியுமா? அதற்கென்ன, எவ்வளவோ பேர் செத்தார்கள்.... இருக்கின்றவர்கள் வைத்தியக்காரர்களா?...

பொன்னம்மாளுக்கு இதெல்லாம் ஒன்றும் தெரியாது...அநியாயமாச் மூன்று பிள்ளையும் தாயுமாய்த் தவிக்க விட்டுவிட்டுப் புருஷன் செத்துப் போனானே என்ற துயரம் இருந்தது ஆரம்பத்தில். 'செவுருமெண்ட்டை எதிர்க்கப் போவாமோ?' என்ற நியாயம் தோன்றியது பிறகு. ஆனாலும் புருஷனின் நினைவு மனத்தில் ஒரு பெரும் நிறைவை உண்டாக்கியது பிற்காலத்தில்.

சுதந்திரம் வந்துவிட்டது என்று எல்லோரும் சொல்லிக்கொண்டு ஆனந்தப்பட்ட ஒரு நாள் அவளும் கூட, சந்தோஷப்பட்டாள். தெருவெல்லாம் கூடிக் கூடி முழங்கிய பேச்சுக்கள், தானாகவே, அவள் காதில் வந்து விழும்போது 'எங்கள் அருமைச் சகோதரர்கள் ரத்தம் சிந்திப் பெற்ற சுதந்திரம்; எத்தனை வீரர்கள் தங்கள் உயிர்களை அர்ப்பணித்துப் பெற்ற சுதந்திரம்' என்றெல்லாம் பேசும் பொதுமைப் பேச்சிலும் கூட, கோரஸ் பாடி விட்டு வந்து ஒலிப்பதிவைக் கேட்கும்போது, தன் குரலை மட்டும் பிரித்துணர்ந்து ரசிக்கும் ஓர் எக்ஸ்ட்ரா பாடகியின் மன உணர்வில் தன் புருஷனைப்பற்றி அவர்கள் பேசுவதாக நினைத்துப் பூரித்துப் போவாள் பொன்னம்மாள்.

சரி, ஆனது ஆயிற்று, போனது போயிற்று. இனிமேல் அவளுக்கு என்ன? வயசும் அறுபது ஆகிறது. வயதுக்கு மீறிய தள்ளாமை வந்து விட்டது பொன்னம்மாளுக்கு. சாக வேண்டியது ஒன்றுதான் பாக்கி. அதுவரையிலும் தன் வயிற்றைக் கழுவிக்கொள்ள அவள் உழைத்துத்தான் தீர வேண்டும். அந்தக் கொடுமையைத்தான் அவளால் பொறுக்க முடியவில்லை. ஒரு பத்து நாளைக்கு ஓய்வாக ஒருபக்கம் காலை நீட்டி உட்கார்ந்து கொண்டு, வேளைக்கு இரண்டு கவளம் சோற்றைத் தின்று ஒருபக்கம் படுத்துக் கிடந்து உயிரை விட்டு விட்டால், அதுதான் லட்சியச் சாவாகவும் வாழ்ந்த வாழ்வின் நிறைவேற்றமாகவும் இருக்கும் என்று தோன்ற ஆரம்பித்து விட்டது கிழவிக்கு. ஆனால் பாவம், என்ன பண்ணுவாள்? முறைவாசற்காரிக்கு ஓய்வாவது, உபகாரச் சம்பளமாவது?

பட்டணத்தில் கலியாணம் பண்ணிக் கொண்டு போன பிறகு இந்தப் பத்து வருஷங்களாய் மறுமுறை பார்த்தறியாத மகளுக்குக் கடுதாசி எழுதிப் போட்டாள். மகளிடம் இருந்து அனேகமாக, இரண்டு வருஷங்களுக்கு ஒருமுறை கடிதம் வரும். அதுவும் நல்ல சமாசாரமாய், பொன்னம்மாளுக்குப் பேரக் குழந்தை பிறந்த செய்தியாகத்தானிருக்கும்.

வேறு என்ன செய்வது? அவரவர்கள் இருக்கும் இடத்தில் இருந்து பட்டினி கிடக்காமல் வாழ்ந்தால் அதைவிடப் பெரிய கொண்டாட்டம் என்ன இருக்கிறது, அவர்கள் வாழ்வில்! தாய் மகளிடமோ, மகள் தாயிடமோ வந்து சீராட்டிக் கொள்வது அவர்களுக்குச் சாத்தியமற்ற விஷயம்.

இருந்தாலும் கிழவிக்கு இருந்த மன அரிப்பில் முக்காலணாக் கடுதாசியை வாங்கி யாரிடமோ கொடுத்து எழுதிப் போட்டுவிட்டாள் தனது ஆசையை.

'ம்....அவ எங்கே வரப் போறா? புள்ளைக் குட்டிக்காரி. நான் போறதுன்னு போகலாம். ஐயோ, பத்து வருஷமாச்சே. மவ எப்படி இருக்காளோ? அவளுக்குத்தான் என்னைத் தவிர யாரு? பத்து ரூவாயாவது வேணும் நாம் போறதுன்னு. போனாலும் அங்கேயே குந்திக்கிறதா? பாவம் அதுங்க என்னு கஷ்டப் படுதோ! ரெண்டு நாளு இருந்துட்டு வந்துடணும். அவ உட்டுடுவாளா? இருன்னுதான் சொல்லுவா ஆசையிலே... மகளே, நல்லாயிருக்கியாடி கண்ணே. ஒம் முகம்கூடத் தெரியலையேடி' என்று கண்கள் கலங்க மகளின் நினைவில் தனிமையிலமர்ந்து தனக்குத்தானே புலம்பிக் கொண்டிருந்தாள் பொன்னம்மாள்.

மகளிடமிருந்து ஒருநாள் பதிலும் வந்தது. அவளுக்கு இப்பொழுது ஆறாவது பிள்ளை, எட்டு மாசமாம். அம்மாவைப் பார்க்க அவளுக்கும் ரொம்ப ஆசையாயிருக்காம். 'புள்ளையும் குட்டியுமாக நான் வர்றது எப்படிமுடியும்? ஆசையிருந்தா அவசியம் நீ இங்கே புறப்பட்டு வா. என்னோட இருந்துடு. கடைசிக் காலத்திலே' என்று எழுதியிருந்ததைக் கண்டதும் கிழவிக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை. 'எம் மவ என்னை வரச் சொல்லிக் கடுதாசி போட்டிருக்கா. அங்கேயே வந்து இருந்திடணுமாம்' என்று எல்லாரிடமும் கடிதத்தைக் காட்டிக் காட்டி, தன் மகளுக்குத் தன் மேல் இருக்கும் ஆசையையும், தன்னை வந்து இருக்கச் சொல்ல ஓர் இடம் இருக்கிறது என்று தனக்கிருக்கும் ஆதரவையும் பெருமையடித்துக் கொண்டாள் கிழவி.

'' ஆமாம் பாட்டி, அதான் சரி. ஏன் இந்த வயசான காலத்திலே இப்படித் தனியா இருந்துக்கிட்டுக் கஷ்டப்படறே? உன் மககிட்டேயே போயி இருந்துடு'' என்று பலரும் யோசனை கூறினார்கள்.

'' ஆமாம், ஆமாம்! போயிட வேண்டியது தான்'' என்று எல்லாரிடமும் பதில் சொல்லி விட்டு வீட்டுக்கு வந்தாள்.

வீட்டுக்கு வந்தபோது சந்தோஷத்தால ஏற்பட்ட படபடப்பில் அயர்வு கண்டது. முன்தானையைத் தரையில் விரித்துப் படுத்துக் கொண்டாள்.

'தவதான் கொழுந்தை, என்னமோ ஆசையிலே எழுதியிருக்கான்னு, நானும் போயி அங்கே உக்கார்ந்துக்கிறதோ? நான் ஓர் அறிவு கெட்ட மாடு. வயசுதான் ஆச்சே ஒழிய, புத்தி இல்லே' என்று தன்னைத் தானே நொந்து கொண்டாள்.

'ஹூம், பாவம்! புள்ளையும் குட்டியுமா பட்டணத்திலே, பியூன் வேலையிலே கெடைக்கிற சம்பளத்தை வெச்சுக்கிட்டு மக என்ன பாடுபடறாளோ? மகளே, 'நீ வா'ன்னு எனக்கு எழுதினியே, அது போதும்டி கண்ணே' என்று மடியிலிருந்த கடிதத்தை எடுத்து முத்தமிட்டாள்.

'அங்கேயே போயி இருக்காட்டிப் போனு லும் ஒரு தடவை போயி கொழந்தைகளை யும் பொண்ணையும் பாத்துட்டு வந்துடணும். பேரப் புள்ளேங்க ஒண்ணைக்கூடப் பார்த்த தில்லே. அந்த மனுசனுக்குத்தான் - இது என்ன இமுர்னு அவரு நெனப்பு வருதே— அவருக்குத்தான் அந்தக் குடுப்பனை இல்லே. குத்துக் கல்லாட்டமா நான் இருக்கேனே, போயிப் பேரப்புள்ளேங்களைப் பார்க்க வேணாமோ ?' என்று எழுந்து உட்கார்ந்தாள். சுவரில் தொங்கும் புருஷனின் படத்தை வரிசையாகத் தொங்கிக் கொண்டிருக்கும் சுவாமிப் படங்களிடையே தேடினாள். அதை அவள் பார்ப்பதே இல்லை. அவள் மகன் இருக்கும்போது அவன் அலங்காரமாய் வைத்துப் பூஜித்து வந்தவை அவை. எழுந்து சென்று ஒவ்வொன்றாகக் கண்ணாடியின் மேல் அடைந்திருந்த புழுதியைத் துடைத்தாள். அவற்றில் அவள் புருஷன் சின்னசாமி......

கதர்க் குல்லாயும், ஜிப்பாவும் அணிந்து, மார்பின் மேல் கைகளைக் கம்பீரமாகக் கட்டிக் கொண்டு, முறுக்கிவிட்ட மீசையும், சுதந்திர ஆர்வம் வீசும் விழிகளுமாய்...

அதெல்லாம் அவளுக்குத் தெரியவில்லை. செத்துப் போன அந்த ஆண் பிள்ளைகள் இருந்தால் இப்பொழுது இந்த மாதிரி இருப்பார்கள் என்று தோன்றியது. 'சாகிற காலத்தில்-பாடுபட முடியாத தள்ளாமையில் ஒரு பக்கம் உட்கார வைத்துச் சாப்பாடு போட்டு, வைத்தியம் பார்த்து...' அவள் கண்கள் கண்ணீரால் நிறைந்தன. மகன் பெற்ற பிள்ளைகளையாவது போய்ப் பார்த்து விட்டு வந்துவிட வேண்டும் என்ற ஆவல் பெருகியது.

பணத்துக்கு எங்கே போவது ?

'அடேயப்பா, பத்து ரூபாய் !' அந்த நினைப்பு வந்ததும் அவள் ஆசைகள் யாவும் வாடிப் போயின.

**நா**டும் ஊரும் சின்னசாமியை மறந்து விட்டாலும் அவர்கள் வாழும் அந்தப் பிரதேசத்தில் சிலர் அந்தத் தியாகியை நினைவில் வைத்திருந்தார்கள். அவர்களில் சிலர் அவன் அடிபட்டு ஸ்தலத்திலே ரத்த வெள்ளத்தில் மிதந்து மாண்டுபோனதைக் கண்கூடாகக் கண்டவர்கள்.

அவர்களில் சிலர் கூடித் தியாகி சின்னசாமி நினைவு மன்றம் ஒன்றை ஏற்படுத்த நிச்சயம் பண்ணினார்கள். தேதி குறித்தார்கள். சின்னசாமி நினைவுமன்றத் தொடக்க விழாவுக்குத் தலைமை வகிக்க உள்ளூர்ப் பெரிய மனிதரை, வரப்போகும் தேர்தலில் பார்லிமெண்டுக்குப் போட்டியிடப் போகிறவரை அழைத்தார்கள். சின்னசாமியைப் பற்றிக் கேள்விப்பட்டே அறியாத அந்தப் பெரிய மனிதர் தமது பல அலுவல்களுக்கிடையே தலைமை வகிக்க ஒப்புக் கொண்டார்.

'சின்னசாமியின் படத்தை அவனது மனைவியைக் கொண்டே திறந்து வைக்க வேண்டும்' என்ற 'புரட்சித் தீர்மான'த்தை ஒருவர் பிரேரேபிக்க மற்றவர்கள் முழு மனதாய் ஒப்புக் கொண்டார்கள்.

விழாத் தினத்தன்று, வேலைக்குப் போக முடியாமல் இரண்டு நாட்கள் பட்டினியோடு, மகனின் நினைவில் படுத்துக் கிடந்த பொன்னம்மாளின் வீட்டருகே கார் ஒன்று வந்துநின்றது.

" அம்மா ......அம்மா ......" என்று வெளியிலிருந்து குரல் வந்ததும் பொன்னம்மாள் எழுந்து வந்தாள். அவள் எதிரில் ஒரு தியாகியின் மனைவியைத் தரிசிக்கும் புனித உணர்வோடு கரங்கூப்பியவாறு இரண்டு இளைஞர்கள் நின்றிருந்தார்கள்.

" நீங்கள்தானே பொன்னம்மா?"

" ஆமாம் சாமி......"

" இந்தப் பேட்டையிலே தியாகி சின்னசாமி நினைவு மன்றம்னு ஒண்ணு ஆரம்பிச்சிருக்கோம். நீங்க அவசியம் விழாவுக்கு வந்து உங்க புருஷனின் படத்தைத் திறந்து வைக்கணும்......சாயங்காலம் நாலு மணிக்கு உங்களுக்குக் கார் அனுப்பறோம்..." என்று கூறியதைக் கேட்ட பொழுது பொன்னம்மாளுக்கு ஒன்றும் புரியவில்லை.

அவர்கள் போய் விட்டார்கள்.

பொன்னம்மாள் மகனை நினைத்துக்கொண்டு ஊருக்குப் போக வேண்டுமென்ற கற்பனைச் சுகத்தில் மீண்டும் ஆழ்ந்து விட்டாள்.

---

சென்ற மாதம் ஜாம்ஷெட்பூரில் தக்ஷிண பாரத மாதர் சமாஜத்தில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் இன்னிசை விருந்து நடைபெற்றது. சமாஜத்தின் அங்கத்தினர்களுடன் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களைப் பார்க்கலாம்.



மாலை நாலு மணிக்குப் பொன்னம்மாளின் வீட்டருகே கார் வந்து நின்றது. பொன்னம்மாள் கந்தல் சேலையைக் கிழிசல் தெரியாமல் மறைத்துக் கட்டிக் கொண்டு காரில் ஏறி அமர்ந்தாள். அக்கம் பக்கத்திலிருந்தவர்கள் எல்லோரும் கிழவிக்குக் கார் சவாரி யோகம் கிடைத்த அதிர்ஷ்டத்தை வியப்புடன் பார்த்தார்கள்.

கார் புறப்பட்டுப் போய்ச் சேர்ந்த இடத்தில் ஜனத்திரள் கூடியிருந்தது. தொண்டர்கள் கூடிக் காரிலிருந்து கிழவியை இறக்கி மரியாதையுடன் மேடைக்கு அழைத்து வந்தார்கள். நாற்காலியில் அவளை உட்காரச் சொன்னார்கள்.

அவள் வேலை செய்யும் வீட்டிலுள்ள எஜமான்களை யொத்த பெரிய மனிதர்கள் மேடையில் அமர்ந்திருந்ததைக் கண்டதும் பொன்னம்மாளுக்கு உடம்பு கூசிற்று. உட்காரத் தயங்கினாள். அந்தப் பெரிய மனிதர்களில் ஒருவர் வற்புறுத்தவே அவள் உடம்பைக் குறுக்கிக் கொண்டு உட்கார்ந்தாள். தலைமை வகித்த உள்ளூர்ப் பெரிய மனிதர், வரப்போகும் தேர்தலில் பார்லிமெண்டுக்குப் போட்டியிடப் போகிறவர் ரோஜா மாலையிலிருந்து உதிர்ந்த இதழ்களைக் கொறித்தவாறு உட்கார்ந்திருந்தார். கூட்டத்தில் பெரிய மனிதர்கள் பலர் சின்னசாமியைப் பற்றி வானளாவப் புகழ்ந்து பேசிய போது கிழவிக்குத் தன் புருஷனைப் பற்றித்தான் பேசுகிறார்களா என்றுகூடச் சந்தேகமாக இருந்தது.

'' இப்பொழுது தியாகி சின்னசாமியின் துணைவியார் நம்மிடையே வாழ்கிறார்கள்... நாம் பாக்கியசாலிகள்... நமக்கு, மேலும் பாக்கியம் சித்தித்திருப்பது அவர்களே இங்கு வந்திருந்து தியாகக் கணவரின் திருவுருவைத் திறந்து வைப்பதாகும்.'' கூட்டத்தில் பெரும் கரகோஷம் பிறந்தது. பொன்னம்மாள் எழுந்து சென்று படத்தைத் திறந்தாள்.

...கதர்க் குல்லாயும், கதர் ஜிப்பாவும், முறுக்கிய மீசையும், சுதந்திர ஆர்வம் வீசும் விழிகளுமாய் மார்பின்மீது கைகளைக் கட்டிக் கொண்டு...

அவளுக்கு உடம்பு புல்லரித்தது !

'' இப்பொழுது அன்னை பொன்னம்மாள் சில வார்த்தைகள் கூறுவார்கள்'' என்றதும் 'மைக்'கின் முன் அவளைக் கொண்டு வந்து நிறுத்தினார்கள்.

ஒரு சிறுமி கையில் ரோஜா மாலையுடன் அருகே வந்து நிற்பதைக் கண்டதும் திகைத்த பொன்னம்மாள் மாலையைக் கையில் வாங்கிக் கொண்டாள்.

என்னத்தைப் பேசுவது ?

வயிற்றில் பசியும், நெஞ்சில் மகளின் நினைவும் கண்களில் கண்ணீரும் நிறைந்து தொண்டை அடைத்தது:

'' எம் புருசன் தடியடிபட்டுச் செத்துப் போனாரு....அதுக்கப்புறம் எம்புள்ளைங்க ரெண்டும் சீக்குக்கு மருந்து வாங்கித் தர முடியாம செத்துப் போச்சு. எம் மவ பட்டணத்திலே புருசனோட வாழுது. அவ மொகத்தைப் பாத்துப் பத்து வருஷத்துக்கு மேலே ஆவுது. நான் தள்ளாத வயசிலே தனியா விட்டேன். அவரைப் பத்தி நீங்க பேசறதைக் கேக்கறப்போ ஒரு பக்கம் சந்தோசமாவும் இருக்கு. இன்னொரு பக்கம் வருத்தமாவும் இருக்கு. நீங்க எல்லாம் ரொம்ப நல்லவங்களா இருக்கீங்க. பெத்தவங்களைப் பிரியாம, பிள்ளை குட்டிங்களைப் பிரியாம நீங்க நல்லா இருக்கணும்'' என்று கையெடுத்துக் கும்பிட்ட போது கூட்டம் கரகோஷம் எழுப்பிற்று!

**கா**ரிலிருந்து கையில் ரோஜா மாலையுடன் வீட்டருகே வந்து இறங்கும்போது, கூட வந்தவர்களிடம் பட்டணம் போய் மகளைப் பார்ப்பதற்காக ஒரு பத்து ரூபாய் கேட்கலாமா என்று தோன்றியது கிழவிக்கு.

'' நமக்கு இவ்வளவு மரியாதை தர்ராங்களே....யாராவது பத்து ரூபா தரமாட்டாங்களா, மகளைப் போய்ப் பாத்துட்டு வர்ரதுக்கு. வந்தப்பறம், இன்னும் கொஞ்ச நாளைக்கு உசிரு போறவரைக்கும், உக்கார வெச்சி ஒரு வேளை சோறு போடறதுக்கு அந்த எஜமான்மாரிலே ஒருத்தர் இருக்கமாட்டாங்களா ?'' என்றெல்லாம் மனம் ஆசை வலை விரித்தாலும் மானம் அந்த வலையில் சிக்க விடாமல் கிழவியைத் தடுத்தாட்கொண்டது.

அவள் வீட்டுக்குள் நுழைந்ததும் கூடவந்தவர்கள் விடை பெற்றனர். அவள் தன் கையிலிருந்த ரோஜா மாலையைப் புருஷனின் படத்துக்குப் போட்டு விட்டுக் கும்பிட்டாள்.

'' என்ன அல்பமான நெனப்பிலே சின்னத்தனமா நடந்துக்க இருந்தேன். மானத்தோட செத்தாப்போதும், என்தெய்வமே...'' என்று கும்பிட்டாள்.

பொன்னம்மாளுக்குப் பசியில், கூட்டத்தில் கிடைத்த சோடாவைக் குடித்திருந்ததால் வயிற்றைப் புரட்டியது. காலையில், தான் வேலை செய்யும் வீட்டுக்குப் போனால் பழையது கிடைக்கும் என்ற நினைப்புடன் பச்சைத் தண்ணீரை ஒரு குவளை எடுத்துக் குடித்து விட்டுச் சேலைத் தலைப்பை விரித்துப் படுத்துக் கொண்டாள்.

' அவரை யாரும் மறக்கவில்லை......என்ன மரியாதை !' என்று படுத்தவாறே அந்தப் படத்தைப் பார்த்துப் பூரித்துப் போனாள்.

காற்றில், படத்தில் இருந்த மாலை அசையும் போது ரோஜா இதழ்கள் அவள்மேல் உதிர்ந்தன. அவள் அவற்றை ஏதோ நினைவில் எடுத்து ஒவ்வொரு இதழாக, கூட்டத்தில் அந்தப் பெரிய மனிதர் கொறித்தாரே அது மாதிரித் தின்றாள்.

பிறகு நிம்மதியாய்த் தூங்கிப் போனாள்.

மாலை மரியாதையைக் கண்டு அவள் மயங்கிப் போனாள். கொஞ்சம் வேகமாகக் காற்று அடித்த போது படத்திலிருந்த மாலை 'பொத் தென அவள் முகத்தில் விழுந்தது. பொன்னம்மாள் திடுக்கிட்டு விழித்தாள். எழுந்து நின்று படத்தை வெறித்துப் பார்த்தாள்.

மங்கிய சிம்னி விளக்கின் ஒளியில் அவள் புருஷனின் உருவம் தெரிந்தது.

கதர்க் குல்லாய், கதர் ஜிப்பா, மார்பின் மீது கம்பீரமாய்க் கட்டிய கைகள், முறுக்கிய மீசை, சுதந்திர ஆர்வம் வீசும் விழிகள்....

' ஹும் ....கேவலம் இந்த மாலைக்காக நான் சாகவில்லை' என்று சொல்வது போலிருந்த அந்தத் தியாக புருஷனின் தோற்றம் அந்தக் கிழவிக்குப் புரிந்ததோ, என்னவோ?

# உற்ற துணை

ஒரு நாள், திடீரென்று ரங்கனின் எருதுக்கு நோய் வந்தது; செத்தது. அவனுக்கு அது பெரிய அதிர்ச்சியைத் தந்தது. அவன், மனைவியிடம் சொன்னான்:




கவலை நெஞ்சைத் துளைத்தது. சித்தப்பாவிடம் யோசனை கேட்கச் சென்றான்.




அவன் ஆயுள் இன்சூரன்ஸ் கார்ப்பொரேஷனிடம் கடனுக்கு மனுப் போட்டான். பண அஞ்சல் தபால்காரர் கொண்டு வந்தார்.



பையிலே பணத்தோடு, பக்கத்துச் சந்தைக்குப் போனான். மனதிற்குப் பிடித்த மணியான காளையொன்று வாங்கினான்

சில நாட்கள் சென்ற பின்





அவனுடைய பிரச்சினைகள் எல்லாம் தீர்ந்தன. எருதினை வேறு உழவர்களுக்கு வாடகைக்கு விட்டான். பணம் கிடைத்தது. சுலபமான தவணைகளில் கடனை அடைத்தான். உண்மையில் உதவியது ஆயுள் இன்சூரன்ஸே!

## ஆயுள் இன்சூரன்ஸ்

உரிய நேரத்தில் உற்ற துணை

ASP/LIC/R/8







# பரிசுத்தமான மேனியழகை அடையும் காலம்...

நீங்கள் ஓர் அழகியாக விளங்க உங்களை அழகு செய்து கொள்ளும் வருஷங்கள் உங்கள் மேனியழகை பாதுகாக்கும் வருஷங்களாகும்.

இந்தியாவில் கிடைக்கும் சோப்புகளில் சிந்தாலில் மாத்திரம் தான் **ஜி-11*** சேர்க்கப்பட்டுள்ளது. தினந்தோறும் சிந்தால் உபயோகிப்பதால் சருமங்களில் சாதாரணமாக வளரும் துர்நாற்றமெழச்செய்யும் கிருமிகள் கொல்லப்பட்டு, மாசில்லாத பரிசுத்தமான மேனியழகு கிடைக்கிறது.

வியர்வை நாற்றத்தைப் போக்கி, எழிலுடன் விளங்கச்செய்யும் சோப்

பூரணப் பாதுகாப்பிற்கு இனியமணங்கமழும் வியர்வை நாற்றத்தைப்போக்கிஆறுதல் அளிக்கும் ஜி-11 அடங்கியுள்ள கோத்ரெஜ் சிந்தால் டாய்லெட்பவுடர் உபயோகியுங்கள்

* படங்களுடன் கூடிய "ஜி-11 என்பது என்ன?" என்ற இலவச புத்தகத்திற்கு கோத்ரெஜ், பம்பாய்-12 என்ற விலாசத்திற்கு எழுதுங்கள்.

கோத்ரெஜ் ஹேர் டானிக்கிலும் ஜி-11 அடங்கியுள்ளது.

Godrej




சோப்புகளில் முதன்மையான பெயர்




தாலி கட்டிய மனைவியைக் கைவிட்ட ஜமீன்தார், அழகி அமுதாவினிடம் மயங்கி, அறிவிழந்து, அவளது கைப் பொம்மையாக ஆடுகிறார். அமுதாவை அகற்றி விட்டு, அந்த இடத்தில் உண்மையான ஜமீன்தாரிணியை அமர்த்தி விடுவதையே தன் லட்சியமாகக் கொண்டவள் கொங்கு நாட்டுத் தங்கம். அவள் லட்சியத்துக்கு உதவியாக ஜமீன்தாரின் திவான் ராஜவேல், அவள் பக்கம் சேருகிறான்.

ஜமீன்தாரின் ஆசை நாயகி அமுதா அந்த லட்சியத்துக்கு இடைஞ்சலாக இருப்பதுடன், படத்தின் வில்லியாகவும் இருக்கிறாள். முடிவு எல்லோருக்கும் தெரிந்ததுதான்.

ஆரம்பத்தில் தங்கத்தின் தாயாகப் பண்டரிபாயைப் பார்த்ததுமே அவள்தான் உண்மை ஜமீன்தாரிணி என்பது எல்லோருக்கும் புரிந்து விடுகிறது. ஆனால் தங்கத்துக்கு மட்டும் புரியவில்லை! அவளுக்குப் புரிந்து விட்டால் அப்புறம் படத்தை 14,959 அடி நீளம் நீட்டமுடியாமல் போய் விடுமே! அதற்கு வழி செய்ய வேண்டுமே!

எம். ஆர். ராதா ஜமீன்தார் முத்து ரத்தின பூபதி. அவருக்குப் பழகிப்போன பாகம். மனைவியையும், மகளையும் அறிந்து கொள்ளும்போது அவர் துயரத்தால் விம்மும் காட்சி உருக்கமாயிருக்கிறது.



தாம்பரம் லலிதா அமுதாவாக நடிக்க ஏற்ற நடிகைதான்.

புஷ்பலதா கொங்கு நாட்டுத் தங்கமாக வருகிறார். தங்கமாக நடிக்கிறார் என்று சொல்ல முடியாது. வசனங்களைப் பாடம் செய்து ஒப்பிக்காமல், உணர்ச்சியோடு பேசப் பழக வேண்டும்; முகபாவங்களும், குரலின் குழைவுகளும் தான் பாத்திரத்துக்கு உயிர் ஊட்ட முடியும் என்பதை அவர் தெரிந்துகொள்ள வேண்டும். ஆனால் இந்தப் படத்தில் முகமூடி அவரை முடிந்தவரையில் காப்பாற்றியிருக்கிறது! வாழ்க முகமூடி!

தேவர் பிலிம்ஸின் தயாரிப்பு என்றால், அதில் விலங்குகள் தான் நடிப்பில் நல்ல பெயரைத் தட்டிக்கொண்டு போவது வழக்கம். இந்தப் படமும் அதற்கு விலக்கல்ல.

படத்தின் நல்ல முடிவுக்கே முக்கிய காரணமாக இருக்கின்றன ஒரு குதிரையும் நாயும். 'படம் விறுவிறுப்பாக ஓடவில்லை' என்று விமரிசகர்கள் எழுத முடியாதபடி செய்து விட்டது அந்தக் குதிரை. அடேயப்பா, என்ன ஓட்டம்! என்ன ஓட்டம்!

ஆனந்தன் திவான் ராஜவேலாக வந்து குதிரை சவாரி, கத்திச் சண்டை, நடனம் எல்லாம் செய்வதுடன் கொங்கு நாட்டுத் தங்கத்தைக் காதலிக்கவும் செய்கிறார். ஆனால் ஒன்று மட்டும் மறந்து விட்டார்; நடிப்பதற்குத்தான்.

வி. ஆர். ராஜகோபால், ஆர். ராஜகுமாரி இருவரும் படத்தின் ஹாஸ்யப் பகுதியைச் சுவாரஸ்யமாக எல்லோரும் ரசிக்கும்படி செய்திருக்கின்றனர்.

இந்தப் படத்தில் குதிரை வரும் பின்னே, குளம்பொலி வரும் முன்னே! இது அதிசயத்திலும் அதிசயம் இல்லையா?

ஜமீன்தார்க் கதையைக் கட்டிக்கொண்டு அழும் வழக்கம் என்று ஒழியுமோ நம் படவுலகை விட்டு! இந்தப் படம் எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்பு வெளிவந்திருக்க வேண்டும்! அல்லது இப்பொழுதாவது வெளிவராமல் இருந்திருக்க வேண்டும்!

இந்தப் படத்தில் வரும் முகமூடிகளுக்குக் கணக்குவழக்கே இல்லை; படம் பார்ப்பவர்களும் முகமூடியுடன் போவது நல்லது! —காந்தன்



# திருமூலர் தவமொழி

## ராஜாஜி - சோமு

### 3

**ந**ம்முடைய உபதேசத்தின் தொடக்கத்தில் கடவுளை வாழ்த்தி வணங்குகிற திருமூலர், இனி இறைவனுடைய குணங்களைச் சொல்லித் துதிக்கிறார்.

**தீயினும் வெய்யன்**
**புனலினும் தண்ணியன்**

என்கிறார். புனல் — தண்ணீர். பாபங்களையும் இன்னல்களையும் எரிப்பதில் தீயை விட மிக வேகத்துடன் எரிப்பவன் இறைவன்! பக்தர்களுக்கு அன்பு அருள்வதிலோ தண்ணீரை விடக் குளிர்ச்சியானவன்!

**தீயினும் வெய்யன்**
**புனலினும் தண்ணியன்**
**ஆயினும் ஈசன்**
**அருள் அறிவார் இல்லை!**

நம்முடைய பாபங்களை எரிப்பதில் தீயைவிட வெம்மையாகவும், நமக்கு அன்புடன் அருள் வழங்குவதில் தண்ணீரை விடக் குளிர்மையாகவும் இருந்தும் கூட அவனுடைய அருளின் அளவை உள்ளபடி அறிகிறவர்கள் இல்லையே என்று உருக்கத்தோடு வருந்திக் கூறுகிறார் முனிவர். அந்தத் துயரம் அடுத்த வரியிலே இறைவனின் குண அழகைச் சிந்தித்து ஈடுபடுகிற பக்தியாக மாறுகிறது.

**சேயினும் நல்லன்;**
**அணியன்; நல் அன்பர்க்குத்**
**தாயினும் நல்லன் —**

(சேய்—குழந்தை; அணியன்—மிகச் சமீபத்தில் அணுகி நிற்கிறவன்)

குழந்தையினுடைய உள்ளம் அன்பு மயமானது. கணக்குப் போட்டுப் பார்த்து லாபம் கருதி வழங்குகிற அன்பு இல்லை அது. எனவே 'நல்ல' என்ற அடைமொழியோடு சொல்லக் கூடிய அன்பு குழந்தையின் அன்பே. அந்த நல்லன்பைவிட நல்ல அன்பு இறைவன் நம்மிடம் செலுத்துகிற அன்பு! ஏனென்றால் குழந்தையின் அன்பு வயது முதிர்ந்ததும் மாறுதல் அடையும் தன்மை கொண்டது. இறைவன் அப்படியில்லை. அவன்,

**"சேயினும் நல்லன்!"**

இனி, இறைவனிடத்தில் இத்தகைய குழந்தை அன்பைச் செலுத்துகிற பக்தர்களும் இருக்கிறார்கள் அல்லவா? அவர்களுக்கு இறைவன் எப்படிக் கருணை செய்கிறான்? தாயைப் போலும் தாயை விடவும் அன்பு செலுத்துகிறான்:

**"தாயினும் நல்லன்"**

குழந்தையினுடைய துயரைத் துடைக்கும் வழி குழந்தைக்குத் தெரியாது. எது வேண்டும், எது நல்லது என்று அறிந்துகொள்ள இயலாத குழந்தைக்கு அதன் இயல்பும், அதன் நலமும் அறிந்து அன்பைச் சொரிகிறாள் தாய். அந்தத் தாயன்பைவிடச் சிறந்ததொரு அன்பு இறைவனுடைய அன்பு.

இத்தனை குணங்களையும் கூறிக் கொண்டே வருகிற முனிவர், அந்தக் குணங்களுக்கெல்லாம் நிலையமாகத் திகழும் பரமேசுவரனைக் கண் முன்னே கொண்டு நிறுத்தி வழிபடுகிறார், நீண்ட சடையோடு கூடிய சிவபெருமான் என்று பாடலை முடிக்கிறார்.

**தீயினும் வெய்யன்**
**புனலினும் தண்ணியன்**
**ஆயினும் ஈசன்**
**அருளறி வார் இல்லை;**
**சேயினும் நல்லன்**
**அணியன்; நல் லன்பர்க்குத்**
**தாயினும் நல்லன்; பின்**
**தாழ்சடை யோனே!**

# வள்ளலுக்கு வெள்ளிவிழா

சென்னை பச்சையப்பன் கல்லூரியில் குறைந்த வருவாய்க்குச் சிற்றாசிரியராகப் பணியாற்றி எளிய வாழ்க்கை நடத்தி வந்தார் சேது என்ற ஓர் இளைஞர். அந்தக் காலத்தில் பச்சையப்பன் கல்லூரி சைனாபஜார் ரோடில் இப்போது பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளி இருக்குமிடத்திலேயே அமைந்திருந்தது. அதன் பக்கத்திலேயே இருக்கும் சட்டக்கல்லூரி சேதுவின் கவனத்தைக் கவர்ந்தது. ஆசிரியராகத் தொண்டாற்றிய நேரம் போக மற்றச் சமயங்களில் சட்டம் படித்துப் பின்னர் நெல்லைக்கு வழக்கறிஞராகச் சென்றார். செல்வமும் செல்வாக்கும் அவரைச் சென்றடைந்தன.

அதோடு அரசியலிலும் புகுந்து விரைவிலேயே நெல்லை நகராட்சி மன்றத்தின் உபதலைவராகவும் ஆகிவிட்டார்!

அப்போதுதான் சுற்றிலுமிருந்த சில பிரமுகர்கள் திடுக்கிட்டு விழித்துக் கொண்டனர். தமிழாசிரியராகத் தமது வாழ்க்கையைத் தொடங்கிய சேதுவை மறுபடியும் தமிழாசிரியர் தொழிலிலேயே தள்ளிவிட வேண்டியது; அப்புறம் தலையெடுக்க முடிகிறதா, பார்ப்போம் என்று கங்கணம் கட்டிக் கொண்டார்கள்.

'நல்ல தமிழ்ப் பண்டிதர் ஒருவர் இங்கே இருக்கிறார். அனுபவமிடமாக அரசியலில் ஈடுபட்டுக் கெட்டுப் போகிறார். அவரை அண்ணாமலை பல்கலைக் கழகத்துக்கு அழைத்துப் போங்கள்' என்று ராஜா சர் அண்ணாமலைச் செட்டியாரை அணுகிக் கேட்டுக் கொண்டார்கள். அதன் மூலம் தமிழ் நாட்டுக்கும் தமிழ் மொழிக்கும் தங்களை அறியாமல் அரிய சேவை புரிந்தார்கள்! அவர்கள் மட்டும் அப்படிக் கோரியிருக்க வில்லையானால் சென்னை பல்கலைக் கழகம் திரு ரா. பி. சேதுப்பிள்ளை அவர்களது இருபத்தைந்து வருஷச் சேவையைப் பயன்படுத்திக் கொள்ள முடிந்திருக்குமா? தமிழ்த் தாத்தாவுக்குப் பிறகு 'டாக்டர்' பட்டத்தை அவருக்கு வழங்கிக் கௌரவித்துத் தானும் பெருமையுறும் சந்தர்ப்பம்தான் அமைந்திருக்குமா? அல்லது அந்த வள்ளலுக்கு வெள்ளி விழா கொண்டாடும் வாய்ப்புத்தான் கிட்டியிருக்குமா?

சென்னை செனட் மண்டபத்தில் நடைபெற்ற அந்த விழாவிலே வ. உ. சி. கல்லூரி பிரின்ஸிபால் பேராசிரியர் அ. சீநிவாசராகவன் டாக்டர் சேதுப்பிள்ளை அவர்கள் கல்கியில் தொடர்ந்து எழுதி வந்த 'ஆற்றங் கரையினிலே' என்ற நூலைப் புத்தக உருவிலே வெளியிட்டார்கள்.

வெள்ளி விழாவினை யொட்டி அறிஞர்கள் பலர் எழுதிய கட்டுரைகளைத் தொகுத்துத் தரும் புத்தகத்தினை திரு தனிநாயகம் அடிகள் வெளியிட்டார்கள்.

அன்று சென்னைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் டாக்டர் லக்ஷ்மணசாமி முதலியார் குறிப்பிட்டது போல் சேதுப்பிள்ளை அவர்கள் வலது கையால் கொடுப்பது அவரது இடது கைக்குக் கூடத் தெரியாது. ஆனால் அவர் பகிரங்கமாக, கேட்கக் கேட்க இல்லை யெனாது வாரி வழங்கிய தொன்றும் உண்டு. அது சொல்லின் செல்வர் அள்ளிச் சொரியும் தமிழின்பம்.

தமிழின்பம் என்ற அவரது நூலுக்காக சாகித்திய அகாடமி அளித்த ஐயாயிரம் ரூபாய் பரிசுடன் இன்னுமொரு இருபதாயிரமும் சேர்த்துச் சென்னைப் பல்கலைக் கழகத்துக்குத் தாயாரின் நினைவைப் போற்றும் முறையிலே தந்துவிட்டது அவரது உதார குணத்தையும் தாயன்பையும் ஒருங்கே புலப்படுத்துகிறது. தமிழ் மொழி சிறப்புற விளங்க ஆக்க வேலைகளுக்காக அவர் இதுபோன்று வழங்கியுள்ள தொகைகள் பல.

திரு சேதுப்பிள்ளை அவர்கள் கிறிஸ்துவப் பள்ளியில் படித்து வந்த காலத்திலே அவர் பேசிய ஒவ்வொரு தமிழ்ச் சொல்லுக்கும் ஒரு பைசா அபராதம் செலுத்த வேண்டும் என்று உத்தரவு போட்டாராம் உபாத்தியாயர். பல வருஷங்களுக்குப் பின்னால் அவரை ஒரு பொதுக் கூட்டத்தில் சந்திக்க நேர்ந்தபோது சேதுப்பிள்ளை கேட்டார்: "சுமார் இரண்டாயிரம் தமிழ் வார்த்தைகள் இப்போது பேசப் போகிறேன், அபராதம் எவ்வளவு செலுத்த வேண்டும்?"

இதே கேள்வியைத் தமிழ் மக்களிடம் கேட்டிருந்தால், "இன்னுமொரு இரண்டாயிரம் தமிழ் வார்த்தைகள் பேசுவதுதான் உமக்குத் தண்டனை!" என்று பளிச்சென்று பதில் கிடைத்திருக்காதா?

டாக்டர் சேதுப்பிள்ளை அவர்கள் சொல்மாரி பொழிய, அந்தத் தமிழின் பத்தில் ஆனந்தமாகத் திளைத்துக் கொண்டிருக்கலாம் என்ற பேராசைதானே நமக்கு!

டாக்டர் சேதுப்பிள்ளை அவர்களின் திருவுருவப் படத்தைச் சென்னைப் பல்கலைக்கழகத் துணை வேந்தர் ஸ்ரீ ஏ.எல். முதலியார் திறந்துவைத்தார்.

சித்திரை வெய்யில் தெருவில் அனலாக வீசிக் கொண்டிருந்தது. இருந்தாலும் அதை இலட்சியம் பண்ணுமல் மேலத்தெரு ராமகப்புவின் வீட்டுக்குப் புறப்பட்டேன் நான். விடுமுறையில் கிராமத்துக்கு வரும்போதெல்லாம் பொழுது போவதற்கு அவருடைய வீட்டுத் திண்ணை தான் எனக்குப் பெரும் துணையாக இருக்கும். இது கல்லூரியில் படித்த நாளில் ஏற்பட்ட பழக்கம். இப்போது வேலை தேடிக் கொண்டு ஒரு வருஷ இடைவெளிக்குப் பிறகு வந்திருக்கும்போதும் என் கால்கள் அதே இடத்தை நாடி விரைந்தன.

மேலத் தெருவில் கோடி வீடு ராமகப்புவுக்குப் பெரிய மூன்று கட்டு வீடு. வாசலில் கோடைப பந்தலில் தண்ணீர் தெளித்து 'ஜிலு-ஜிலு'வென்று இருக்கும். எதிர் வரிசையில் இதற்கு ஜோடியாய் நாலைந்து வீடுகள் தள்ளி-மைனர் வீடு. தெருவுக்கே இந்த இரண்டு வீடுகளும் எடுப்பானவை.

ராமகப்பு பக்கத்தில் வெற்றிலைப் பெட்டியுடன் சின்னத் திண்ணை சாய்மனையில் அமர்ந்திருந்தார். விக்கிரமாதித்தனின் காடாறு மாசம், நாடாறு மாசம் மாதிரி கோடை காலத்துக்கு வெற்றிலை சீவல், வாசனைப் புகையிலையும், குளிர்காலத்துக்கு அசல் பட்டணம் பொடியும் உபயோகிப்பார் அவர். அறுபது வயதைக் கடந்தும் ருசியும் பார்வையும் குறையவில்லை அவருக்கு.

"என்ன அம்மாஞ்சி! (ஊரில் அவருக்குச் செல்லப் பெயர் இது) சௌக்யமா?" என்று கேட்டுக் கொண்டே படியேறினேன்.

"யாரு? குப்புசாமி பிள்ளையாடா? வா." போன தலைமுறையைச் சேர்ந்த ராமகப்பு தன் தலைமுறையைச் சேர்ந்தவர்களைக் கொண்டுதான் இளவட்டங்களை அழைப்பார்.

"ஆமாம், அம்மாஞ்சி! காலை வண்டியிலே தான் வந்தேன். ஒரு மாசம் லீவு" என்று அவருடைய அடுத்த கேள்விகளுக்கும் சேர்த்துப் பதிலைச் சொல்லி விட்டுத் திண்ணையில் உட்கார்ந்தேன்.



இரண்டு நிமிஷங்கள் மௌனமாய்க் கழிந்தன. ராமகப்புதான் எத்தனை கதைகள் சொல்லியிருக்கிறார்! அத்தனையும் அவருடைய வாழ்வின் அனுபவங்கள்.

திடீரென்று என்ன நினைவு வந்ததோ, 'உம் உம்' என்று புகையிலை பாஷையில் சொல்லிக் கொண்டே எழுந்த ராமகப்பு வாயமுதைத் துப்பி விட்டு வந்தார்.

"மைனர் வீட்டைப் பார்த்தியா? மைனர் போயிட்டார். அந்தத் திண்ணையே பாழாய்ப் போச்சு.ஏன், தெருவே களையிழந்து போச்சு."

திரும்பி எதிர் வரிசையில் அந்த வீட்டைப் பார்த்த பொழுது நானும் திடுக்கிட்டேன். வெளித் தாழ்வாரத்தில் சாய்வு நாற்காலியைக் காணவில்லை. அதில் அமர்ந்து முன் வழுக்கையைத் தடவியபடி தெருவோடு போகிறவர்களையும் வருகிறவர்களையும் அதிகாரமாக விசாரித்துக் கொண்டிருந்த மைனரும் இல்லை. ராமகப்பு சொன்னது சரிதான். மைனர் வீடு ஜீவ களை இழந்து கிடந்தது. சென்ற வருஷம் நான் வந்த போதுகூட இருந்தாரே மனிதன் தளதளவென்று பழுத்த பரங்கிப் பழம் மாதிரி!

"நிஜந்தானு? மைனரா செத்துப் போய் விட்டார்...?"

"ஒரு விதத்தில் அது நிஜம். ஒருவிதத்தில் அதுவே பொய். நான் இருக்கிற வரை என் மனசை விட்டு அந்த உருவமும் நினைப்பும் மாத்திரம் செத்துப் போகாது!"

சில விநாடிகள் ராமகப்பு அந்த நினைவுகளில் ஆழ்ந்து போனார். வயோதிகத்தில் பழைய நினைவுகள் - வாழ்வின் வசந்தம் போன்ற இளமை, அதன் உணர்ச்சிக் குவியலான சம்பவங்கள் எத்தனை சோகம் கலந்த இன்பச் சுரங்கம். விழிக்கடைகளில் திரண்ட முத்துக்களை ஒத்தியெடுத்தார் ராமகப்பு. மைனருக்கு அவர் செலுத்திய அஞ்சலி அது என்று நினைத்ததும் எனக்குச் சிலிர்த்தது.

"ஊரில் மைனரைப் பற்றி யாருக்குமே நல்ல அபிப்பிராயம் கிடையாது. நாற்பது வேலி நிலத்தை அழித்து, நாலு வேலியாக மாறின பிறகும் திமிர் அடங்கவில்லை என்று சொல்வார்கள். இருந்தும் கடைசி மூச்சுப் பிரிகிற வரையில் யாருக்கும் மைனரின் எதிரில் நின்று பேசத் தைரியம் கிடையாது. அதே மைனர் சிநேகிதத்துக்காக உயிரையும் கொடுக்கத் துணிந்த சமயமும் உண்டு. அது எனக்கும் அவருக்கும்தான் தெரியும்."

"சொல்லுங்கோ, அம்மாஞ்சி!" என்றேன் ஆவலோடு.

"சொல்லத்தானே போகிறேன்" என்று சீவலை எடுத்து வாயில் போட்டுக் கொண்டார். காம்பைக் கிள்ளிவிட்டு வெற்றிலையில் சுண்ணும்பைத் தடவினார். கடைசியில் புகையிலையைத் திரட்டிக் கடைவாயில் அடக்கிக் கொண்டு ஒரு முறை கனைத்துக் கொண்டார்.

*

இருபத்தி நான்கு வயதில் தலையில் கட்டுக் குடுமி; வைரக் கடுக்கன்கள்; பார்வையைப் பறிக்கும் ஆறடி உயரத்துக்குப்



# கதை அல்ல...

கு. வேங்கடரமணி

'பளிச்' சென்ற சிவப்பு மேனி. இதுதான் மைனரின் அந்த நாளைத் தோற்றம். பெரியவர் காலமாகிப் பெட்டிச் சாவி கையில் வந்து ஏழெட்டு மாதங்கள்தான் ஆகியிருக்கும்.

ராமகப்புவுக்கு இன்னும் இரண்டு வயது அதிகமாய் இருக்கும். மைனரைப் போல் வசதியான குடும்பம் இல்லை. ஆனால் இரண்டு பேர்களுக்கும் நடுவில் எந்த விதமான வித்தியாசமும் இல்லாமல் மனம் ஒன்றிப் பழகினார்கள். முக்கியமாய் மைனருக்கு ராமகப்பு இல்லாமல் ஒரு நிமிஷம் இருப்புக் கொள்ளாது.

தெருக் கோடியில் — இப்போது தென்னந் தோப்பு இருக்கும் இடத்தில் - நாலு பக்கமும் இளுவை வேலி அடைத்து நடுவில் அழகாக ஒரு 'சவுக்கண்டி' கொட்டகை; கண்ணுக்கு அழகாய் விதம் விதமான செடி கொடிகள்; தென்னங் கன்றுகள். வாசலில் எப்பொழுதும் தயாராய்க் குதிரையும், வண்டியும் காத்துக் கொண்டிருக்கும். அந்தக் காலத்தில் அதற்குத்தான் நல்ல 'மவுசு'.

சாப்பாடு மட்டிலும் வீட்டில். மற்றபடி டிபன், காப்பி எல்லாம் சவுக்கண்டிக்கு வந்துவிடும். கூப்பிட்ட குரலுக்கு ஏன் என்று கேட்க ஒரு வேலைக்காரன். மைனரின் வண்டிக்கும் அவன்தான் சாரதி. சீட்டாடவும், அரட்டையடிக்கவும் ஒரு 'ஜமா' அங்கே சுற்றிக்கொண்டேயிருக்கும். நாற்பது—ஐம்பது மைலுக்குள் எங்கே நாடகம் நாட்டியம், பாட்டுக் கச்சேரி நடந்தாலும் சரி, மைனரின் வண்டியைப் பூட்டிக் கொண்டு கிளம்பி விடுவார்கள். வெள்ளி வெற்றிலைப் பெட்டியுடன் மைனர் முதல் வரிசையில் அமர்ந்திருப்பார். பக்கத்தில் ராமகப்புவும் தப்பாமல் உட்கார்ந்திருப்பார். மைனரின் ஆரம்ப கால வாழ்க்கை இது. அப்போதெல்லாம் இதற்கு மேல் ஒரு 'தப்புத் தண்டா' கிடையாது.

அப்போதுதான் ஒரு நாள் மைனரின் கவனம் திரும்புகிற கட்டம் வந்தது. ராமகப்புவுக்கும் அவருக்கும் இருந்த அந்தரங்கமான நட்பில் பிளவு ஏற்படுகிற சந்தர்ப்பமும் வந்து சேர்ந்தது.

திண்ணைப் பள்ளிக்கூடம் நடத்திக் கொண்டிருந்த ராமையா வாத்தியார் வீட்டுக்கு

அவருடைய மைத்துனி பெண் வந்திருந்தாள். அவளுடைய வருகை ஊரிலேயே ஒரு கலகலப்பை உண்டுபண்ணி யிருந்தது. அந்தக் காலத்தில் பதினெட்டு வயதுப் பெண் கல்யாணம் ஆகாமல் நிற்பதே பெரிய அதிசயம். அதுவும் பட்டணக் கரையில் பிறந்து வளர்ந்த பெண். இரட்டைப் பின்னலும் காலில் செருப்புமாக அவள் தெருவோடு நடந்தால் எல்லாரும் வாயைப் பிளந்துகொண்டு பார்ப்பார்கள். தலை மறைந்ததும் 'கச முச' வென்று பேசுவார்கள்.

இவளை மைனர் முதல் தடவை பார்க்கிற போது, ராமகப்புவும் பக்கத்திலேயே இருந்தார். அதாவது இருவருடைய பார்வையிலும் ஒரே சமயத்தில் பதிந்தது அவளுடைய அழகிய உருவம்.

அப்போது மைனரின் வண்டி பதினைந்து நாட்களுக்கு மேல் வெளியூர்களில் 'முகாம்' போட்டுத் திரும்பிக் கொண்டிருந்தது. மேலத் தெருவுக்குள் வண்டி நுழையும்போது, ராமையா வீட்டு வாசலில் அந்தப் பெண் நின்று கொண்டிருந்தாள்.

மைனருக்கு ஆச்சரியம் தாங்கவில்லை.

"டேய், ராமகப்பு! யாருடா இது?" என்று அதிசயத்தோடு கேட்டார் அவர்.

"சுத்த அநாகரிகமா நடுவழியில் முகத்துக்கு நேராகவா விசாரிக்கிறது? வா, நம்ம இடத்துக்குப் போய்ப் பேசிக் கொள்ளலாம்" என்று மைனரை அடக்கினார் ராமகப்பு. உள்ளூற ராமகப்புவுக்கும் நெஞ்சு இடந்து 'பட பட'வென்று அடித்துக் கொண்டது. 'ஏ அப்பா! என்ன அழகு! எத்தனை நாகரிகம்!'

சவுக்கண்டியை அடைந்ததும் மறுபடியும் மைனர் 'எண்ணமெல்லாம் கனவாக - அந்தக் கனவெல்லாம் தானாக' நிறைந்துவிட்ட அந்தப் பெண்ணைப் பற்றியே பேசினார்.

"ஏ, ராமகப்பு! அந்தப் பெண் யார்? அவள் எதிரில் அவள்மேல் வைத்த கண்ணை எடுக்க முடியல்லே. இப்போ அவள்மேல் வைத்த மனசை எடுக்க முடியலையே!"

"எனக்குத் தெரியாது. யாரோ ஊருக்கே புதிசு போலிருக்கு!"

"என்கிட்ட கதை விடாதே! உன் வீட்டுக்கு நேர் எதிர் வீடு. உனக்குத் தெரியாமலா இருக்கும்?"

மைனரின் கேள்வியும் குரலும் ஒரு மாதிரியாய் ஒலித்ததாக ராமகப்பு உணர்ந்தார். இத்தனை காலம் தன்னிடம் வைத்திருந்த நம்பிக்கையில் மைனர் இப்போது மாறுபடுவதாகத் தோன்றியது.

கொஞ்ச நேரத்தில் காப்பியோடு வந்த சமையற்காரன் எல்லாக் கதையையும் சொல்லிவிட்டான்.

அவள் பெயர் கல்யாணியாம். ராமையாவின் மைத்துனி பெண் அவள். கல்யாணியின் தகப்பனார் பட்டணத்தில் சுமாரான வருமானத்தில் வேலையில் இருந்தார். கோடை விடுமுறைக்காக அவள் வந்திருப்பதாகவும் இன்னும் ஒரு மாதம் இங்கே தங்குவாள் என்றும் தெரிந்தது.

"அற்புதமாய் இருக்கிறாள். என்ன இருந்தாலும் பட்டணத்துக்காரி இல்லையா?"— மைனரின் ரஸிகத் தன்மை பேசிற்று.

ராமகப்புவுக்குக் கல்யாணியின் தோற்றம் அற்புதமாய்த் தோன்றினாலும் அதைப் பற்றி மைனரின் விமர்சனம் ரஸிக்கவில்லை.

"உம்... ஆமாம்" என்று மென்று விழுங்கினார் அவர்.

இரண்டு நாட்களிலேயே நிலைமை தலைகீழாக மாறிவிட்டது.

ராமகப்பு மைனரின் சவுக்கண்டிக்குப் போவது நின்று விட்டது. அரை மணி நேரம் தன் தோழனைக் காணவிட்டால் மூன்று தடவைகள் ஆள் அனுப்பி விடும் மைனர்கூட இதைப்பற்றிக் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. அது மட்டும் இல்லை. எதிர் வீட்டுக்கு — ராமையாவின் வீட்டுக்குத்தான் — மைனர் வந்து திண்ணையில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார். அந்த ஜோரில் எதிரில் நின்ற ராமகப்புவின் உருவம்கூட அவர் கண்ணுக்குத் தெரியவில்லை.

நாலைந்து நாட்கள் கழிந்த பிறகு ஊரில் ஒரு செய்தி பரவியது.

'மைனர் கல்யாணியைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறார். பெண் கேட்டுப் பெண் வீட்டுக்காரர்களும் சம்மதித்து விட்டார்களாம்.'

ராமகப்பு ஒரு முறை பெருமூச்சு விட்டார். அவர் அதோடு நிம்மதியாகவும் இருந்திருப்பார். ஆனால் அன்று மாலை நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சி அவரை அப்படி இருக்கவிடவில்லை.

விளக்கு வைக்கும் நேரம். குளத்தங்கரை மதகடியோடு ராமகப்பு நடந்து கொண்டிருந்தார். அப்போது இடுப்பில் குடத்துடன் படித்துறையில் இருந்து தனியாக வந்த கல்யாணியைக் கண்டார். இவரைப் பார்த்ததும் அவள் அப்படியே நின்றாள்.

"உங்களைத் தனியாகப் பார்க்கணும் என்று நாலு நாட்களாய்க் காத்துக் கொண்டிருக்கிறேன்" என்றாள் கல்யாணி.

"என்னையா? எதற்கு!"

"ஆமாம், உங்களைத்தான். ஊரில் என்ன பேசுகிறார்கள் என்று உங்களுக்குத் தெரிந்திருக்குமே?"

"உம், அதுவா? உனக்கும் மைனருக்கும் கல்யாணம் என்கிற விஷயம்தானே?"

"அதுதான். அதைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்னவோ?"

"ஏன், வசதியான இடம். பையனும் ராஜா மாதிரி இருக்கான்."

"அப்புறம்?"

"அதற்குமேல் நான் என்ன சொல்வேன்?"

"உங்களுக்கு இந்தக் கல்யாணத்தில் பூரண சம்மதந்தானா? அதைக் கேட்கத்தான் காத்துக் கொண்டிருந்தேன்."

"அதையெல்லாம் இனிமேல் சொல்லி என்ன பண்ணுகிறது!"

"ஏன் இந்தக் கல்யாணத்தை நிறுத்த ஏதாவது வழி சொல்லக் கூடாதா நீங்கள்?"

"கல்யாணி!" ராமகப்பு துள்ளினார்.

"நீங்கள் இரண்டு பேரும் வண்டியிலே வரும்போது உங்களைத்தான் நான் முதன் முதலிலே பார்த்தேன். உங்களிடத்திலே தான் என் மனசு..."

கல்யாணி முடிக்க வில்லை. அதற்குள் ஓடி விட்டாள். ராமகப்புவோ கல்லாய் நிலைத்து நின்று விட்டார் அங்கேயே வெகு நேரம்.

தான் நினைத்தது போலவே கல்யாணியும் நினைக்கிறாள்; தன் நெஞ்சில் துளிர்விட்ட ஆசை அவளுடைய நெஞ்சிலும் துளிர்த்திருக்கிறது. இதோ அவளே அதைச் சொல்லிவிட்டாள். இனிமேல் ராமகப்பு என்ன செய்யப் போகிறார்? எப்படி இந்தக் கல்யாணத்தை அவரால் நிறுத்த முடியும்? எப்படியாவது கல்யாணிக்குப் பிடிக்காத இந்தக் கல்யாணத்தை நிறுத்தியே ஆகவேண்டும். இல்லாவிட்டால் அவர் ஆண் மகனே இல்லை!

முதலில் சமாதானமாகவே முயற்சி செய்து பார்க்கலாம் என்று நினைத்தார் ராமகப்பு. என்ன இருந்தாலும் நேற்று வரையில் அவரும் மைனரும் ஓர் உயிராய்ப் பழகினவர்கள். மைனரிடம் போய் விவரமாக எடுத்துச் சொன்னார். மைனரின் பதில் அலட்சியச் சிரிப்போடு வந்தது.

"போடா, பைத்தியக்காரா! யாரிடம் கதை அளக்கிறே? கல்யாணி உன் பேரில் ஆசை வைத்து விட்டாளோ? என்னை வேண்டாம் என்று சொல்ல அவளுக்குப் பைத்தியமா பிடிச்சிருக்கு?"

"என்னிடம் நம்பிக்கை இல்லாவிட்டால் நீயே அவளைக் கேட்டுப் பாரேன். நான் நேற்று வரையில் உன் கல்யாண விஷயத்தில் தடையாக வந்தேனா?"

"உன்னால் இனிமேலும் தடுக்க முடியாது. தேதிகூட வைத்தாகி விட்டது. மரியாதையாக ஒதுங்கி விடு. அதுதான் நல்லது!"

"என்னை அவ்வளவு இலேசாய் நினைத்துவிட வேண்டாம். நான் யார் என்பது போகப் போகத் தெரியும். உனக்கும் கல்யாணிக்கும் கல்யாணம்நடப்பதைப்பார்த்துவிடுகிறேன்."

சத்தம் போட்டு விட்டுச் சவுக்கண்டியை விட்டு வெளியேறினார் ராமகப்பு. ஆனால் அது நிறைவேறுகிற வழி?

இரவும் பகலுமாய் இதே எண்ணத்தில் குழம்பினார் ராமகப்பு. வருஷக் கணக்காய் இழைந்து பழகின சிநேகம் இப்படிப் போட்டியில் வந்து முடியும் என்று அவர் நினைக்கவே இல்லை. மைனருக்காக அவர் விட்டுக் கொடுக்கலாம். கல்யாணியும் பெண்தானே. மைனருக்கு மாலையிட்ட பிறகு ஒரு நாள் மாலைப் பொழுதில் குளத்தங்கரை மதகடியில் தம்மிடம் சொன்னதை அவளும் மறந்து விடலாம். ஆனால் எதிர்த்தாற்பால் அவளும் மைனரும் வாழும்போது அவரால் பார்த்துக்கொண்டிருக்க முடியுமா? அவர் நெஞ்சில் கல்யாணியின் குரல் எதிரொலித்துக் கொண்டேயிருக்குமே!

நாட்கள் ஓடிக்கொண்டே யிருந்தன. கல்யாண நாள் நெருங்கி வந்து கொண்டேயிருந்தது. கடைசியில் இதோ நாளைக்கே அந்த நாளும் வந்துவிடப் போகிறது. மைனரின் செலவில் ஏற்பாடுகள் தடபுடலாய் நடந்தன. தெருவை அடைத்து — ராமையா வாத்தியார் வீட்டுக்கும் மைனர் வீட்டுக்குமாக — ஒரே பந்தல். பத்து வில்வண்டிகள் எப்பொழுதும் தயாராகப் பூட்டி நின்று கொண்டிருந்தன.

இரவு மாப்பிள்ளை அழைப்புக்குத் தஞ்சாவூர் பாண்டு; செம்பொன்னார் கோவில் 'பெரிய மேளம்' எல்லாம் ஏற்பாடாகியிருந்தன. இன்னும் சில மணி நேரம். மைனர் கழுத்தில் மாலையோடு 'ஜம்'மென்று ஜானவாசம் கிளம்பி விடுவார்.

ராமகப்பு திண்ணையில் பிரமையடித்துப் போய் உட்கார்ந்திருந்தார். அவரால் இந்தக் கல்யாணத்தை நிறுத்தவே முடியாதா?

திடீரென்று மனசில் வெட்டிய ஓர் எண்ணம் அவரைத் துள்ளி யெழ வைத்தது.

'அதுதான் சரியான வழி. ராத்திரி ஒன்பது மணிக்கு மேல்தானே மாப்பிள்ளை அழைப்பு? அதற்குள் ஒரு முறை மைனரைத் தனியாகச் சந்திக்க முடியாதா? சந்தித்து விட்டால் போதும். மண்டையில் ஒரே போடு. அப்புறம் ஆள் எழுந்திருக்க மாசக் கணக்காய் ஆகும். கல்யாணி அதுவரையில் காத்துக்கொண்டா இருக்கப் போகிறாள்? பார்த்து விடலாம் ஒரு கை.'

இருள் படர்ந்தது. கல்யாணப் பந்தலுக்குள் 'பெட்ரோமாக்ஸ்' விளக்கு 'உஸ்' என்ற இரைச்சலோடு ஒளிர்ந்தது. ராமகப்பு திண்ணையில் தூண் மறைவில் உட்கார்ந்து மைனரின் வீட்டைக் கண்கொத்திப் பாம்பாக ஊடுருவிக் கொண்டிருந்தார்.

அவர் எதிர்பார்த்தது வீண் போகவில்லை. மைனர் வீட்டை விட்டு வெளியே வந்தவர், தெருவில் இறங்கித் தனியாக நடந்தார். ராமகப்பு பத்து கஜம் பின்னாலேயே இருளோடு மறைந்து கொண்டே பின்னால் நடந்தார். மைனர் வேகமாக முன்னால் சவுக்கண்டியை நோக்கி விரைந்தார்.

சவுக்கண்டியில் வெளிச்சம் இல்லை. ராமகப்புவின் உருவம் வேலியோரத்தில் ஒதுங்கியது. உள்ளே மெதுவான குரலில் மைனர் ஏதோ பேசுவது கேட்டதே தவிர, விவரம் ஒன்றும் புரியவில்லை. இரண்டு நிமிஷங்களில் யாரோ நாலைந்து ஆட்கள் வெளியேறிச் சென்றனர். ராமகப்பு கூர்ந்து கவனித்தார். மைனர் அந்தக் கோஷ்டியில் இல்லை.

'இருக்கட்டும்; வரட்டும் வெளியே!' என்று காத்துக் கொண்டிருந்தார் ராமகப்பு.

நேரம் நகர்ந்தது. அரை மணி கழிந்திருக்கும். வெளியே காலடி ஓசை கேட்டது. மைனர் அவசரமாகச் சவுக்கண்டியை விட்டு வெளியேறி, ஆற்றங்கரைக்குச் செல்லும் பாதையில் வேகமாக நடந்தார். ராமகப்புவும் பின்னாலேயே எட்டிப் போட்டார். இதோ வரப் போகிறதே அவர் எதிர்பார்த்த சந்தர்ப்பம்! மைனர் தாமாகவே வலையில் வந்து விழப் போகிறாரே!

ராமகப்புவின் கையிலிருந்த கொண்டைக் கழி அவருடைய பிடிக்குள் நெறிபட்டுத் துடித்தது.

மைனரின் நடையில் வேகம் அதிகமாயிற்று. ஒற்றையடிப் பாதையோடு அவர் ஓடத் தொடங்கி விட்டார். ராமகப்புவும் ஓடினார். ஆனால் மைனரை எட்டிப்பிடிக்க முடியவில்லை.

படித்துறை மண்டபத்தை நெருங்கும்போது முன்னால் 'ஐயோ!' என்ற அலறல் கேட்டது. ராமகப்பு திடுக்கிட்டார். மைனரின் குரல் போல் இருக்கிறதே என்று அவர் உள்ளம் படபடத்தது. ராமகப்பு ஓடிப்போய் மூச்சு

நடுங்க நெருங்கிப் பார்க்கும்போது இமே ஓர் உடல் சுருண்டு கிடந்தது. இருளின் நடுவே முகத்தை நிமிர்த்திப் பார்த்ததுமே மைனரை அவருக்குத் தெளிவாகத் தெரிந்து விட்டது.

'மைனர் எதற்காக இப்படி ஓடி வந்தார்? ஏன் இப்படி அடிபட்டு விழுந்தார்? தான் நினைத்ததைத் தமக்கே தெரியாமல் நிறைவேற்றியது யார்?' என்று புரியவில்லை அவருக்கு. ஆனால் அதிக நேரம் அதை யோசித்துக் கொண்டிருக்கவில்லை ராமசுப்பு. மைனரை அப்படியே தூக்கி எடுத்துக் கொண்டு தெருவை நோக்கி ஓடினார்.

ஒரு மணி நேரம் கழிந்திருக்கும். குதிரை வண்டியில் டாக்டருடன் வந்து இறங்கினார் ராமசுப்பு. அதற்குள் பத்து மைல்கள் போய் எப்படித் திரும்பி வந்தார் என்பது அவருக்கே புரியவில்லை. நண்பனுக்கு எப்படி இருக்கிறதோ என்று தவித்துக் கொண்டே உள்ளே நுழைந்த ராம சுப்பு அங்கே கண்ட காட்சியில் திணறிப் போய் விட்டார்.

மைனர் எழுந்து உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்.

"ராமசுப்பு! உன்னைத்தான் எதிர்பார்த்துக் கொண்டே யிருந்தேன். வா இப்படி! யார் அது, டாக்டரா? நல்ல காலம். அடி தலையில் விழவில்லை. முதுகில்தான் விழுந்தது. கொஞ்ச நேரம் மயங்கிப் போய்விட்டேன். இப்போது வலிகூட அவ்வளவு இல்லை."

வாயடைத்துப் போய் நின்றார் ராமசுப்பு. பத்து நிமிஷங்கள் கழித்து டாக்டரை அனுப்பிவிட்டு மைனர் தம் நண்பனைத் தனியாக அழைத்துக்கொண்டு போனார்.

"ராமசுப்பு! நாளைக்கு யாருக்குக் கல்யாணம் தெரியுமா? உனக்குத்தான். கொஞ்ச நேரத்தில் மாப்பிள்ளை அழைப்பு நடக்க வேண்டும். தயாராக இரு!"

"என்ன? என்ன சொல்கிறாய் நீ?"

"சற்று முன்னால், என்னைப் பார்க்கக் கல்யாணி வந்திருந்தாள். அவளே எல்லாம் சொன்னாள். 'எப்படியாவது கல்யாணத்தை நிறுத்தி விடுங்கள்' என்று அவளே உன்னிடம் சொன்னாளாம். 'அதைக் கேட்டுவிட்டு அவர் இப்படிச் செய்து விட்டார். குற்றம் என்னுடையது; அவரை எதுவும் செய்து விடாதீர்கள்' என்று கண்ணீர் விட்டாள்."

"உண்மையில் நான் உன்னை அடிக்கவேயில்லை. ஆனால் அந்த எண்ணத்தோடுதான் உன் பின்னால் வந்தேன். ஆனால் அதற்குள் எந்தப் பாவியோ உன்னை அடித்துப் போட்டு விட்டான்."

"போனால் போகிறது போ! நேரமாகிறது வா போகலாம்."

மைனர் மாப்பிள்ளைத் தோழனாக மாற, ராமசுப்பு மறுநாள் கல்யாணியின் கழுத்தில் தாலியைக் கட்டினார்.

ராமசுப்பு நிறுத்தினார்.

"அப்புறம்" என்றேன் நான்.

"மைனர் ஏன் அடிபட்டார் என்றுதானே கேட்கிறாய்? நான் 'கல்யாணம் நடக்கிறதைப் பார்த்து விடுகிறேன்' என்று சொல்லி விட்டுப் போனது முதலே மைனரின் மனத்தில் ஒரு பயம். நான் என்ன செய்து விடுவேனோ என்றே நடுங்கிக் கொண்டிருந்தார். வெளியில் அதைச் சொல்லவில்லை. கடைசியில் கல்யாணத்துக்கு முதல் நாள் நாலைந்து ஆட்களை ஏவி என்னை அடித்துக் கையைக் காலை ஒடித்துப் போடும்படி சொல்லியிருக்கிறார். நான் சவுக்கண்டிக்குப் போனபோது மைனர் இந்த ஏற்பாட்டுக்குத்தான் ஆட்களிடம் பேசி அனுப்பியிருக்கிறார். அப்போதெல்லாம் நான் தினம் இருட்டி வெகு நேரம் ஆற்றங்கரை மண்டபத்தில் தனியாய் உட்கார்ந்திருப்பேன். அதனால் மைனரின் ஆட்கள் அங்கே என்னை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள். மைனருக்கோ கொஞ்ச நேரத்தில் மனசு மாறிப் போச்சு. அவர் என்னை ஒன்றும் செய்ய வேண்டாம் என்று சொல்லுவதற்காக ஓடியிருக்கிறார். போதையில் இருந்த ஆட்கள் நிதானம் புரியாமல் மைனரின் மேலேயே தடியை வீசியிருக்கிறார்கள். அவருடைய குரலைக் கேட்டதும் திடுக்கிட்டு அலறியடித்து ஓடி விட்டனர்!"

கொஞ்ச நேரம் வரையில் ராமசுப்பு மௌனமாக உட்கார்ந்திருந்தார். நினைவு மீண்டதும் "வெகு காலம் கழித்து மைனர் இதைச் சொல்லிவிட்டுக் கண்ணீர் விட்டார்" என்று நெட்டுயிர்த்தார்.

"கதை அதிசயமாக இருக்கிறதே அம்மாஞ்சி!" என்றேன்.

"கதை இல்லேடா நிஜம். அத்தனையும் நடந்த விஷயம். சந்தேகமாக இருந்தால் உள்ளே 'அவள்' இருக்கிறாள், போய் விசாரித்துக் கொள்" என்றார் சுப்புசாமி.

# அக்கரைச் சீமையில் ஆறு மாதங்கள்

சோமு

## 22. தியாகத்தின் கதை!

'சங்கீதம் என்றால் முழம் என்ன விலை என்று கேட்கக் கூடியவர்' என வேடிக்கையாகச் சொல்வதுண்டல்லவா! சங்கீதம் தெரியாத மனிதர்களைப் பற்றி இப்படிப் பரிகாசம் செய்வார்கள், நம்முடைய வித்துவான்கள்! ஆனால் லண்டனிலும் பர்மிங்ஹாமும் போன்ற நகரங்களிலும் சங்கீதத்தை உண்மையாகவே முழக் கணக்கில், கஜக் கணக்கில் அளக்கக் கூடிய அதிசய ரசிகர்கள் பலரை நான் சந்தித்தேன்!

சங்கீதத்தை நூற்றுக்கணக்கான கஜங்களில் அளந்து சுருள் சுருளாக ''டேப்''புகளிலே பதிவு செய்து மிகவும் பக்தியோடு பாதுகாத்து வருகிற இசையன்பர்கள் இங்கிலாந்தில் பலர் இருக்கிறார்கள். அடிக்கடி இந்த இசைச் சுருள்களை 'டேப்ரிகார்ட'ரில் போட்டுக் கேட்பதும், நண்பர்களை அழைத்து அவர்களுக்கு இந்த இசை விருந்தை வழங்குவதும் ஒரு பழக்கமாகவே சில அன்பர்கள் நடத்தி வருகிறார்கள்! இப்படிப்பட்ட ரசிகர் ஒருவரிடம் நம் ஊரிலிருந்து சென்ற நாகஸ்வர இசை இருப்பதைக் கேள்விப்பட்டு ஒரு நாள் அவருடைய வீட்டுக்குப் போயிருந்தேன். அவர் இங்கிலாந்தின் பிரபு வம்சத்தைச் சேர்ந்த ஒரு கலையபிமானி! அவருடைய வீட்டில் தென்னிந்திய சங்கீதச் சுருள்கள் ஏராளமாக இருந்ததால் நீண்ட நேரம் இசை விருந்து நடந்தது. பிறகு பல நடிகர்களின் நடிப்புப் பகுதிகளை 'டேப்'பிலிருந்து போட்டுக் காட்டினார். இதன் பின்னர் இங்கிலாந்தின் நாடகக் கலை பற்றி நெடுநேரம் பேசிக் கொண்டிருந்தார். அப்போது பர்மிங்ஹாம் சுற்று வட்டத்திலுள்ள 'காவெண்டரி' (Coventry) என்ற ஊரில் அற்புதமான ஒரு நாடக மன்றம் இருப்பதைப் பற்றி வானளாவப் புகழ்ந்து பேசினார்! அவருடைய வர்ணனையைக் கேட்டதிலிருந்து அந்த நாடக மன்றத்தைக் கட்டாயம் சென்று காண வேண்டும் என்ற ஆசை எனக்கு உண்டாயிற்று.

'காவெண்ட்ரி' நகரத்துக்குச் செல்ல வேண்டும் என்று பர்மிங்ஹாமிலிருந்து நான் புறப்பட்டபோது, நண்பர் பென்னி அந்த ஊரின் வேறு பல அருஞ்சிறப்புக்களைப்பற்றியும் குறிப்பிட்டார். முக்கியமாக, சென்ற யுத்தத்தின் போது குண்டுக்கு இரையாகி அழிந்துபோன புராதனமான கிறிஸ்து கோவிலைப் பற்றியும், இப்பொழுது அந்தப் பாழிடத்தில் பன்னிரண்டு லட்சத்து ஐம்பதினாயிரம் பவுன் செலவில் புதிய கோவில் நிர்மாணமாகி வருவது பற்றியும் அவர் பரவசத்தோடு சொன்னார்.

காவெண்ட்ரி என்ற நகரத்துக்கு இந்தப் பெயர் எப்படி வந்தது என்பது பற்றிப் பல கதைகள் சொல்லுகிறார்கள். ஒரு நதியின் பெயரிலிருந்தே இந்தப் பெயர் வந்தது என்று ஓர் ஆராய்ச்சி! இல்லை, அது தவறு. இந்த இடத்தில் ''காபன்ட்ரீ'' என்று ஒரு விநோதக் கனிமரம் நின்றது. அதை வைத்தே இவ்வூருக்குக் 'காவெண்ட்ரி' எனப் பெயர் வந்தது என்று இன்னொரு ஆராய்ச்சி! 'கான்வெண்ட்' என்கிற புனித கிறிஸ்துவ வார்த்தையிலிருந்து 'காவெண்ட்ரி' வந்தது என்று மற்றொரு ஆராய்ச்சி!! 'ஊரும் பேரும்' பற்றிய ஆராய்ச்சி இப்படியெல்லாம் நம்மூரைப் போலவே அங்கும் நடந்து வருகிறது!

இந்த ஆராய்ச்சிகளையெல்லாம் கேட்டுக் கொண்டே ஊருக்குள்ளே சென்றதும், நகர மத்தியிலே நிற்கும் ஒரு பிரம்மாண்டமான சிலை என்னைக் கவர்ந்தது! வெள்ளைக் குதிரையிலே ஓர் அரசி அமர்ந்து கொண்டு செல்வது போல் மிகமிக உயரமாகச் செய்து நிறுத்தியிருக்கிறார்கள்!

''இது என்ன?'' என்று கேட்டேன்.

''இதைப் பற்றி ஒரு ரசமான சரித்திரக் கதை இருக்கிறது!'' என்றார் நண்பர் பென்னி.

பதினோராம் நூற்றாண்டில் அந்தப் பிராந்தியத்தின் சிற்றரசராக விளங்கியவர் ஒரு பிரபு. அவருக்கு நற்குணம் வாய்ந்த மனைவி! அந்தச் சிற்றரசி குடிமக்களிடம் மிகவும் கருணை கொண்டவள்! சிற்றரசர் ஒரு சமயம் மிகவும் கடுமையான வரி விதித்து மக்களைத் துன்புறுத்தியபோது, அரசிக்கு மனம் பொறுக்கவில்லை. ''இவ்வளவு பளுவான வரியை நமது பொதுமக்கள் தாங்க மாட்டார்கள்! வரியைக் குறைக்க வேண்டும்!'' என்று அவள் தன்னுடைய கணவனிடம் முறையிட்டாள். அந்த முரடருக்கு இது பிடிக்கவில்லை! மனைவியிடம் கோபமே வந்து விட்டது! ''உன்னுடைய குடிமக்களிடம் உனக்கு அத்தனை கருணையா? அப்படி



அரசியின் சிலையும் சுற்றுவட்டமும்

யானால் நீ இந்த ஊரின் பொது அங்காடியிலே குதிரைமீதேறிப் பிறந்த மேனியோடு ஊர் வலம் வந்தால் வரியை நிறுத்தி விடுகிறேன்!'' என்று கூறினாராம் பிரபு! ராணி என்ன செய்தாள்? அவளுக்குத் தனது சுய கௌரவத்தை விடக் குடி மக்களிடம் அதிகக் கருணை இருந்தது! இந்த அளவற்ற பெருங் கருணையினால் அவ்விதமே ஆடைகளின்றிக் குதிரை மீது சென்றாள் அந்தப் புனிதவதி! மக்கள் என்ன செய்தார்கள்? அரசி ஊர்வலம் வரும் போது, யாருமே தெருவில் வந்து நிற்காமல் எல்லாரும் கதவுகளையும் ஜன்னல்களையும் அடைத்துக் கொண்டு வீட்டினுள் இருந்து நியாக அரசியின் மானத்தைக் காத்தார்களாம்! அரசருக்கு இந்த நிகழ்ச்சியின் பிறகு மனம் இளகிக் குடிமக்களுக்கு விதித்திருந்த கடுமையான வரியை எடுத்து விட்டாராம்!

இந்தச் சம்பவத்தை இன்றைக்கும் அந்த மக்கள் பக்தியோடு நினைவு கொண்டு, அந்த அரசியின் சிலையை ஊர்ப் பொது மன்றத்திலே குதிரை மீது சென்ற அந்த கோலத்தில் கல்லினாலே செய்து நிறுத்தி யிருக்கிறார்கள்! அதோடு இன்னொரு நிகழ்ச்சி:

'LADY GODIVA' என்ற அந்தக் கருணை மிகுந்த சிற்றரசி குதிரையிலே சென்ற சமயம் எல்லாரும் வீட்டுக் கதவுகளை மூடிக் கொண்டு உள்ளே இருந்தபோது, 'டாம்' என்ற ஒரு தையற்காரன் மட்டும் ஒரு மாடியின் மூலையில் ஒளிந்திருந்து ஊர்வலத்தைப் பார்த்தானும். இவனுக்குப் 'பீபிங் டாம்' என்றே பெயர் நிலைத்து விட்டது! இந்த 'பீபிங் டாம்' இந்த கைய பாபத்தைச் செய்ததால் அவனுடைய இரண்டு கண்களும் அவிந்து விட்டன என்று வரலாற்றிலே எழுதியிருக்கிறார்கள்!

கடந்த ஒன்பது நூற்றாண்டுகளாக வழங்கி வருகிற வரலாறு இது! அது மட்டுமில்லை. இன்றைக்கும் 'ப்ராட் கேட் ஹவுஸ்' நிலையத்திலே உள்ள ஒரு மாபெரும் மணிக் கூண்டுக்கு முன்னால் மத்தியானம் பன்னிரண்டு மணிக்கு வெளி நாடுகளிலிருந்து வருகிற பிரயாணிகள் கூட்டம் கூட்டமாக மொய்த்து நிற்கக் காணலாம்! பன்னிரண்டு மணி அடிக்கும் போது கடிகாரத்துக்கு அருகிலுள்ள கூண்டுக்குள்ளிருந்து இரண்டு பொம்மைகள் வெளியே வந்து நாடகம் ஆடிவிட்டு மீண்டும் கூண்டுக்குள்ளே மறைந்து விடுகின்றன!!

அதாவது குதிரை மீது சிற்றரசி வருவது போலவும் டாம் பார்ப்பது போலவும் பொம்மைகளைக் கொண்டு ஒரு சிறு நாடகம் தினந்தோறும் பன்னிரண்டு மணிக்கு நடைபெறுகிறது இந்த மணிக் கூண்டிலே! கடிகாரத்திலுள்ள இயந்திர இயக்கத்தினால் இந்தப் பொம்மைகள் இப்படி இயங்கும்படியாக ஒரு விசையை இணைத்திருக்கிறார்கள். சில விநாடிகள் இந்தப் பொம்மலாட்டம் ஒரு இயந்திரக் காட்சியாகத் தோன்றி, மறைகிறது!

இந்த வரலாற்றுக் கதையைப் பலர் பலவிதமாக விமர்சனம் செய்தபோதிலும், அந்த நகரத்து மக்கள் அரச கருணைக்கு ஒரு சான்றாக இந்த நிகழ்ச்சியைச் சிலையிலும் பொம்மைகளிலும் உருவாக்கி இன்றளவும் பாதுகாத்து வருகிறார்கள்!

கோவென்டரி நகரம் சென்ற யுத்தத்தில் பலமான சேதத்துக்கு உள்ளாகியதால், இப்பொழுது எங்கு பார்த்தாலும் புதிய விழிப்பு ஏற்பட்டுக் கொண்டிருப்பதையும், புதிய கட்டடங்கள் தோன்றி வருவதையும் பார்த்தேன். முக்கியமாக, நகர அங்காடியின் புதிய கட்டட அமைப்பு மிகமிக நேர்த்தியாக இருக்கிறது.

கார்களை நிறுத்துவதற்காக மாடிகள் கட்டி விட்டிருக்கிறார்கள் என்றால் நம்புகிறீர்களா? கீழே வெல்லாம் கடைகள்! மேலே கார் பார்க்! வளைந்து வளைந்து செல்லும் பாதைகளில் ஏறிச்சென்று மொட்டை மாடிக்கு வந்து கார்களை நிறுத்துகிறார்கள். ஊரில் கார்களை நிறுத்துவதற்குத் தரைமட்டத்தில் இடமில்லை! கார்கள் அத்தனை அதிகம்! இந்த மாடியில் முந்நூறு கார்கள் நிற்கலாம். மாலை ஆறுமணி வரை நிறுத்தி வைப்பதற்குக் கார் ஒன்றுக்கு அரை ஷில்லிங் கூலி!

இந்த மாடியைப் பார்த்துவிட்டு அங்கிருந்து கிளம்பி, புனர்நிர்மாணம் பெற்று வருகிற கோவிலுக்குச் சென்றேன். பிரிட்டிஷ் அரசியார் 1956ல் இதற்குக் கால்கோள் நாட்டினார். 1962 இல் இதன் கட்டடம் பூர்த்தியாகுமாம். இப்பொழுது வேலை துரிதமாக நடந்து கொண்டிருப்பதைப் பார்த்தேன். என் மனத்தை நெகிழச் செய்த ஓர் உருக்கமான காட்சியை இங்கே குறிப்பிடவேண்டும்:

இந்த இடத்தில் நின்ற பழைய கோவிலிலே 1940 நவம்பர் மாதம் ஜெர்மானியரின் குண்டு விழுந்து எல்லாம் மயானக் காடாகப் போய்விட்டதாம். அதன் பின்னர் மத குருவானவர் கலங்கிய கண்களோடு இந்தப் பாழ்வெளியிலே நடந்து வந்தாராம்! அப்போது அங்கே குண்டினுடைய கொடிய நெருப்புக்கு இரையாகிப் போய்க் கிடந்த கோவிலின் சாம்பலுக்கு மத்தியிலே ஒரு மரத்துண்டு சிலுவையின் வடிவிலே கருகியும் கருகாமலே கிடந்ததாம்! இதைக் கண்டதும் மதத் தலைவரின் உள்ளம் பரவசம் அடைந்ததாம். அழிவுக்கு மத்தியிலே ஆன்மாவையல்லவா கண்டார் அவர்! அந்தச் சிலுவைத் துண்டை அப்படியே எடுத்துப் பாதுகாத்து வைத்து, 1941 ஜனவரியில் தியானபீடம் அமைத்தார். அதைச் சுற்றியே இப்பொழுது கோவிலின் புனர் நிர்மாண வேலை மும்முரமாக நடந்து கொண்டிருக்கிறது. அங்கே சென்று இதையெல்லாம் பார்த்தபோது போரின் பயங்கரமும் கொடுமையும் மனதைச் சித்திரவதை செய்தன. யுத்த நெருப்பிலே வேகாமல் நின்ற அந்த மரத்துண்டுச் சிலுவைக்கு எதிரே விவிலிய வேதத்திலிருந்து கிறிஸ்து பெருமானின் மறைமொழியை எழுதி வைத்திருக்கிறார்கள். அதைப் படித்தேன். ''தந்தையே, அவர்களை மன்னித்து விடும்!'' என்ற ஏசுநாதரின் மொழிகள் அவை!



யுத்த முடிவுக்குப்பின் தோன்றிய நகரம்

* * *

இந்தக் கோவிலிலிருந்து வெளியே வந்து, நகரசபை, பொதுநிலையம், கடைவீதி ஆகிய அழகான இடங்களை யெல்லாம் சுற்றிப் பார்த்துவிட்டு 'பெல்க்ரேட் தியேட்டர்' என்ற புகழ்பெற்ற நாடக மன்றத்துக்கு வந்து சேர்ந்தேன்.

இந்த நாடக மன்றத்தைக் கட்டுவதற்காக யூகோஸ்லாவிய மக்கள் மரங்கள் நன்கொடையாகக் கொடுத்தார்களாம். அதனால்தான் இதற்குப் 'பெல்க்ரேட்' என்ற பெயரைச் சூட்டியிருக்கிறார்கள்.

என்ன அழகு! எத்தனை மெருகு! உள்ளே நுழைந்தால் வெளியே வர மனம் வராது! அத்தனை சுகமான தியேட்டர் அது! கிட்டத்தட்ட ஆயிரம் பேர்கள் உட்கார்ந்து பார்க்கக் கூடிய முறையில் இருக்கைகள்! அவற்றில் உட்கார்ந்தால் பிறகு எழுந்திருக்க முடியுமா? சில இடங்களில் உட்கார்ந்தால் பிறகு எழுந்திருக்கவே முடியாதபடி சில இருக்கைகள் உண்டே, அப்படியில்லை! நல்ல விசாலமான மெத்தை ஆசனங்கள்! மேடையின் அரங்கம் நவீன மின்சார வசதிகள் அத்தனையும் ஒருங்கே அமைந்தது.

இதை நிர்வகிக்கும் 'பெல்க்ரேட் தியேட்டர்க்ளப்' என்ற சங்கமானது நடிகர்களுக்கும் பொதுமக்களுக்கும் இடையே ஓர் இணைப்புப் பாலமாகத் தொழில் புரிந்து வருகிறது. அதனுடைய சட்டங்களும், பணிமுறைகளும், கலைஞர்களையும் நடிகர் குழுவினர்களையும் இந்தச் சங்கம் ஆதரிக்கிற முறையும் மிகச் சிறப்பாக இருக்கின்றன.

இந்த நாடக மன்றத்தில் மாணவர்கள் கூடி நாடகம் நடிப்பதற்கும் பல சலுகைகள் கொடுக்கிறார்கள். நாடகம் தவிரப் பொதுக் கூட்டங்கள், கலை விழாக்கள் முதலியன நடத்துவதற்கும் இங்கே வசதிகள் செய்து வைத்திருக்கிறார்கள்.

நாடக மன்றங்கள் என்றால் வாடகைக்கு விடும் வியாபார நிலையங்கள் என்ற நிலைமையின்றி, அவையும் கலைகளை வளர்க்கும் பண்ணைகள் என்ற உயர்ந்த எண்ணத்தோடு இந்தத் 'தியேட்ட'ரை அமைத்து நிர்வகித்து வருகிறார்கள். நடிகர் சங்கங்களுக்கும், கலைக் கழகங்களுக்கும், மாணவர் சபைகளுக்கும், நாடகம் நடத்துவதிலே ஊக்கம் உண்டாகும்படி இந்த மன்றத்தின் நிர்வாக சபை பல வசதிகள் செய்து கொடுப்பதால், இந்த அரங்கத்தின் புகழ் அந்த வட்டாரம் முழுதும் நன்கு பரவியிருக்கிறது.

குடிமக்களுக்காகப் பல நூறு ஆண்டுகளுக்கு முன் சிற்றரசி செய்த தியாகத்தின் வரலாறு, யுத்த அரக்கனுக்குத் தன்னைப் பலிகொடுத்து அந்தத் தியாக வேள்வியிலிருந்து மறுபிறப்பு எடுக்கும் கிறிஸ்து கோவில், கலை வளர்ச்சிக்காகத் தியாக உணர்வோடு பணிபுரியும் நாடகமன்றம் இந்த மூன்றும் சேர்ந்து மனதிலே நன்றாகப் பதிந்துவிட்ட மூன்று முக்கிய நினைவுகள்!

(தொடரும்)

## அத்தியாயம் நான்கு

"அம்மாவுக்கு அப்புறம் கலியாணம் என்று சொல்லவே வாய் வரவில்லை. பேசாமல் என்னோடு டில்லிக்கு வந்து விட்டான்" என்றாள் ருக்கு.

"உன் தங்கை எங்கே இருக்கா இப்ப?" என்று கேட்டாள் நாகம்மாள்.

"டாட்டா நகரில். அவள் புருஷன் அங்கே நல்ல வேலையில் இருக்கிறார்."

"குழந்தை?"

"இரண்டு பெண், இரண்டு பிள்ளை."

"எல்லாம் கப்பும் கிளையுமா வளர்ந்துண்டிருந்தது உன்னைச் சுற்றி. ஆனால் நீ அப்படியே பாக்கு மரம் மாதிரி நின்னுட்டே."



"நின்னு என்ன? நான் இவரைக் கூடச் சரியாகப் பார்க்கலே. இதே மாதிரிதான் அப்பவும் இருப்பார். சட்டை போட்டுண்டு வந்திருந்தார். தலையிலே நிறைய மயிர் இருக்கும். ஆனால் இதே மாதிரி நல்ல பலமான உடம்புதான். இது மாத்திரம் ஞாபகம் இருக்கு —"

"உனக்கு ஒன்றுமே தோணலியா அப்புறம்?"

"எனக்கு அவர் மேலே ஆசைன்னு ஒண்ணும் இல்லே. ஆசைக்கு என்ன இருக்க முடியும்? இரண்டு விநாடி கூடப் பார்க்க முடியாத ஒரு புருஷனிடம் என்ன ஆசை? ஆனால் அவர் ஓடிப்போன பிறகு எனக்கு ஒன்றுமே புரியவில்லை. அத்தனை கலசல், கலக்கம், பயத்துக்கு நடுவில் உள்ளுக்குள்ளே ஒரு கோபம். இவனை மறுபடியும் ஒரு தடவை பார்த்து 'ஏனய்யா ஓடினீர்?' என்று கேட்டுவிட வேண்டும் என்று ஆசை. அதைக் கேட்டு விட்டுப் பிறகுதான்....அதுவரையில் கலியாணம் கிலியாணம் என்ற பேச்சே எடுக்கக் கூடாது என்று ஒரு தீர்மானம், ஒரு பிடிவாதம் விழுந்துவிட்டது."

"... சரி ... கேட்ட பிறகு ...?" என்று இலேசாகப் புருவத்தை நிமிர்த்தினாள் நாகம்மாள்.

ருக்கு ஒன்றும் பதில் சொல்லவில்லை. "ஹூம்" என்று மகா அசட்டையுடன் ஒரு புன்முறுவல் வந்தது.

"அவர் இத்தனை நேரம் பேசிக்கொண்டிருந்தபொழுது நீ ஏன் கேட்கவில்லை? அப்படி அடக்கிக் கொண்டு உன்னாலே எப்படி இருக்க முடிந்தது உன்னால்?" என்று நாகம்மாள் கேட்டதற்குப் பதில் சொல்லச் சற்று யோசனை செய்ய வேண்டியிருந்தது ருக்குவுக்கு. சற்றுக் கழித்துச் சொன்னாள். "திடீரென்று பார்த்தால் படபட வென்று பொங்கிக் கொண்டு வரும். மனத்தில் நினைத்ததைப் பொரிந்து கொட்டிவிட்டுப் போய் விடலாம். ஆனால் அப்படி இல்லையே



தி. ஜானகிராமன்

இங்கே. இந்த உருவத்தை இன்றுதான் நன்றாக நேரில் பார்த்தேனே தவிர, தினம் ஒரு தடவையாவது ஏன் ஓடினீர் என்று இவரைக் கேட்டுக்கொண்டுதானிருக்கிறேன். இந்த இருபது வருஷங்களாகக் கேட்டுக் கொண்டிருக்கிறேன். எனக்கு என்னமோ அதை மறக்க முடியவில்லை. மிகையாகச் சொல்லவில்லை. ஏன் ஓடணும் ஏன் ஓடணும் என்று ஒரு கேள்வியை நான் கேட்காத நாளில்லை. மனக்கடையில் அந்தக் கறுப்பு உருவம் உட்கார்ந்திருக்கிறது போலிருக்கும் -- பூசின மாதிரி. இப்படித் தினமும் கேட்கிறபோது ஆளைப் பார்த்ததும் என்ன படபடப்பு வந்துவிடப் போகிறது?''

நாகம்மாள் சொன்னாள்: ''அவர் நாளைக்கு வருவேன் என்றிருக்கிறார். நீ அவரைச் சந்தியேன்.''

''பேஷாகச் சந்தித்தால் போகிறது'' என்று ஒரு புன்முறுவலுடன் சொன்னாள் ருக்கு. என்னவோ பெரிதாக வேடிக்கை பார்க்கிறோம் என்று நினைத்திருக்கிறாள் இவள். ஆனால் அப்படி ஒன்றும் நடக்கப் போவதில்லை என்று சொல்வது போல.

அதோடு அந்தப் பேச்சு முடிந்துவிட்டது. நாகம்மாள் மட்டும் விடவில்லை,

விஜயா



மதுரையில் பாரதி இலக்கியக் கழகத்தில் ஏப்ரல் 2-ந்தேதி 'கல்லும் சொல்லாதோ கவி?' என்னும் பொருளில் திரு தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள் சிறப்புச் சொற்பொழிவாற்றினர்.

யும் பார்க்கமாட்டேன் என்று கூழைப் பாம்புமாதிரி கிடக்க இந்த அழகான உடம்பு, இந்த மனசு, இந்தக் கண் - இவை யெல்லாம் எதற்காக ?

நாகம்மாளுக்குச் சற்று அருவருப்பாகக் கூட இருந்தது. "என்ன நாகம்? ஏன் இப்படி என்னமோ போலப் பார்க்கறே?" என்று கேட்டு நிமிர்ந்தாள் ருக்கு.

"ஒண்ணுமில்லேடி. நான் உங்க அம்மாவாகப் பிறந்திருக்கப்படாதான்னு நினைக்கிறேன்..."

"என்னத்துக்கு?"

"இத்தனை அழகையும், உசரத்தையும், கெட்டிக்காரத்தனத்தையும் சேர்த்து, குண்டுகட்டாகக் கட்டி ஒரு ஆண்பிள்ளை கையிலே கொடுத்திருப்பேன். நீ அவன் கையிலே துள்ளறதைப் பார்த்திருப்பேன் - குழந்தை மாதிரி துள்றதைப் பார்த்திருப்பேன் - இது என்ன வேண்டிக் கிடக்கு? இவ்வளவு அழகு! ஆனு, சாமியார் மாதிரி, கிழங் கட்டைமாதிரிப் பேச்சு! நெட்டியிலே நந்தியாவட்டைப் பூ பண்ணிருப்பல இது யாருக்குடி வேணும்?" என்று சொல்லிக் கொண்டே எழுந்து நாகம்மாள் அடுக்களைக்குள் சென்ருள். ஒரு நிமிஷம் முன்னுல்தான் ஹால் கடிகாரம் ஒன்றரை மணி யடித்தது. காப்பி ஞாபகம் வந்துவிடவே பேச்சு நடுவில் எழுந்து வந்து, குமுட்டியை இழுத்து உரிமட்டை நாரைப் பிய்த்து, கரித் துண்டுகளை யெல்லாம் பரப்பிப் பற்ற விட ஆரம்பித்தாள்.

என்னென்னமோ கேட்டுக் கொண்டிருந்தாள்—ஒரு பெண்ணை இன்னொரு பெண் கேட்கிற கேள்விகளை, சற்று அந்தரங்கமாகக் கேட்கிற கேள்விகளை யெல்லாம்—கேட்டுக் கொண்டிருந்தாள். "என்ன ருக்கு, நீ இப்படியேவா கட்டை மாதிரி இருந்திண்டு வரே? உனக்கு யார் மேலேயும் ஆசையே விழவில்லையா? ஒரு ஆண்பிள்ளையிடம் கூட?... இல்லையா? நெசம்மாவா? சேப்பா, பார்க்க அங்கமா, அழகா, முழியும் மூக்குமா, புத்திசாலியா, கெட்டிக்காரனு, ரொம்பப் பிரியமா ஒருத்தன் பேசருன், அவனைப் பார்த்துக்கூட... நிஜமா?" எல்லாவற்றுக்கும் இல்லை என்று பதில் வந்தது.

நாகம்மாள் "என்னமோம்மா" என்று நம்பாமல் சொல்லுவது போல் அவளைப் பார்த்தாள்; ஆனுல் சொல்லவில்லை. நம்பாதது மட்டுமில்லை. அவள் மீது சற்று அலட்சியம்கூட ஏற்படுவது போலிருந்தது. அவள் சொல்வது உண்மையாயிருந்தால், என்று யோசிக்கும்போது அந்த அலட்சியம் அதிகமாயிற்று. இந்த ஆசை கூட இல்லாமல் எப்படி ஒருத்தி பொம்மனாட்டியாக இருக்க முடியும்? நல்ல அறிவு, அழகு, பார்வை, மனசு - இப்படி ஒருத்தன் வரும்போது மனசு அசையவில்லை, இளகவில்லை என்று சொன்னுல், இவள் என்ன மனுஷியா? மிருகத்துக்கும் கேவலமான இனமா? இவள் எதற்காகப் பிறந்திருக்கிருள்? இந்தமாதிரி இருதண்டியா நின்று கொண்டு புஸ்தகங்களைப் படித்துவிட்டு, மறுநாள் காலையில் காலேஜுக்குப் போய் நூறு குட்டிகளிடம் அதைத் திருப்பிக் கக்கவா? இது என்ன ஜன்மம்? ஒன்றை

• •

நாகம்மாளின் அண்ணன் கப்புசாமி நாட்டுக்கோட்டை செட்டியார் ஒருவரிடம் சட்ட ஏஜண்டாக வேலை பார்த்துக் கொண்டிருந்தார். செட்டியாருக்கு சைகோன், சிங்கப்பூர் பிராந்தியங்களில் எக்கச்சக்கமாகச் சொத்துகள் பெருகியிருந்தன. கடைகளில் வருகிற லாபம், நிலங்களில் வருகிற மகசூல், தோட்டங்களில் வருகிற பணம், கட்டிடங்களில் வருகிற வாடகை - இப்படிப் பல உருவங்களில் அந்தச் சொத்து காய்த்துக்கொண்டிருந்தது. என்ன வருகிறது, எங்கிருந்து வருகிறது, எவ்வளவு வருகிறது என்று செட்டியாருக்கே திடீரென்று கேட்டால் சொல்லத் தெரியாது. அந்த லாபங்களைக் கொண்டுவரவும் முடியவில்லை.

கொண்டுவர ஏதாவது வழி செய்ய வேண்டும். அங்கே காய்க்கிற சொத்தில் லவலேசம் இங்கே வந்தாலே போதும். நூறு குடும்பங்களை நாலு தலைமுறைக்குக் காப்பாற்றலாம். ஆடம்பரமாகக் கூட வாழ வைத்துப்பார்க்கலாம். அந்தக் கொஞ்சத்தைக் கொண்டுவரும் பொறுப்புத்தான் கப்புசாமிக்குக் கொடுக்கப்பட்டிருந்தது. டில்லியில் மத்தியசர்க்கார் அதிகாரிகளைக் கண்டு, அவர்களுக்குப் பூஜை செய்வது, இளக்குவது, கரைப்பது, கெஞ்சுவது - இவையெல்லாம் அவர் பொறுப்பு. ஓர் அளவுக்கு வெற்றிகரமாகவே இந்த விந்தைகளைப் புரிந்து வந்தார் அவர். அப்படி அவருக்குப் பரிச்சயமான, பலவித உத்தியோகப் படிகளில் அமர்ந்திருந்த அதிகாரிகளில் ஒருவர் ருக்குவின் பெரியப்பா, அதிகம் மேலும், அதிகக் கீழுமில்லாமல் நடுத்தரப் படிகளில் இருந்த அதிகாரி அவர். டில்லிக்குப் போகும்போதெல்லாம் அங்கு போகாமல் வர மாட்டார் கப்புசாமி.

கப்புசாமிக்கு வாழ்க்கையில் எந்தவிதமான பிடிப்பும் கிடையாது. அவருக்கு இருபத்தாறு வயதாகும் பொழுது அவர் மனைவி ஒரு மூன்று வயதுப் பிள்ளைக் குழந்தையை விட்டு விட்டு இறந்து விட்டாள். அந்தப் பையனை வளர்ப்பதற்காகத் தன் ஒரே தங்கையை மாப்பிள்ளையோடு வீட்டில் அழைத்து வைத்துக் கொண்டார் அவர். பையன் கல்லூரியில் இரண்டு வருஷங்கள் படித்து விட்டு மேல் படிப்புக்கு இங்கிலாந்துக்குப் போக ஆசைப்படவே, கப்புசாமி சம்மதித்து விட்டார். அங்கே படித்துத் தேர்ந்த பையன் திரும்பி வரவில்லை. அங்கேயே ஒரு பெண்ணை மணந்து கொண்டு, லண்டனுக்குப் பக்கத்திலேயே ஒரு வீடும் எண்ணாயிரம் பவுனில் வாங்கிக் கொண்டு தங்கி விட்டான். அவன் போய்ப் பதினான்கு வருஷங்கள் ஆகிவிட்டன இப்பொழுது. அவன் ஒரு பெண்ணுக்கும் பிள்ளைக்கும் தகப்பனாகி விட்டது, கப்புசாமிக்குக் கொஞ்ச நஞ்சம் இருந்த பிடிப்பையும் கழற்றி விட்டது. அவன் வருவதாகக் கடிதம் எழுதிக் கொண்டிருக்கிறான். எப்பொழுது வருவானோ, தெரியாது. இரண்டு மூன்று தடவைகள் வருவதாகத் தேதிகள் குறித்து விட்டுக் கடைசி நிமிஷத்தில் 'வேலைத் தொந்தரவு. மார்கரெட்டுக்கு உடம்பு சரியாயில்லை. சின்னக் குழந்தைக்குக் கடும் ஜுரம்' என்று ஒத்திப் போட்டு விட்டான். இனிமேல் அவன் வரும்பொழுது தான் நிச்சயம்.



கப்புசாமிக்கு இப்பொழுது எல்லாம் தங்கையும் அவள் பெண்ணும்தான். நாகம்மாளின் கணவன் நாலைந்து வருஷங்கள் முன்னால் காலமானதும் இந்தப் பிடிப்பு இன்னும் கொஞ்சம் இறுகிக் கொண்டு வந்தது. பிடிப்பு இருக்கிறது என்பதைக் கூட அவர் வெளியில் காட்டிக் கொள்வதில்லை. அதற்குப் பொழுதில்லை அவருக்கு. அவருக்கு ஞாபகமெல்லாம் செட்டியாரின் சொத்துக்களை இந்தியாவுக்குக் கொண்டு வருவதில் தான். அதிலே என்ன அகடவிகடங்கள் செய்யலாம் என்று சிந்திப்பதிலும், அந்த அகடவிகடங்கள் காயா பழமா என்று தொடர்ந்து பார்ப்பதிலும், பழமானால் தமக்குத்தாமே சந்தோஷப்பட்டுக் கொண்டு, அடுத்த சாகசங்களுக்குத் திட்டம் போடுவதிலுமே அவர் பொழுதெல்லாம் போய்க் கொண்டிருந்தது. அதைத் தவிர இன்னொரு பொழுது போக்கு ஆங்கிலத் துப்பறியும் நாவல்கள் வாசிப்பது. டில்லிக்கு ரயிலில் போனால் ஒரு டஜன் புத்தகங்களைப் படித்து முடித்து, இஷ்டமிருந்தால் கையில் தூக்கிக் கொண்டு போய் விடுவார். அப்படி வேண்டாவெறுப்பாக வீட்டுக்குக் கொண்டு வந்த புத்தகங்களே ஏழெட்டு கள்ளிடப்பாக்களில் மாடியறையொன்றில் கட்டிப் போட்டுக் கிடந்தன. சந்திராவுக்குத் துப்பறியும் நாவல்கள் பிடிக்காது. ஆகவே கரப்புகளும் ராமபாணங்களுமே அவற்றிற்குத் தற்போதைய வாசகர்கள்.

அந்த மாதிரி மாடியறையில் கள்ளிப் பெட்டி ஒன்றில் கிடந்த ஒரு நாவலை எடுத்து வாசித்துக் கொண்டிருந்தாள் ருக்கு. காப்பிப் பொடி டப்பா மீது அதைப் பார்த்ததும் தான் நாகம்மாளுக்கு இவ்வளவு எண்ணங்களும் ஓடிக் கொண்டிருந்தன. அண்ணாவிடம் அவளுக்கு இவ்வளவு அவ்வளவு என்று பாசமில்லை. அண்ணா தெய்வம் மாதிரி. அது எங்கு கலந்தாலும், யாரோடு புரண்டாலும் அதை ஒன்றும் பாதிக்காது, பாதிக்க முடியாது என்று அவளுக்குத் திடநிச்சயம். மாம்பலத்தில் அவர் கட்டிப் போட்டிருக்கிற இந்தப் பெரிய வீட்டையும் அதைச் சுற்றி நின்ற ஆறு மனைத் தோட்டத்தையும் அவள்தான் ஆண்டு கொண்டிருந்தாள். தோட்டத்தின் ஓரத்தில்

ஓர் ஓங்கோல் வெப்பாலைப் பசு, கன்றுடன் நின்று கொண்டிருந்தது. பித்தளை பக்கெட்டால் முக்கால் பக்கெட் பாலைக் கொடுத்துவிட்டு நிம்மதியாக நிற்கும் அது. அதற்குப் பக்கத்தில் கார்ஷெட். எல்லாம் இவர்களுக்குத்தான். இந்தப் பாலையோ, இந்தக் காரையோ அண்ணு காண்பது மாசத்தில் ஏழெட்டு வேளைகள் இருக்கலாம். அவருக்கு ரயிலிலும் விமானத்திலும் வெளியூர் ஹோட்டல்களிலும்தான் வாசம்.

அண்ணு தெய்வம்தான். ஆனால் சந்திராவைப்பற்றிமட்டும் அவர் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார், என்ன செய்யப் போகிறார் என்று தெரியவில்லை.

எத்தனை சன்யாசிகள்! அனந்தசாமி, அண்ணு, ருக்கு! சந்திராகூட இப்பொழுது சன்யாசி மாதிரிதான் அலைந்து கொண் டிருக்கிறாள். இந்தச் சமயம்



அவன் எங்கிருக்கிறானோ! கன்னிமரா நூலகத்திலா, பல்கலைக் கழக நூலகத்திலா-இல்லை, சிநேகிதி அம்மணிக் குட்டி வீட்டிலா - அவன் வந்தபிறகு கேட்டால் தான் தெரியும். அண்ணுவுமில்லாமல், சந்திராவுமில்லாமல், 'பொழுது போக மாட்டேன் போகமாட்டேன்' என்று இருதயத்தில் அரித்துக் கொண்டு சண்டி செய்கிறது வழக்கம். நல்ல வேளையாக ருக்கு வந்திருப்பது நாகம்மாளுக்குப் பெரிய விடுதலையாக இருந்தது.

டில்லிக்குப் போகும் போதெல்லாம் லீவுக்கு ஒரு தடவை வந்து ஒருமாசம் இருக்கக் கூடாதா என்று ருக்குவிடம் சொல்லிக்கொண்டே யிருப்பார் சுப்புசாமி. மூன்று வருஷங்களுக்கு முன் பத்ரிநாத், பிரயாகை, காசி, கயை என்று யாத்திரைக்குத் துடியாக நின்ற நாகம்மாளை அழைத்துக்கொண்டு போய் விட்டு வந்தார் அவர். டில்லியில் நாலைந்து நாட்கள் ருக்குவின் பெரியப்பா வீட்டில் தங்க நேர்ந்த பொழுதே நாகம்மாளுக்கும் ருக்குவுக்கும் இடையே அனுஜைகளின் உறவுமாதிரி ஒரு பிணைப்பு தலையெடுத்தது. 'வாருங்கள் போங்கள்' என்று பேசிக் கொண்டிருந்தவர்கள் நான்காம் நாள் 'வா போ' என்ற பேசிக் கொள்ளத் தொடங்கினார்கள். ஐந்தாம் நாள் நாகம்மாள் புறப்பட்டு விட்டாள்.

இப்பொழுது ருக்கு சென்னைக்கு வந்து இரண்டு வாரங்கள் ஆகிவிட்டன. 'வாடி போடி' என்று அந்த அன்பு நெருங்கி விட்டது. ஏறக்குறைய சம வயதுமாதிரி தான். ருக்கு இரண்டு வயது தன்னை விடச் சிறியவள் என்று தெரிந்ததும் நாகம்மாள் இன்னும் இரண்டு "டீ"யை அதிகமாகவே உபயோகித்தாள்.

டில்லியில் அவளை முதன் முதலாகச் சந்தித்தபொழுது அவளைப் பற்றி அதிகமாகத் தெரிந்துகொள்ளும் அளவுக்குப் பழக முடியவில்லை; பொழுதில்லை. குதுப்மினார், செங்கோட்டை, யமுனைக்குளியல், ஜந்தர் மந்தர் என்று ஓடிக் கொண்டிருந்தார்கள். டில்லியின் சரித்திரத்தை விளக்குவதிலேயே, பாஷையைப் புரிய வைப்பதிலேயே ருக்குவுக்குப் பொழுது சரியாகி விட்டது.

மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு தான் ருக்குவுக்கு வர முடிந்தது. சில முகங்களை எவ்வளவு பார்த்தாலும் மறந்துவிடும். எவ்வளவு பழகின முகமாயிருந்தாலும் அந்த உருவம் மனத்தில் பதிய, அப்படியே நினைவுக்கு வரத் தயங்கும். ருக்குவின் முகம் அப்படிப்பட்ட முகமாகத் தான் தோன்றிற்று. நாகம்மாள் மனத்துக்குள் நினைத்து நினைத்துப் பார்ப்பாள். திடீரென்று அந்த முகம் ஓர் இமை விடாமல் ஒரு சாயல் விடாமல் கண் முன்னே பளிச்சிடும். ஒரே ஒரு கணம் தான். அப்புறம் என்ன களித்தாலும் வராது. ஆனால் அந்தப் புன்சிரிப்பு, இனிமை, உறுதி இவைமட்டும் உள்ளே பதிந்து கிடந்தன. இப்பொழுது கூட இரண்டு வாரப் பழக்கத்துக்கும் பிறகு கூட இவ்வளவு அருகில் இருக்கும்போது கூட, கண்ணை மூடினால் அவள் முகம் தெளிவாகக் கண்முன் நிற்காது.

இப்பொழுதுகூட அந்த முகம் அப்படித்தான் நழுவி நழுவி ஓடியது.

"ருக்கு! ருக்கு!" என்று கூப்பிட்டாள் நாகம்மாள். பதில் இல்லை.

"ருக்கு! ருக்கு! ருக்குமிணி!"

"........."

விசிறியைப் போட்டுவிட்டு அவள் வெளியே வந்தபொழுது, கூடத்தில்

சந்திரா சோபாவில் சாய்ந்தபடியே கண்ணை மூடியிருப்பது தெரிந்தது.

"நீ எப்ப வந்தே?" என்று கேட்டுக் கொண்டே சந்திராவின் அருகில் சென்றாள் நாகம்மாள்.

சந்திராவை எழுப்ப மனமில்லை நாகம்மாளுக்கு. சோபாவில் படுத்தவாறு அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்தவளைச் சற்று நின்று கவனித்தாள். ஹால் மத்தியில் தொங்கின விசிறி லேசான வேகத்தில் சுழன்றுகொண்டிருந்தது. வேர்வைப் பசையில் நெற்றியில் ஒட்டிக் கொண்டிருந்த முன் மயிர் இப்பொழுது காற்றுப் பட்டுப் பிரிந்து அலைந்தது. அகன்று நீண்டிருந்த பின்னல் தோள்மீது வளைந்து இடது கைமீது விழுந்து கிடந்தது. நாகம்மாளுக்கு நெஞ்சு பூரித்து நெகிழ்ந்தது ஒரு கணம். 'நம்முடைய பெண்ணா இவள்?' என்று அவளுக்கே ஓர் ஆச்சரியம். அப்படி வளர்ந்து கிடந்தாள் சந்திரா. நிறத்தில் தவிர வேறு எதிலும் தன்னைக் கொள்ளவில்லை. தன் கணவனையே அந்த உயரத்திலும் வாளிப்பிலும் கொண்டு, சோபா முழுவதிலுமே நீண்டு குழைந்திருப்பதைப் பார்த்த போது கையில் அள்ளிக்கொள்ள வேண்டும்போலிருந்தது. ரவிக்கையின் செம்பருத்தி வர்ணத்திலும், புடவையின் சிவப்பும் நீலமும் கலந்த கலவையிலும் அந்த உடலைப் பார்க்கும்போது, தோட்டத்தில் தாமிரக்கொழுந்துகள் துளிர்த்து அசைந்த மாங்கன்று மாதிரி யிருந்தது. மாங்கொழுந்தின் நிறத்தைப் போலத்தான் இன்னதென்று சொல்ல முடியாமல் கண்ணைக் கட்டி நிறுத்திற்று. அவன் போன வருடம் இதைக் காண முடியவில்லை. அடுத்த வருடம்கூடக் காண முடியுமோ என்னவோ? இதே தாமரை இலை பச்சை முற்றிவிடத்தான் செய்யும்.

'தூங்கட்டும்' என்று விட்டு விட்டாள் நாகம்மாள். சிறிது நேரம் எல்லாவற்றையும் மறந்து விட்டிருக்கட்டும் என்று விட்டு விட்டாள். ஆனால் ரங்கன்மீது கோபம் கோபமாக வந்தது. சகதியிலே புரளுகிற ஜந்தும் என்று மனசு வெறுப்பாகப் புகைந்தது. அவனை நினைக்க நினைக்க வெறுப்பாகக்கூட இல்லை. தீரர்களை, வீரர்களைக் கண்டால் எதிரிக்கு வெறுப்பு வரும். ஆனால் நீசர்களை, சாக்கடையைத் தண்ணீர் என்று மயங்கி நினைக்கிறவர்களைக் கண்டால் அருவருப்புத்தான் எழுகிறது. அதுவும், ஆறு மாதங்கள் பழகிவிட்டு, காரில் ஏற்றிக் கொண்டு ஊரையெல்லாம் சுற்றிவிட்டு, ஊரெல்லாம் காண இழைந்து விட்டு — சை, குப்பை! உனக்குக் கண்ணின் ஏதாவது இருக்கிறதாடா? இந்த நிறைவை நிறைவாகக் காண முடியாத கண் கண்ணா? பாழும் கிணறு?..நாகம்மாளுக்குக் கோபத்தோடு, அருவருப்போடு, ஒரு பீதி, ஓர் ஐயம் வயிற்றில் முறுமுறுவென்று நெளிந்தது. 'இவளைத் தொடாமலா இருந்திருப்பான், நாசமாய்ப் போகிறவன்?' என்று மனசு கூச்சலிட்டது. வெளியே சொல்ல முடியாமல், தன்னையே வஞ்சித்துக் கொள்ள முடியாமல் புலம்பிற்று.



புறக்கடையிலிருந்து முகத்தைக் கழுவித் துடைத்துக் கொண்டே கூடத்துக்கு வந்த ருக்கு, நாகம்மாளையும் சந்திராவையும் பார்த்து, குரலைத் தாழ்த்தி "எப்ப வந்தாள் சந்திரா?" என்று கேட்டுக்கொண்டே உள்ளே போனாள். நாகம்மாள் அவளைத் தொடர்ந்து சென்று, "நாம பேசிக் கொண்டிருக்கிறபோது வந்து படுத்தின் டிருக்காபோலிருக்கு. அசந்து தூங்கறா. அதான் எழுப்பலே" என்று கூறிக் காப்பி கலந்தாள்.

சந்திராவைப் பற்றி ஒன்றுமே இதுவரை அவளிடம் சொல்லவில்லை அவள். ருக்குவும் சந்திராவின் கலியாணத்தைப் பற்றி அக்கறையாகக் கேட்கவில்லை. ஏழெட்டு நாட்களுக்கு முன்னால் சுப்புசாமியிடம் ஏதோ வியாஜ்யம் சம்பந்தமாக யோசனை கேட்க வந்த சீதையாச்சி உள்ளே சிறிது நேரம் வந்து பேசிக் கொண்டிருந்தாள். 'கொளந்தைக்கு இன்னும் கல்யாணம் பண்ணலீங்களா?' என்று அவள் பேச்செடுத்தபொழுது, 'பண்ணனும்' என்று நாகம்மாள் இழுத்தாள். "அதுக்குள்ளே என்ன அவசரம் அவ கலியாணத்துக்கு! இன்னும் இரண்டு வருஷங்கள் படிக்கட்டுமே" என்று ருக்குதான் சொன்னாள். தன் அசாதாரணமான நிலையினாலோ என்னவோ அவள் சந்திராவின் அகக் கிடக்கைகள் பற்றி வாயைத் திறந்து ஒன்றும் பேசவில்லை. ஆனால் கவனித்து மனத்தில் வாங்கிக் கொள்ளாமலா இருப்பாள்!

பொரபொரவென்று ஏதாவது சொல்லித் தீர்த்துக்கொள்ள வேண்டுமென்று துடித்தது நாகம்மாளுக்கு. ஆனால் பயம்



பாரத் பைன் ஆர்ட்ஸ் ஆதரவில் 8-4-61 அன்று சென்னை செயிண்ட் மேரீஸ் மண்டபத்தில் நடனம் ஆடிய பேபி வாசந்தியின் திறமையைப் பாராட்டி திரு சிவாஜி கணேசன் வாழ்த்தினார். வாசந்தி கல்கத்தா திரு கே. கே. அய்யங்காரின் புதல்வியும், திரு டி. கே. மருதப்பப்பிள்ளையின் சிஷ்யையும் ஆவாள்.

மேலிட்டு நின்றது. சந்திரா அதை விரும்பாவிட்டால்? இந்த அனந்தசாமி பையனைப் பற்றி நன்றாக விசாரிக்கிறேன் என்று சொன்னார். விசாரித்திருப்பார், அவருடைய தாயார் காலமாகியிரா விட்டால்.......நாகம்மாளின் நினைவு அதையே பிடித்துக் கொண்டது.

"அனந்தசாமி வைத்தியர் மட்டு மில்லை. சன்யாசி மட்டும் இல்லை. நாலும் செய்யத் தெரியும் அவருக்கு" என்றான்.

திடீரென்று அனந்தசாமியைப் பற்றியே பேச்சுத் திரும்பியதும் ருக்குவுக்குச் சற்று ஆச்சரியமாக இருந்தது.

"நாலும் தெரியுமா? ஏதாவது இரண்டு சொல்லேன்."

"அவர் கலியாணம் பண்ணிக்கொள்ள வில்லையே தவிர, பல கல்யாணங்கள் செய்து வைத்திருக்கிறார். வைத்தியத் துக்குப் போகிறபொழுது எங்கெங்கே கலியாணத்துக்குப் பெண்கள் இருக்கு, பையன்கள் இருக்கு என்றெல்லாம் பார்த்துக்கொண்டு வந்து சொல்லுவார். எனக்குத் தெரிந்து ஏழெட்டுக் கலியா ணங்கள் இப்படி நடந்திருக்கின்றன."

"அதாவது, பெற்றவர்களுக்கு வைத் தியம் .... அப்புறம்!"

"ஆமாம்! கலியாணமாகி அகமுடை யான் பெண்டாட்டிகள் மனஸ்தாபத்தி னாலே சேராமல் இருப்பார்கள். அவர் களை நல்ல வார்த்தைகள் சொல்லிச் சேர்த்து வாழ வைத்திருக்கிறார்."

ருக்குவுக்கு இலேசாகச் சிரிப்பு வந்தது. "அப்புறம்?"

"எங்கே குடியிருக்க ஜாகை காலி யிருக்கிறது, காலியாகப் போகிறது--"

"வீடு விற்பனைக்கு வருகிறது...?"

"பேஷாக, எங்கெங்கே மனைகள் விலைக்கு வருகின்றன என்று அவரைக் கேட்டால் தெரியும்."

"கலியாணம் பண்ணி வைத்து, வீடு பார்த்து, வீடு வாங்கிக் கொடுத்து வாழ வைத்து இவ்வளவும் செய்யத்தெரியும்."

"நீதான் நாலையும் சேர்த்துச் சொல்லி விட்டாயே."

"அதான் சந்திராவுக்கும் சுலபமாகக் கலியாணம் ஆகிவிடும் என்று நீ பேசா மல் இருக்கிறாயாக்கும்?"

நாகம்மாளுக்கு இலேசாக ஏதோ இடித்தாற் போலிருந்தது. எதைப் பேச வேண்டாம் என்று அவள் விலகிச் சென் றாளோ, அதுவே வந்துவிட்டது.

"அவரைத்தான் நம்பிக்கொண்டிருக் கிறேன்" என்று வறட்டுக் குரலில் சொல்லி மேலே பேச்சு வளராமல் தப்பித்துக் கொள்வதற்காகக் காப்பிப் பாத்திரங்களை எடுத்துக் கொண்டு, புறக்கடைக் கிணற்றடியைப் பார்க்க நடந்தாள். ஆனால் அவள் போன ஒரு நிமிஷத்துக்குள் ருக்குவும் அங்கே வந்து, "காப்பிப் பாத்திரத்தை நீ ஏன் அலம்ப ணும்? வேலைக்காரிதான் மூன்று மணிக்கே வந்து விடுகிறாளே!" என்றான்.

"என்னமோ இன்றைக்குத் தோன் றிற்று நாம்தான் செய்வோமே என்று."

"நானும் ஏதாவது ஊகித்துக் கொண்டிருப்பேன்..."

"அப்படி யென்றால்?"

"இந்தப் பெண் ஏன் இப்படிக் கால் தரிக்காமல் அலைகிறாள், சொல்லு."

பதில் சொல்லாமல் பாத்திரங்களைக் கழுவினாள் நாகம்மாள். ருக்குவும் பக் கத்தில் உட்கார்ந்து ஒரு பாத்திரத்தை எடுத்து விரலால் குழப்பிக் கொண்டே, "சொல்ல வேண்டுமென்று கட்டாய மில்லை. ஆனால், நீ என்னமோ மென்று மென்று விழுங்குகிறதையும், அவள் வாயை மூடி மூடித் தவிக்கிறதையும் பார்த்தால் எனக்குக் கேட்க வேண்டும் போலத் தோன்றிற்று" என்றான்.

"சொன்னால் என்ன முழுகிவிடப் போகிறது? உன்னைச் சரியாகக் கூடப் பார்க்காமல் விட்டுவிட்டு ஓடினார் இந்தச் சன்யாசி. இவளைப் பார்த்துப் பேசி, தொட்டுப் பழகிவிட்டு, ஒதுங்கி ஓடு கிறான் அந்த நாசகாரன்."

பாத்திரத்தைக் குழப்பிக் கொண் டிருந்த ருக்குவுக்கு புத்தியே குழம்பு வதுபோலிருந்தது. "என்ன நாகம் இது! யார் அவன்?" என்றான். (தொடரும்)


Stanes
PURE INDIAN
COFFEE
STANES
FRENCH

# நரிவேட்டை

**3**

கதை:
**ஜெயந்தி**

சித்திரம்:
**வினு**

துப்பறியும் இலாக்காவைச் சேர்ந்த குமார், சீனக் கிழவன் ஒருவனை ஒற்றர் கூட்டத்தைச் சேர்ந்தவனே எனச் சந்தேகிக்கிறான்.

கிழவனுடைய மகள் குமாரை நோக்கி ஓடி வருகிறாள்....


















மறுநாளும் அதன் பின்னரும்.. அவர்கள் நட்பு வளருகிறது.



இதற்கிடையில்..






குறுகலான பாதை வழியே அழைத்துச் செல்லப் படுகி றன் கிழவன். கதவைத் திறந்ததும் ...

டெஸிமோ! ரொம்ப முக்கியமான காரியமாயிருந்தாலொ ழிய என்னைக் காண வரக் கூடாதே!

அது தெரியும் எனக்கு!...

குமார் வந்திருப் பதைப் பற்றிக் கூறுகிறன் கிழவன் டெஸிமோ.

போட்டோவில் இருப் பவனே; சந்தேகமே இல்லே!

என்ன செய்தாய் அவனை?

என் ஓட்டலில் அண்ட விடுவேனா? துரத்தி விட்டேன்!

முட்டாள்! கெடுத்து விட்டாயே காரியத்தை! அவனுக்கு உன் மீது சந்தேகம் உண் டாகியிருக்கும் இப்போது!

தொட

# தி இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க்
## லிமிடெட்



எல்லா மக்களின தேவைகளையும் பூர்த்தி செய்ய

# ஒரு ரெக்கரிங்
# டெபாஸிட் திட்டத்தை

ஆரம்பித்திருக்கிறார்கள்



குறைந்தபட்சம் ரூ. 5/-லிருந்து அதிகபட்சமாக, அதன் பெருக்குத் தொகை ரூ. 500/- வரையில் டெபாஸிட்டுகள் ஏற்றுக்கொள்ளப்படும்

பிரதி மாதம் டெபாஸிட் செய்யும் தொகையான

| | | | | |
|---|---|---|---|---|
| | **ரூ. 5** | **ரூ. 10** | **ரூ. 50** | **ரூ. 100** |
| | கீழ்க்கண்டபடி பெருகும் | | | |
| 34 மாதங்களில் | ரூ. 180 | ரூ. 360 | ரூ. 1,800 | ரூ. 3,600 |
| 46 மாதங்களில் | ரூ. 250 | ரூ. 500 | ரூ. 2,500 | ரூ. 5,000 |
| 85 மாதங்களில் | ரூ. 500 | ரூ. 1,000 | ரூ. 5,000 | ரூ. 10,000 |

முழு விவரங்களுக்கு பாங்கின் எந்தக் கிளைக் காரியாலயங்களுக்காவது தயவு செய்து எழுதவும் :

**எம். ஸிடி. முத்தையா**
சேர்மன்

**ஸி. பி. துரைக்கண்ணு**
ஜெனரல் மானேஜர்

# திருப்புத்தூர் திருத்தளிநாதர்

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

இறைவனின் தாண்டவத் திருவுருவங்கள் ஏழு என்பர். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்து செயல்களை இறைவன் செய்கிறான். ஒவ்வொரு செயலைச் செய்யும்போது ஒவ்வொரு தாண்டவம் புரிகிறான் என்றும் அறிவோம். 'ஐந்து கிருத்யங்களுக்கும் ஐந்து தாண்டவக் கோலம்தானே இருத்தல் வேண்டும். ஏழு என்ன கணக்கு?' என்று நீங்கள் கேட்பீர்கள். ஐந்து செயல்களுக்கும், ஐந்து தாண்டவம், அதில் காத்தலை இரண்டு கூறாய்ப் பிரித்து இன்பக் காத்தல், துன்பக் காத்தல் என்று பாகுபாடு பண்ணி, ஐந்தை ஆறாக்கி யிருக்கிறார்கள். பின்னர் எல்லாச் செயல்களையும் ஒருமிக்கச் செய்யும் ஆனந்தத் தாண்டவமே, இத்தாண்டவ வடிவங்களுக்கெல்லாம் சிகரமாகிறது. இத்தாண்டவ வடிவங்களை இறைவனே தன் துணைவியாம் பார்வதிக்குக் கூறியதாக வரலாறு.

மாதவர் பரவும் ஆனந்த நடனம்
வயங்குறு சந்தியா நடனம்
காதலி! நின்பேர்க் கௌரி தாண்டவமே
கவின்பெறு திரிபுர நடனம்
ஓதுமாகாளி தாண்டவம், முனிதாண்டவம்
ஓடும் உலக சங்கார
மேதகு நடனம் இவை இவைநாம்
விதந்த தன்னுமம் என்று உணர்தி

என்பது பாட்டு. இவற்றில் கௌரி தாண்டவத்தை அன்னை பார்வதியின் வேண்டுகோளுக்காகவே ஆடிக் காட்டியதாக ஐதீகம். அது காத்தல் தாண்டவத்தில் இன்பக் காத்தலை விளக்கும். அன்னைக்காக ஆடிய தாண்டவத்தில் இன்பக் காத்தல் இல்லாதிருக்குமா? தில்லைப் பொன்னம்பலத்திலே ஆனந்த தாண்டவத்தையும், மதுரை வெள்ளியம்பலத்திலே சந்தியா தாண்டவத்தையும், திருக்குற்றாலத்துச் சித்திர சபையிலே திரிபுர தாண்டவத்தையும், திருவாலங்காட்டு ரத்தின சபையிலே காளி தாண்டவத்தையும், திருநெல்வேலி தாமிர சபையிலே முனிதாண்டவத்தையும் புரிகிறார் என்று அந்தந்தத் தல வரலாறுகள் கூறும். அப்படியானால் கௌரி தாண்டவம் ஆடிய தலம் எது? இதை ஆராய்ந்தால் கௌரி தாண்டவம் ஆடிய இடம்தான் திருப்புத்தூர் சித்சபை என்று கண்டோம். இங்குள்ள சித்சபையில் இன்று நின்று நடம் ஆடுபவர் ஆனந்த நடராஜர்தான்.

சிவசக்தியான கௌரி பெருமாளோடு ஊட, அவள் தன் ஊடல் தீர்க்க இத்தத் தாண்டவத்தை ஆடினார் இறைவன் என்பது புராணக் கதை. கௌரி யம்மையார் தவம் கிடந்து இத்தாண்டவத்தைக் காணப்பெற்றார் என்பதும் ஒரு வரலாறு. இந்தத் தாண்டவக் கோலம் ஒன்று இன்று சென்னைப் பொருட்காட்சி சாலையில் இருக்கிறது. காஞ்சீபுரத்தை அடுத்த கூரம் என்ற இடத்திலிருந்து எடுக்கப்பட்டது என்று தெரிகிறது. நான்கு கைகளுடனும் வலது கையில் துடியையும் இடது கையில் பாம்பையும் ஏந்திய கோலம். இன்னும் ஒரு கரம் அபயகரம், மற்றொன்று கஜஹஸ்தம். முயலகன் பேரில் ஊன்றிய திருவடி, எடுத்த பொற்பாதம், சுழன்று ஆடாத நிலை. இத்தகைய அற்புதக் கோலத்தில் ஆடிய தலமே திருப்புத்தூர். அத்தலத்துக்கே செல்கிறோம் நாம் இன்று.

தமிழ் நாட்டில் திருப்புத்தூர்கள் இரண்டு. ஒன்று ராமநாதபுரம் மாவட்டத்தில், மற்றொன்று வட ஆர்க்காடு மாவட்டத்தில். இரண்டில் பாடல் பெற்ற தலம் ராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ளதே. இந்த ஊர் காரைக்குடி ஸ்டேஷனிலிருந்து நேர்மேற்கே பதினைந்து மைல் தொலைவில் இருக்கிறது. மதுரைக்கு வட கிழக்கே 40 மைல் தூரம். மதுரையிலிருந்து செல்ல விரும்பினால் ஒன்று சொந்தக் கார் இருக்க வேண்டும். இல்லை, பஸ் பிரயாணத்தோடு திருப்தி அடைய வேண்டும். காரைக்குடியிலிருந்து காரில் சென்றால் வழியில் குன்றக்குடி முருகனையும், பிள்ளையார்பட்டிப் பிள்ளையாரையும் தரிசித்து விட்டே செல்லலாம். பிள்ளையார்பட்டிக்கும் திருப்புத்தூருக்கும் இடையே நான்கு மைல் தூரம்தான். மெயின் ரோட்டை ஒட்டியே கோயில் இருக்கிறது. இந்த ஊரில் அன்று கோட்டை இருந்திருக்க வேண்டும். இன்று இருப்பதெல்லாம் இடிந்த மதில் சுவர்கள் தாம். கோயில் கிழக்கு நோக்கியிருக்கிறது. சுவாமி கோயிலுக்கு நேராக ஒரு கோபுர வாயிலும், அம்பாள் சந்நிதிக்கு நேராக ஒரு



சப்த மாதர்

கோபுர வாயிலும் இருக்கின்றன. கோயில் பெரிய கோயில் அல்ல. கோயில் திருவண்ணாமலை ஆதீனத்தார் மேற்பார்வையில்தான் இருக்கிறது.

கோயில் வாயிலில் ஒரு கீத்துக் கொட்டகை இருக்கும். அதைக் கடந்தே கோயிலுள் நுழைய வேணும். கோயிலின் வடக்குப் பிராகாரத்தில் வயிரவர் சந்நிதி மேற்குப் பார்க்க இருக்கிறது. இங்கு வயிரவர் வரப்பிரசித்தி உடையவர். இந்தக் கோயிலில் திருமால் திருமகள் சந்நிதி, அகஸ்தீசுவரர் சந்நிதிகள் எல்லாம் உண்டு. நடராஜர் சிவகாமி எல்லாம் இருக்கிறார்கள். என்றாலும் அங்கிருப்பவர் ஆனந்த நடராஜரே, கௌரி தாண்டவர் அல்ல. இத்தலத்தில் கருவறையில் இருப்பவர் திருத்தளி நாதர் அம்மை சிவகாமி. இக்கோயிலில் இருக்கும் செப்புச் சிலைகளில் உயர்ந்தவை, சிறப்பானவை, ராமர், சீதை, இலக்குமணர் சிலைகள்தாம்.

இவை எப்படி இந்தச் சிவன் கோயிலுக்கு வந்தவை என்று தெரியவில்லை. எங்கேயோ புதையுண்டு கிடந்தவர்களை எடுத்து வைத்திருக்கிறார்கள் என்று சொல்லுகிறார்கள். இங்கேதான் வான்மீகர், அகத்தியர், திருமகள், இந்திரன் மகன் சயந்தன் எல்லாம் வழிபட்டதாக வரலாறு. ஆண்டுதோறும் சித்திரை மாதம் முதல் வெள்ளிக்கிழமை சயந்தன் பூசை நடக்கிறது. வெளிப் பிராகாரத்தில் மேல் பக்கத்தில் சப்த மாதர், தல விருட்சமான கொன்றை மரம் ஆகியவை இருக்கின்றன.

இத்தலத்துக்கு அப்பர் வந்திருக்கிறார், சம்பந்தர் வந்திருக்கிறார்.

மீன் காட்டும் கொடி மருங்குள்
உமையாட்கு என்றும்
விருப்பவன் காண்; பொருப்புவலிச்
சிலைக்கை யோன்காண்;

நன் பாட்டுப் புலவனுக்குச்
சங்கம் ஏறி நற் கனகக்
கிழி தருமிக்கு அருளி
னோன் காண்

பொன் காட்டக் கடிக் கொன்றை
மருங்கே நின்ற
புனக் காந்தள் கைகாட்டக்
கண்டு வண்டு

தென் காட்டும் செழும் புறவில்
திருப்புத்தூரில்
திருத்தளியான் காண்
அவன் என் சிந்தையானே

என்பது அப்பர் தேவாரம். மதுரையில் சோமசுந்தரக் கடவுள் தருமிக்குப் பாட்டெழுதிக் கொடுத்துப் பாண்டியனிடம் பொற்கிழி பெற வைத்த வரலாறெல்லாம் கூறப்பட்டிருக்கிறது தேவாரத்தில். சம்பந்தரும் ஒரு பதிகம் பாடியிருக்கிறார்.

வெங்கள் விம்மு வெறியார்
பொழில் சோலை
திங்களோடு திளைக்கும்
திருப்புத்தூர்க்
கங்கை தங்கு முடியார்
அவர் போலும்
எங்கள் உச்சி உறையும்
இறையானே

என்பது சம்பந்தர் தேவாரம்.

இந்தக் கோயிலில் கல்வெட்டுக்கள் நிறைய இருக்கின்றன. கேரள சிங்க வள நாட்டுப் பிரமதேயமான திருப்புத்தூர் என்றும், கொழுவூர் கூற்றத்து பிரம தேயமான திருப்புத்தூர் என்றும் இவ்வூர் கல்வெட்டுக்களில் குறிப்பிடப்பட் டிருக்கிறது. திருக்கற்றளிப் பட்டாரர், ஸ்ரீ தளிப்பரமேசுரர், திருத்தளியாண்ட நாயனார், கைலாசமுடைய நாயனார், திருத்தளிப் பெருமானடிகள் என்று இறைவன் குறிக்கப்பட்டிருக்கிறான். நடராஜரைக் கூத்தாடு தேவர் என்று குறித் திருக்கிறார்கள். காமக் கோட்டமுடைய நாச்சியார், திருப்பள்ளி யறை நாச்சியார் என்று அம்பிகை குறிப்பிடப்பட்டிருக்கிறாள். இந்தக் கல்வெட்டுக்களிலிருந்து கிடைக்கும் தகவல்களோ அனந்தம். கோயில் விளக்குக்கு நாற்பது கழஞ்சு பொன் கொடுத்தது. விளக்கெரிக்க ஐம்பது ஆடுகள் வழங்கியது. கோயில் திருவிழாவுக்கு நெல் அளந்தது. கோயிலுக்கு நெல்லும் பொன்னும் ஒரு வணிகன் அளித்தது எல்லாம் தெரிகின்றன. திருப்புத்தூர் சபையார் ஜயங்கொண்ட விண்ணகராழ்வார் கோயிலில் கூடி நரலோக வீரன் சந்தி என்று கோயிலில் ஏற்படுத்தியது, தேவாரம் பாடத் தானம் வழங்கியது முதலிய தகவல்களுமே கிடைக்கும். ஆளுடைய பிள்ளையால் சம்பந்தர் சந்நிதியில் பூசைக்குப் பொருள் கொடுத்தது, பாண்டியன் ஸ்ரீ வல்லபதேவன் அரசி உலக முழுதுடையாள் கோயில் மடைப்பள்ளி கட்டியது, கணிகை ஒருத்தி கோயில் திருவிழாக் காசுக்கு ஒரு திருவுருவம்



தல விருட்சம் - கொன்றை

எடுப்பித்தது—இன்னும் எண்ணற்ற தகவல்கள் நமக்கு இந்தக் கல்வெட்டுக்களிலிருந்து கிடைக்கும். அவகாசம் இருப்பவர்கள் இத்தலத்துக்கு வடமேற்கே பதினைந்து மைல் தொலைவில் உள்ள பிரான்மலைக்கும் சென்று திரும்பலாம். பிரான்மலை வேள்பாரி இருந்து அரசாண்ட இடம் என்பர். அதனைக் கொடுங்குன்றம் என்றே அன்று அழைத்திருக்கின்றனர். கொடுங்குன்றேசரும், குயிலமிர்த நாயகியும் அங்கே கோயில் கொண்டிருக்கிறார்கள். சம்பந்தர் பாடியிருக்கிறார்.

வானில் பொலிவு எய்தும்
மேகம் கிழித்து ஓடி
கூனற்பிறை சேரும் குளிர்
சாரல் கொடுங்குன்றம்
ஆனிற் பொலிவயர்ந்து
அமர்ந்தாடி உலகேத்தத்
தேனிற் பொலி மொழியாளொடு
மேயான் திரு நகரே.

என்பது சம்பந்தர் தேவாரம். கோயில் மலை அடிவாரத்தில் இருக்கிறது. மலைமேல் ஏறிச் சென்றால், அங்கு பைரவர் சந்நிதியும், சிவ சந்நிதியும் இருக்கின்றன. அங்குள்ளவர் கல்யாணக் கோலத்தில் இருக்கிறார். தேவ சபை என்று ஒரு மண்டபமும் இருக்கிறது.

பிரான் மலையில் உள்ள முருகன் அருணகிரியாரது திருப்புகழ் பாடும் பெருமை பெற்றவன். இவர்களையும் கண்டு வணங்கி விட்டுத் திரும்பலாம்.

# ஓர் பரிபூரண சேவைத் திட்டம்




## பாண்டியன் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்

# நெருப்பு - கப்பல் - விபத்து

இன்ஷ்யூரன்ஸ்களுக்கு

ஆஸ்திகள்: ரூ. 1 கோடிக்கு மேல்

தலைமைக் காரியாலயம்: பாண்டியன் பில்டிங் மதுரை-1

கிளைகள்: பம்பாய், கல்கத்தா, டெல்லி, சென்னை, நாகபுரி, ஷோலாப்பூர்
4 ஆமதாபாத், லூதியானா, கோயமுத்தூர், கொச்சி

---

# "மூலம் தீராத வினையன்று"

## பாதிக்கப்பட்டவர்கள் கூறுகிறார்கள்-புதிய நிவாரணி அரிப்பு, எரிச்சல் மற்றும் வலியிலிருந்து குணமளிப்பதுடன் மூலத்தையும் சுருக்குகிறது.



உலகப் பிரசித்தமான ஆராய்ச்சிக் கூடமொன்று மூலத்தைச் சுருக்குவதுடன், வலியற்றமுறையில் குணப்படுத்தக்கூடிய புதிய பொருள் ஒன்றைக் கண்டு பிடித்திருக்கிறது. அப்பொருள் சில நிமிடங்களிலேயே அரிப்பையும் வலியையும் போக்குவதுடன் பாதிக்கப்பட்ட தசைநார்களையும் குணப்படுத்துகிறது. உண்மையாகவே. சுருக்கமும் ஏற்படுகிறது. டாக்டர்களின் மேற்பார்வையில் நடத்தப்பட்ட பரிசோதனைகளும்-10, 20 வருஷங்களான கேஸ்களில்கூட-இதை நிரூபித்தன. மேலும் வியக்கத்தக்கதென்னவென்றால், இந்த நல்ல முன்னேற்றம் பல மாதங்களுக்கு நீடித்திருந்தது. உண்மையாகவே பாதிக்கப்பட்டவர்கள், இதனால் அடைந்த பூரணக் குணத்தைக் கண்டு வியந்து "மூலம் தீராத வினையன்று" எனக்கூறினார்கள். இவ்வளவு பலன்களும், எந்த விதமான போதை தரும் மருந்துகளோ, அல்லது துவர்ப்பு பொருள்களோ, மயக்க மருந்துகளோ, உபயோகிக்காமல் அடையப் பெற்றவை. இரகசியம் என்னவென்றால், இந்த விசேஷமான புதிய நிவாரணி (பயோ-டைன்*) புண்ணான இடத்தைச் சீக்கிரத்திலேயே குணப்படுத்தி, மறுபடியும் ஆரோக்கியமான தசை துரிதமாக வளர உதவுகிறது. இப்பொருள் களிம்பு வடிவத்தில் ப்ரிப்பரேஷன் H* என்ற பெயரில் கிடைக்கிறது. உண்மையாகவே மூலத்தைச் சுருக்குவதுடன்-ப்ரிப்பரேஷன் H*, வழவழப்பாக்குவதன் மூலம் கழிவுப் பொருள் வெளியேறும் போதுள்ள வலியைக் குறைக்கிறது. அது மூலத்தின் முக்கிய காரணமான இரணம் பரவுவதையும், தடுக்கிறது.

இப்பொழுது இந்தியாவில் தயாரிப்பாளர்கள்:

**ஜாப்ரே மானேர்ஸ் & கம்பெனி லிட்.**

டிரேட்மார்க் உரிமையாளர்கள்:

**ஒயிட்ஹால் லாபரட்டரீஸ், U.S.A.**

**ப்ரிப்பரேஷன் H ***

**களிம்பு** * டிரேட் மார்க்.



# படித்துப் பாருங்கள்



## உயிர் நோன்பு

ஞானம், இன்பம் என்ற இரு வேறு இயல்புகளை உடைய பெண்ணை லக்ஷ்மியாகவும் குமுதாவாகவும் தான் காட்டிவிட விரும்பியதாகவும், இவ்விருவரிடையே சலிக்கும் சாதாரண மனிதனாகக் கதாநாயகன் தேசிகனை உருவாக்கியதாகவும் இதன் ஆசிரியர் தம் முன்னுரையில் கூறியிருக்கிறார்.

ஆனால் ஆசிரியர் கூறி விரும்புவது போலத் தேசிகன் சாதாரண மனிதன்தானா? அவன் ஆசையோடு மணந்து கொண்ட மனைவியிடம் எதிர்பார்க்கும் இன்ப வாழ்வு அதிதமானதா? இல்லவே இல்லை. மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவனும், கௌரவமான கணவன் ஸ்தானத்தை வகிக்க விரும்பும் ஒவ்வொருவனும் தனக்கு மனைவியாக வாய்த்த பெண்ணிடம் எத்தகைய வாழ்வை எதிர்பார்ப்பானோ அதைத்தான் தேசிகனும் எதிர்பார்த்து ஏங்குகிறான். அது கிடைக்காதபோது கூட மனைவியைக் கொடுமைப்படுத்தவில்லை. அவளது உணர்ச்சிகளுக்கு மதிப்பளித்து 'இன்று மாறுவாள், நாளைக்கு நம்மைப் புரிந்து கொள்ளுவாள்' என்று எத்தனையோ சந்தர்ப்பங்களில் விட்டுக் கொடுத்து அவளைத் தன் இதயக் கோயிலில் வைத்துப் பூஜிக்கிறான். ஆனால் அதற்குப் பிரதியாக லக்ஷ்மியோ உணர்ச்சியே இல்லாத ஜடமாக, 'கணவனே தெய்வம் அவன் இன்பமே தன் வாழ்வு' என்ற பாரதப் பெண்ணாக இல்லாமல் ஏதோ ஒரு புதிய உலகில் வாழும் புரியாத புதிராக இருக்கிறாள். இப்படிப்பட்ட ஒரு பாத்திரத்தை ஆசிரியர் 'சித்தாந்தங்களில் ஊறிய லக்ஷ்மி' என்று வர்ணிக்கிறார். இந் நாவலில் லக்ஷ்மியின் சித்தாந்தம் என்பது எது என்பதைப் புரிந்துகொள்ள முடியவில்லை.

ஆங்காங்கே சில குறைகள் இருப்பினும் லக்ஷ்மிதேசிகன் ஆகிய விநோதத் தம்பதிகளை நம்மிடையே உலவவிட்டு அவர்கள் வாயிலாகவும் குமுதாவின் மூலமாகவும் உணர்ச்சிகளை வடித்துக் காட்டி இருக்கும் முறை அழகாக உள்ளத்தைத் தொடும்படியாக இருக்கிறது. தேசிகனின் வாயிலாக ஒருதலைப்பட்ட காதலையும் தாம்பத்ய மன நெகிழ்ச்சிகளையும் சுவைபடச் சொல்லும் பாணி பாராட்டும்படியாக இருக்கிறது.

ஆசிரியர்: ஏ. எஸ். ராகவன், பிரசுரம்: மல்லிகா வெளியீடு, விற்பனை உரிமை: மெர்க்குரி புத்தகக் கம்பெனி, ராஜவீதி, கோயம்புத்தூர். விலை: ரூ. 3.

## சிற்பியின் கனவு

கொங்கு நாட்டுக் கலைஞன் கலைமணியை எகிப்து நாட்டுக்கு அழைத்துப் போய் எகிப்திய ஏந்திழையாள் சபனாவை அவனுக்கு மனைவியாக்கி வைத்து மறுபடியும் கொங்கு நாட்டில் கொண்டு வந்து சேர்த்து விடுகிறார். ஆனால் அமைச்சன் உக்கிரனின் வஞ்சகத்துக்கு இரையாகிறாள் சபனா என்ற அந்த வஞ்சிக் கொடி. காதலியைப் பிரிந்த ஏக்கத்திலே காதலன் கலைமணியும் அவள் மீது விழுந்து அழுது புலம்பி மடிகிறான். நாலைந்து வாக்கியங்களில் இந்த நவீனத்தை நாம் முடித்து விட்டாலும் முந்நூறு பக்கங்களுக்கு இந்தக் கதையை விவரித்திருக்கிறார் ஆசிரியர். சூழ்ச்சி, வஞ்சனை, பொறாமை ஆகிய பல்வேறு இயல்புகள் பின்னிப் பிணைக்கப்பட்டிருந்தாலும் ஒரு சரித்திர நவீனத்தைப் படிக்கிறோம் என்ற உணர்ச்சி ஏனோ ஏற்படவில்லை. நாடோடிக் கதை ஒன்றைப் படிப்பது போன்ற உணர்வே உண்டாகிறது.

சரித்திர காலத்துக்குச் சற்றும் பொருந்தாத 'ஐந்து மணிக்குக் கிளம்பினார்கள். பகல் பதினொரு மணிக்கு வந்து சேர்ந்தார்கள்' என்பன போன்ற வாக்கியங்களையும் வர்ணனைகளையுமாவது தவிர்த்திருக்கலாம்.

ஆசிரியர்: தே. ப. பெருமாள்; வெளியீடு: நீலா நூலகம், 40-எப், கெங்குரெட்டி ரோடு, சென்னை-8. விலை: ரூ. 4-00.

## நமது ரேடியோ

டெலிவிஷன் யுகத்தில் இருக்கும் நமக்கு ரேடியோ, அதில் உள்ள உறுப்புக்கள், அது இயங்கும் முறை முதலியவை பற்றித் தெரிய வேண்டாமா? அதற்கு இந்தப் புத்தகம் ஓரளவு துணை புரியும் என்று கூறலாம். சரளமாகப் படித்துப் புரிந்துகொள்ள முடியாதபடி ரேடியோக் கருவிகளின் செயல்களுக்கு ஏற்றபடி ஆங்கில வார்த்தைகளுக்குப் புதிய தமிழ்ப் பதங்களை அமைத்து இந்தப் புத்தகத்தை எழுதியிருக்கிறார். நெளி போக்கி, மின்கல அடுக்கு, ஊர்தி அலைகள், நெளிவு நிமிர்த்தி, மின் சுமையற்ற கடத்தி, ஒற்றி, நிலந் தொடுகம்பி, கடு கம்பி, வித்தைக் கண் கடுகுழாய், ஒரு வழிக் கதவு, கடுகுழாய், மின் அழுத்தப் பெருக்கி - இந்த விந்தைத் தமிழ்ச் சொற்களின் ஆங்கில மூலத்தையும் கூடவே கொடுத்திருப்பதால் குழப்பம் ஓரளவு குறைகிறது. ஆசிரியரின் முயற்சி பாராட்டுதற்குரியது.

ஆசிரியர்: எம். கான் முகம்மது; கிடைக்குமிடம்: காலேஜ் ஆப் இண்டஸ்ட்ரீஸ், வடக்குச் சித்திர வீதி, மதுரை. விலை ரூ. 2.25.

## புத்தகத்தின் கதை

நாட்டையும் நாகரிகத்தையும் வளர்க்கும் சாதனமாக இயங்கிவரும் புத்தகத்தின் கதையையே சொல்லுகிறது இந்தப் புத்தகம். மனிதகுலம் அறிவைச் சேகரிப்பதிலும் அதைப் பாதுகாப்பதிலும் செலவிட்ட பல்லாயிரக் கணக்கான வருடங்களின் சரித்திரமாக அமைந்திருக்கிறது இந்த நூல்.

இன்றையப் புத்தகத்தின் ஆரம்பம் கல்லும், கம்பும், எலும்பும், களிமண்ணும், தோலும்,

இல்லையும் என்று சொன்னால் அது இன்றைக்கு ஆச்சரியமாகத் தோன்றலாம். ஆனால் இந் நூலைப் படிக்கும்போது நாகரிகத்தின் சின்ன மாக விளங்கும் இன்றையப் புத்தகம் உருவான கதை எத்தனை சுவாரசியமானது என்பது தெரியும். ஒரு கதையை விடச் சுவையாக, மர்மங்கள் நிறைந்த ஒரு நவீனத்தைவிட விறு விறுப்புடையதாகப் புத்தகத்தின் கதையை விவரித்துக் கொண்டு போகிறார் இதன் ஆசிரி யர். அவசியம் ஒவ்வொருவரும் படித்து அறிந்து கொள்ள வேண்டிய விஷயங்கள் அடங்கிய புத்தகம்.

ஆசிரியர்: எஸ். ராமகிருஷ்ணன், ஸ்டார் பிரசுரம், 66 பெரிய தெரு, திருவல்லிக்கேணி, சென்னை—5. விலை ரூ. 1—25.

## இந்திய நாகரிகம்

வேறு நாட்டு நாகரிகத்தைச் சொல்லு வதுபோல் இந்திய நாகரிகத்தை அறுதியிட்டு உறுதியாகச் சொல்லிவிட முடியாது. இரண் டாயிரம் வருஷங்களாக — அதற்கும் மூற் பட்டதாக — அலையலையாகக் குடியேறிய அந்திய நாட்டினரின் நாகரிகத்தை யெல்லாம் இந்தப் பாரத பூமி தனதாக்கிக் கொண்டு ஜீரணித்திருக்கிறது. இந்நாட்டின் மொழி, கலாசாரம், இலக்கியம் இவைகளிலிருந்துதான் இந்திய நாகரிகத்தை ஒருமைப்படுத்தி ஒழுங் காக்க வேண்டும். அந்த முயற்சியை இந் நூலில் செய்திருக்கிறார் இதன் ஆசிரியர். வேதம், சாஸ்திரம், உபநிஷதம், காவியம் ஆகிய வடமொழிநூல் ஆதாரங்களையும் தமிழிலக்கியங்களின் துணையும் கொண்டு இந்திய நாட்டின் நாகரிகத்தை அரசன், ஆட்சிமுறை, வருவாய் சட்டம், போர் முறை, மக்கள், குடும்பம், திருமணம், பெண்கள், கிராமம், நகரம், உணவு, உடை, தொழில் என்று இப்படியாக வரிசைப்படுத் திக் கொண்டு ஏராளமான விஷயங்களை நமக்குத் தருகிறார்.

ஆசிரியர்: எஸ். சங்கரன். வெளியீடு: மல்லிகைப் பதிப்பகம், தியாகராயநகரம், சென்னை-17. விலை ரூ. 2.50.

## விவேகானந்தரின் அடிச்சுவட்டிலே

'வறுமை மட்டும் இருந்திரா விட்டால் நரேந்திரர் விவேகானந்தராகி இருப்பாரா என்பது ஐயப்படத்தக்க காரியமே.' இதை நான் கூறவில்லை. '' நரேந்திரனுக்கு ஆடம்பர வாழ்க்கை கிடைத்திருந்தால் அவன் வேறு வழியில் போயிருப்பான் '' என்று இராம கிருஷ்ணரே கூறினார். விவேகானந்தர் திரு மணம் செய்துகொள்ளாமல் பிரம்மசாரியாக இருக்க முடிந்ததற்கு அவருடைய வறுமை முக்கிய காரணமாக இருந்தது என்று கூறினால் தவறில்லை. இவ்வாறு விவேகானந்தரின் அற்புத வாழ்க்கையை அழகாகச் சுவைபடச் சொல்லிக் கொண்டு போகிறார் ஆசிரியர்.

'' கதையைவிடச் சுவையாக, கவிதையை விட இனிமையாக அழகாக விவேகானந்தரின் வரலாற்று நூலை எழுதித் தந்திருக்கிறார் மதுரை தமிழ்நாடு நாளிதழின் செய்தி ஆசிரி யர் திரு ஏ. இராமசாமி அவர்கள்'' என்று பதிப்பாசிரியரின் பாராட்டுதலை இந்தப் புத்த கத்தைப் படிப்பவர்களும் நிச்சயம் ஒப்புக் கொள்ளுவார்கள்.

ஆசிரியர்: ஏ. இராமசாமி பி.ஏ., வெளி யீடு: அருணோதயம், ராயப்பேட்டை, சென்னை-14. விலை ரூ. 2.

## திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்

ஜி. யு. போப், கால்டுவெல் போன்ற வெளிநாட்டுப் பேரறிஞர்களும் தனக்குத் தொண்டு செய்யும்படி சிறப்புடையதாக இருந்தது நமது தமிழ்மொழி.

தென்னாட்டுத் திராவிட மொழிகளில் தமிழ் ஒன்றே தன்னை ஒப்பதும் மிக்கதும் இல் லாத சிறப்பு வாய்ந்ததென்பதைக் கால்டு வெல் தமது மொழியாராய்ச்சியின் மூலம் நிறுவிக் காட்டுகிறார். கால்டுவெல் அவர் களுக்குத் தமிழின்மேல் இருந்த பற்று இத னால் புலப்படுகிறது. மூலத்தின் சுவை குன் றாமல் புலவர் திரு கா. கோவிந்தன் அவர்கள் இந்த நூலைத் தமிழில் ஆக்கியிருக்கிறார்கள். எழுநூறு பக்கத்துக்கும் அதிகமான இந்த நூலை மொழியியல் வல்லுநர்கள் படிக்கும் போது பல அரிய செய்திகளைத் தெரிந்து கொள்ள முடியும். கால்டுவெல் அவர்களின் முடிபுகள் யாவற்றையும் அறிஞர் பெருமக்கள் அவ்வாறே ஒப்புக் கொள்வரோ, மாறுபடு வரோ என்று ஐயமிருந்தாலும் அவருடைய தமிழ்ப் பற்றையும், 'உயர்தனிச் செம் மொழி தமிழே' — என்று நிறுவும் ஆசையை யும் வியந்து போற்றாமல் இருக்க முடியாது. தமிழ்ப் பற்றும், தமிழுணர்வும், மொழி ஆர்வமும் உள்ள ஒவ்வொருவரும் கற்றுப் பேண வேண்டிய நூலாகும் இது.

தமிழாக்கம்: கா. கோவிந்தன்; வெளியீடு: வள்ளுவர் பண்ணை, பிராட்வே, சென்னை-1. விலை ரூ. 15.

## இன்ப நாள்

நகைப்பைக் கொண்டே 'மங்கள'மாய் முடியும் நூல் இது என்பது புலனாகும். இந்நாடகம், இரண்டு கோலைகளோடு காதலர்களைப் பிரித்து வைத்துக் கஷ்டங்கள் பல அளித்துக் கடைசியிலே அவர்களைச் சேர்த்து வைத்து ஒரு புதுக் கல்யாணத்தையும் முடித்து வைக்கிறது. மேடையை மனத்தில் கொண்டு எழுதப்பட்ட நாடகம் ஆகையால், படிக்கும் பொழுது பல இடங்களில் சுவை யற்றதாகத் தோன்றுகிறது. இருந்தாலும் இந்நாடகத்தைச் சிறப்பாகவே சமைத்திருக் கிறார் இதன் ஆசிரியர் துறையூர் கே. மூர்த்தி.

பிரசுரம்: அமுத நிலையம், தேனாம் பேட்டை, சென்னை-18. விலை 30 காசு.

## கிடைக்கப் பெற்றோம்

சத்திய சோதனை: மகாத்மா காந்தியின் சுயசரிதை மலிவுப் பதிப்பு.

பிரசுரம்: தமிழ்நாடு காந்தி நினைவு நிதி வெளியீடு, காந்தி மியூஸியம், தல்லாகுளம், மதுரை. விலை ரூ. 2.00

# நரை மயிரென இயற்கையைக் குறைகூறுதல் முறையோ?



"இயற்கையாகவே என் கேசம் நரைத்துவிட்டது ஐயா; என்ன செய்ய முடியும்?" —இவ்வாறு பலர் குறைகூறுவதை நாம் கேட்டிருக்கிறோம். ஆனாலும் நரை மயிருக்காக இயற்கையைக் குறைகூறுபவர், ஒருவருடைய கேசம் ஏன் நரைக்கிறது என்று ஆராய்வதுண்டா? 90 சதவிகிதம் இளமையில் நரை, சரியான கேச பராமரிப்பு இல்லாமையாலும், சுகாதாரமற்ற இடங்களில் வசிப்பதாலும், மற்றும் மட்டரகமான கூந்தல் தைலங்களை உபயோகிப்பதாலும் ஏற்படுகின்றன என்று பரிசோதனைகள் மூலம் தெளிவாகியுள்ளது. விஞ்ஞான முறையில் அகமதாபாத்தில் உள்ள ஒரு மிக்க நவீனமான பாக்டரியில் தயாரிக்கப்படும் "லோமா" நரை மயிர் ஏற்படுவதைத் தடுக்க சிறந்த மூலதாரப் பொருட்களுடன் சீரிய முறையில் செம்மையாகத் தயாரிக்கப்படுகிறது. "லோமா"வை வாங்குங்கள், இந்தியாவிலும் மற்றும் வெளிநாடுகளிலும் பல இலட்சக்கணக்கான மக்கள் ஏன் "லோமா"வில் பரிபூரண நம்பிக்கை வைத்திருக்கிறார்கள் என்பதை நீங்களே உணர்வீர். ஞாபகமிருக்கட்டும். "லோமா" என்பதன் பொருள், சிறந்த தரம் என்பதே—நீங்கள் எதிர்பார்ப்பதும் அதுவே!



கேசத்தைக் கருமையாக்குவதில் **லோமா** பாரினில் புகழ்பெற்றது.

பூரண ஏஜெண்டுகளும் ஏற்றுமதியாளர்களும்:
**எம். எம். கம்பாத்வாலா**
அகமதாபாத்-1 (இந்தியா) ஏஜெண்டுகள்:
**வி. நரோத்தம் & கம்பெனி** பம்பாய்-2

MPS.TAM

சென்னை ஏஜண்டுகள்: ஜே. பாலையாஸ் & கம்பெனி, 260, எஸ்பிளனேட், மதராஸ்-1
இலங்கை ஏஜண்டுகள்: செருன் கதீர் ப கோ., 41, 43, இரண்டாம் குறுக்குத் தெரு, கொழும்பு-11

# செக்கும் சிவலிங்கமும்

சிவமணி

மீனாட்சிபுரம் புளியந்தோப்பு வட்டாரத்தில் ஒரு பெரிய திடலில் செக்கு ஒன்று நெடு நாட்களாக ஆடிக் கொண்டிருந்தது. செக்கு ஆடுகின்ற அந்த இடத்துக்கு எதிரே சற்றுத் தொலைவில் ஒரு மஞ்சனத்தி மரம். அந்த மரத்தினடியில் ஒரு சிவலிங்கம். அந்தச் சிவலிங்கமும் செக்கைப் போலவே நீண்ட நாட்களாக அங்கே இருந்து வந்தது.

கிராமம் பெரிதாகையால் செக்கு ஓய்வு ஒழிவின்றி ஆடிக் கொண்டிருந்தது. அந்த ஊர் மக்கள் பழைய கொள்கைகளில் ஊன்றியவர்களாக இருந்ததால், சிவலிங்கத்துக்கும் ஓய்வு ஒழிவில்லை. எப்பொழுதும் அபிஷேகமும் பூஜையும் நைவேத்தியமுமாகவே நடந்து வந்தன!

நாட்டில் சமூகச் சீர்திருத்தமும் புதிய சூழ்நிலைகளும் உருவாக ஆரம்பித்ததிலிருந்து அந்தப் புளியந்தோப்புத் திடலில் அடிக்கடி புரட்சியாளர்கள் வந்து பொதுக்கூட்டம் நடத்தத் தொடங்கினார்கள். எல்லா மக்களுக்கும் சமுதாய உணர்ச்சியும், நாட்டுப் பொறுப்பும், முன்னேற்றக் கருத்துக்களும் உண்டாக வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்தோடு பல அறிவாளிகள் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். "நாம் எல்லாரும் இந் நாட்டு மன்னர்கள். நமக்குள் உயர்வு தாழ்வு இல்லை. நாம் எல்லாம் சரி நிகர் சமானம். நம்முடைய பழைய மூட எண்ணங்களையும் நம்பிக்கைகளையும் விட்டொழித்துப் புத்தறிவு பெற வேண்டும்!" என்று பெரிய பெரிய வார்த்தைகளை உபயோகித்து நீண்ட நீண்ட சொற்பொழிவுகள் ஆற்றினார்கள்.

இந்தச் சொற்பொழிவுகளையெல்லாம் கேட்கக் கேட்கச் செக்குக்கு ஒரு புத்துணர்ச்சி உண்டாக ஆரம்பித்தது. முக்கியமாக "சரி நிகர் சமானம்" என்ற அந்தச் சொல்லடுக்கானது செக்கினுடைய கல்நெஞ்சை உருக்கி விட்டது! 'மனிதர்கள் எல்லாரும் மன்னர்களாக உலவி வரும்போது, எனக்கும் இந்தச் சிவலிங்கத்துக்கும் மட்டும் ஏன் இந்த வித்தியாசம்? நாங்கள் இருவருமே குறுக்குத் துறைப் பாறையிலே பிறந்த சரிநிகரான கற்பிறவிகள்தானே? அப்படியிருக்கும்போது ஏன் சிவலிங்கத்துக்கு மட்டும் எப்பொழுது பார்த்தாலும் பூஜையும், அபிஷேகமும், மாலைகளும் விருந்துச் சாப்பாடுகளும்? எனக்கு மட்டும் ஏன் இப்படி இடுப்பு ஒடியும் படியாக இந்தக் கடுமையான வேலை?'

இவ்வாறு எண்ணத் தொடங்கிவிட்டது அந்தச் செக்கு!

## 2

புளியந்தோப்புத் திடலில் சிவராத்திரியன்று இரவெல்லாம் பஜனை நடந்தது. பக்தர்கள் எல்லாரும் சிவலிங்கத்துக்கு விதம் விதமான அபிஷேகங்கள் செய்தார்கள். கூட்டம் கூட்டமாகக் கூடியிருந்து துதிப் பாடல்கள் பாடினார்கள். செக்கு அந்தச் சிவராத்திரி முழுதும் உறங்கவில்லை. கடந்த இரண்டு மூன்று நாட்களாக அதற்குத் திருவிழா வேலை இரவும் பகலுமாக இடுப்பு ஒடியும்படி இருந்ததால் மிகவும் களைப்பாகத் தான் இருந்தது. ஆனாலும் அந்தச் சிவலிங்கத்துக்கு வந்த சிவராத்திரி அதிருஷ்டத்தைப் பார்க்கப் பார்க்க, செக்குக்குக் களைப்பே தோன்றாமல் உறக்கமெல்லாம் பறந்தோடி விட்டது! பஜனைப் பாட்டு ஒவ்வொன்றும் அதன் காதில் 'கணீர் கணீர்' என்று தாள ஓசையுடன் விழுந்தது.

எட்டுத் திசையும் பதினாறு கோணமும்
எங்கும் ஒன்றாய்
முட்டித் ததும்பி முளைத்தோங்கு சோதியை
மூடரெல்லாம்
கட்டிச் சுருட்டித்தம் கக்கத்தில் வைப்பர்
கருத்தில் வையார்
பட்டப் பகலை இரவென்று கூறிடும்
பாதகரே!

என்ற பட்டினத்தார் பாடலை அந்தச் சிவராத்திரி இரவில் ஒரு சாமியார் உரக்கப் பாடிக் கொண்டு நல்லுரை நிகழ்த்தினார்.



வியாதியஸ்தர்: உணர்வைத் தட்டி எழுப்ப ஏதாவது எழுதியிருக்கிறீர்களா?
டாக்டர்: 'ஓ' பில்லில் பழைய பாக்கியையும் சேர்த்துப் போட்டிருக்கிறேனே!



மனைவி : ஐயோ, இந்தாங்க! சீக்கிரம் எழுந்து வாங்க! நம்ம வீட்டிலே திருடன் நுழைந்துவிட்டான், எழுந்து வாங்களேன்!

போலீஸ்காரர் : நேத்தே என் டூட்டி முடிஞ்சிடுச்சு! இன்னிக்கு லீவு! வேறே யாரையாவது கூப்பிடு, போ!

---

அவருடைய பேச்சு அபாரமாகப்பட்டது செக்கிற்கு! சீர்திருத்தவாதிகள் எல்லாம் "எல்லா மக்களும் இந்நாட்டு மன்னர்கள்" என்றுதான் இதுவரை சொன்னார்கள். ஆனால் சாமியாரோ அதற்கும் ஒரு படி மேலே போய் விட்டார்! "எல்லா மக்களும் கடவுளின் சொரூபமே! மனிதர்கள் எல்லாரும் நடமாடும் தெய்வங்கள்! மனிதர்கள் மட்டுமா? அல்ல இந்த உலகின் ஒவ்வொரு பொருளுமே கடவுளின் வடிவந்தான்! இறைவன் தூணிலும் இருக்கிறான், துரும்பிலும் இருக்கிறான். அதோ நம் கண் முன்பு தெரிகிற அந்தச் செக்கிலும் அவனே இருக்கிறான்!" என்று சாமியார் ஒரே ஆவேசத்தோடு சொல்லி முடித்தாரோ இல்லையோ, செக்குக்கு உச்சியெல்லாம் சிவலிங்கமாகக் குளிர்ந்து விட்டது. சாமியாருடைய வார்த்தைகள் பஞ்சாமிருதத்தைக் கொண்டு தனது தலையில் அபிஷேகம் செய்ததுபோல் இருந்தது அந்தச் செக்கிற்கு!

## 3

சிவராத்திரிக்கு மறு நாள் இரவு சாமியார் செக்கடிக்கு வந்து காவித்துண்டை உதறிப் போட்டுக் கண்ணயர்ந்தார். இதுதான் சமயம் என்று செக்கு சாமியாரிடம் பேச ஆரம்பித்தது.

"ஐயா, சாமியாரே! செக்கும் சிவலிங்கமும் ஒன்று என்பதுதானே உங்கள் கொள்கை? தயவுசெய்து மறுபடியும் சொல்லுங்கள்!" என்று மெதுவாகக் காதோடு காதாய்க் கேட்டது செக்கு, தூங்குகிற சாமியாரிடம்!

"ஆமாம்" என்று சொல்லிக்கொண்டே சாமியார் எழுந்து உட்கார்ந்தார். உட்கார்ந்து கொண்டே மேலும் சொல்லுவார்:

"ஆமாம்; செக்கும் சிவலிங்கமும் ஒன்று என்றே நான் சொல்லுகிறேன். ஆனால் சிவலிங்கமும் செக்கும் ஒன்று என்று நான் சொல்லவில்லை!"

இவ்வாறு சாமியார் சொன்னதும் செக்குக்குக் குழப்பமும் அந்தக் குழப்பத்திலிருந்து கோபமும் உண்டாகவே, சிரித்துக்கொண்டே சாமியார் சொன்னார்:

"செக்கு சிவலிங்கத்துக்குச் சமானம் என்று நான் சொல்லுகிறேன். ஆனால் நீங்கள் எல்லாம் சிவலிங்கம் செக்குக்குச் சமானம் என்கிறீர்கள்! இதுதான் வித்தியாசம்!"

இப்படிச் சாமியார் சொல்லி நிறுத்தியதும், அவருடைய முகத்தைக் கூர்ந்து பார்த்தது செக்கு! பூர்வாசிரமத்தில் அவரை எங்கோ பார்த்திருப்பதுபோல் செக்கிற்கு ஒரு நினைவு மங்கலாக உண்டாயிற்று! எண்ணெய் தடவிய வழுக்கை மண்டையைப் பிசைந்து கொண்டு நன்றாக யோசனை செய்து பார்த்தது! ஞாபகம் வந்து விட்டது. குறுக்குத் துறைப் பாறைகளில் உளியும் கையுமாகக் கல்வேலை செய்து வந்த தன்னுடைய "தந்தை" தான் அவன்! தன் தந்தை மட்டுமா? அந்தச் சிவலிங்கச் சிலைக்குமே "தந்தை" அவன்தான் என்பது செக்குக்கு நினைவு வந்தது.

"எல்லாம் உன்னுடைய உளி செய்த குற்றம்!" என்று சீறியது செக்கு.

சாமியாருக்குச் செக்கின் உணர்ச்சி புரிந்தது. அவர் சொன்னார்:

"செகு மகனே! கோபிக்காதே! இந்தக் கையிலே இருந்த உளியினின்று ஒரு நாள் செக்கு வந்தது. இன்னொரு நாள் சிவலிங்கம் வந்தது! செய்த கை ஒன்றுதான். உருவாக்கிய உளியும் ஒன்றுதான்! ஆனாலும் ஒரு சமயம் அதிலிருந்து செக்கும் வேறொரு சமயம் அதிலிருந்து சிவலிங்கமும் ஏன் உருவாக வேண்டும்? இந்த இரகசியத்தைத் தேடித்தான் இப்படிப் புறப்பட்டு விட்டேன்! எங்கெங்கோ தேடி அலைகிறேன். வெள்ளை உடை காவி உடையாக மாறியதைத் தவிர, வேறு எவ்வித மாற்றமும் இதுவரை தெரியவில்லை! ஒரே உளியின் படைப்பில் செக்கும் சிவலிங்கமும் ஏன் வேறு வேறாக உருவாக வேண்டும் என்ற நுட்பத்தைக் கண்டுபிடித்தபிறகு, மறுபடியும் உன்னிடம் வந்து மேலே சொல்லுகிறேன்!"

இவ்வாறு சொல்லி விட்டுச் சாமியார் எழுந்து நடந்தார்.

சென்ற சாமியார் திரும்பி வருகிறவரையில் காத்திருப்போம் என்று, செக்கு தனது தொழிலைப் பொறுமையுடன் ஒழுங்காக நடத்திக்கொண்டு வந்தது. சிவலிங்கத்துக்கு வழக்கம்போல் அபிஷேகமும் பூஜைகளும் நடந்து வந்தன.

Arvind



QUALITY FABRICS

"SANFORIZED"
REGISTERED TRADE MARK
OF CLUETT PEABODY & CO. INC., U.S.A.

மர்ஸிரைஸ்ட் சான்பொரைஸ்ட்
வெள்ளை பாப்ளின்
**கோல்ட் டிரிங்**

மர்ஸிரைஸ்ட் சான்பொரைஸ்ட்
கலர் பாப்ளின் ப்ளூபெர்ட்

சலவை செய்யப்பட்ட
கேம்பிரிக்
**J 173 (ரிஜிஸ்.)**

சலவை செய்யப்பட்ட
வேஷ்டிகள்
**ஸொலிஸிட்டர் (ரிஜிஸ்.)**




அரவிந்த் மில்ஸ் லிட். ஆமதாபாத்-2

REGISTERED USER OF THE TRADE MARK 'SANFORIZED'

## கதம்பக் கவி மலர்கள்



### எரிந்த படைப்பு

வைக்கோற் படைப்புப் பார்த்திருக்கிறீர்களா? நெல் அறுவடையாகிக் களத்தில் அடிபுண்டபின் மீதமுள்ள பயிர்த் தாள்களை வெயிலில் காயச் செய்து சிறிய குன்றுபோல் படைப்பாக வேய்ந்து விடுவார்கள். நாட்டுப் புறங்களிலும், தமிழகத்துச் சிற்றூர்களிலும் இத்தகைய படைப்புக்களைக் காணலாம். வீட்டுக் கொல்லைப்புறங்களிலும், பொதுக் களங்களிலும், சிற்றூர்களுக்கே அழகு தருவன போல் இத்தகைய வைக்கோற் குன்றுகள் தோன்றும். மஞ்சள் பொன் நிறத்துக்குச் சிறிது மங்கலாக இந்த வைக்கோலுக்கென்றே ஒரு நிறம் உண்டு.

இவற்றை 'வைக்கோற் புரி' என்றும் சில பகுதிகளில் வழங்குகிறார்கள். வைக்கோற் புரிகள் தீப்பற்றி எரிந்தாலும் சாம்பல் ஆன பின்பு சரிந்து சாய்வது இல்லை. எரிவதற்கு முன் தாம் எந்த வடிவத்தில் இருந்தனவோ அதே வடிவில் நிறம் மட்டும் எரிந்து கருகித் தோன்றும். அவ்வாறு தோன்றும்போது உள்ளே அனல் இருப்பது வெளியில் தெரியாது. ஆனால் எதைக் கொண்டாவது தாக்கினால் பஞ்சு அமுங்குவது போல் அமுங்கித் தரை மட்டத்தில் கரிப்புழுதியாகக் குவிந்துவிடும்.

எரிந்த வைக்கோற் படைப்பின் இந்த நிலையைத் தன் வாழ்க்கையில் தனக்கு ஏற்பட்ட துன்பங்களுக்கு உவமையாகச் சொல்லிக் கொள்கிறான் ஒரு தமிழ்ப் புலவன். துன்பங்கள் என்னும் தீக்கொழுந்துகள் பற்றி எரித்த பின்னும் தான் சரிந்து சாய்ந்து விடாமல் நிற்பதை எரிந்துபோன வைக்கோற் படைப்புக்கு ஒப்பிடுகிறான் புலவன். எரிந்து முடிந்த வைக்கோற் புரியை எங்கேயாவது எப்போதாவது அந்தப் புலவன் பார்த்திருக்க வேண்டும். அது நெருப்புக்கு இரையாகிக் கரிந்து வலுவிழந்த பின்னும் சரியாமல் உருவிழக்காது நிற்கும் காட்சி அவன் சிந்தனையைத் தூண்டியிருக்க வேண்டும். நினைவுகளும் நம்பிக்கையும் அழிந்து, எரிந்து, மனமும், உடம்பும், வெறுங் கூடாகி என்ன பலத்தினால் நிற்கிறோமென்று தெரியாத ஏதோ ஒரு பலத்தினால் நிற்கும் அப்பாவி மனிதனுக்கு இந்த வைக்கோற் புரியின் எரிந்த நிலையை உவமை சொல்ல வேண்டும் என்று அப்போது அந்தத் தமிழ்ப் புலவன் நினைத்திருப்பான். ஆனால் தன் வாழ்விலேயே அப்படி ஒரு நிலை வருமென்று அவன் எதிர்பார்த்திருக்க முடியாது.

உலகத்து வாழ்க்கையில் நினைத்தவர்க்கு நினைத்தபடியா எல்லாம் வருகிறது? சுகத்துக்கு ஆசைப்பட்டால் துக்கம் வருகிறது. வேண்டாம் என்கிறவனுக்கு எல்லாம் கிடைக்கிறது. வேண்டுமென்று தவிப்பவனுக்கு ஒன்றுமே கிடைப்பதில்லை. கொஞ்சம் சிந்திக்க ஆரம்பித்தால் உலகத்துக்கு உள்ளே இருக்கிற வேடிக்கைகளை யெல்லாம்விட உலகமே ஒரு பெரிய வேடிக்கை.

'எரிந்த வைக்கோற்புரி' உவமையை எதற்காவது கூறலாமென்று நினைத்து வைத்திருந்த புலவன் அதைத் தன் வாழ்வுக்கே கூறிக் கொள்ள வேண்டிய நிலை ஏற்பட்டது. அந்த ஆண்டின் கோடையில் அந்தப் புலவனுடைய ஊரில் கொடுமையாகத் தோன்றிப் பரவிய அம்மை நோயாலும், அதைப் போன்ற வேறு சில கொள்ளை நோய்களாலும் அந்தப் புலவனுடைய தாயார், தந்தை இருவரும் அடுத்தடுத்து இறந்து போனார்கள். ஊரில் உள்ள அவனுடைய உறவினர்களிலும் பலர் இறந்து போனார்கள். மனிதர்களை மரணம் கொள்ளை அடித்தது. மனிதர்களைக் கொள்ளையடிப்பது போல் வாரிக் கொண்டு போவதனால்தான் அம்மைக்குக் கொள்ளை நோய் என்று பெயர் ஏற்பட்டது போலும்!

ஊரில் கோவிலிலுள்ள சிலைகளைத் தவிர மனிதர்கள் யாரையும் விட்டு வைக்கவில்லை அந்த நோய். நல்வினை வசமாகப் புலவன் நோயிலிருந்து பிழைத்து விட்டான். ஆனால் பிழைத்து என்ன பயன்? தந்தை, தாய், சுற்றத்தார், எல்லோரும் மாண்டபின் ஊர் ஊராகவா இருக்கும்? சுடுகாடாகத் தோன்றியது. பொலிவிழந்துபோன ஊரில் தெருவுக்கு நேரே பொலிவிழக்காமல் இருந்த சிவன் கோவிலைப் பார்த்தான் புலவன். சுடலைக்குப் போய் ஆடி மகிழும் கடவுள், அங்கே போவதற்குச் சோம்பல் கொண்டு தான் இருக்குமிடத்தையே சுடலையாக்கிக் கொள்ள முயன்றது போலிருந்தது ஊர். எங்கும் அழிவு. எங்கும் அவலம். கோவிலிலிருக்கும் சிவபெருமானின் கண் பட்டுப் பட்டு ஊர் அப்படியாகிவிட்டதோ என்று கடவுள்மேலேயே வெறுப்பு வந்தது புலவனுக்கு. அந்த ஊர்ச் சிவபெருமானுக்கு ஆபத் சகாயன் என்று பெயர். ஆனால் அவன் இருவருள் ஆபத்துக்குச் சகாயம் செய்யவில்லை. முன்பு கடல் நஞ்சைக் குடித்த சிவபெருமான் அவற்றை இப்போது நாட்டில் உமிழத் தொடங்கிவிட்டானோ என்று சினம் கொண்ட புலவன் வஞ்சப் புகழ்ச்சியாக ஒரு பாட்டுப் பாடினான்.

> 'தந்தைபோய்த் தாய்போய்த் தமர்போய்
>                     என் சுற்றமும்போய்
> வெந்த புரியாகி விட்டேனே — முந்தவே
> ஆழாழி நஞ்சுண்ட ஆபத் சகாயனெனும்
> பாழாவான் கண்ணுற்று பட்டு.'

துன்பம் எரித்து அழித்த பின்பும் தோற்றமழியாது நிற்கும் நிலைக்கு எரிந்த வைக்கோற் படைப்பை உவமை கூறிய அழகுக்கு ஈடு ஏது? எத்தனை பொருத்தமான உவமை? —வளவன்

## அத்தியாயம் முப்பத்தைந்து

வியப்பு, பயம், மகிழ்ச்சி ஆகிய மூவகை உணர்ச்சிகளும் தேங்கிக் கனத்துத் தொங்கிய கன்ன மலர் இதழ்களை மெல்லப் பிரித்து மேலுயர்த்தி ஒருவித நடுக்கத்துடன் அவனைப் பார்த்துக் கொண்டே கட்டிலின் விளிம்போடு நழுவிப் பின்னால் நகர்ந்தாள் கோமதி.

வறண்ட புன்னகை முகத்தில் படர, இமை தட்டாமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்த விவேகானந்தன் நெற்றியில் சரிந்திருந்த கேசத்தை ஒதுக்கித் தள்ளியவாறு அங்கிருந்து மெதுவாக நடந்து போய்ச் சிறிய புத்தக அலமாரியொன்றின்மேல் இரு கை முட்டிகளையும் ஊன்றித் தலைகுனிந்து கொண்டு, "ஏன்? எதற்காக அழ வேண்டும்?" என்று யாரையோ கேட்பதுபோல் கரகரத்த குரலில் கேட்டான்.

ஒடுங்கி முடங்கி நின்ற கோமதி அவசரமாகத் தன் முன்றானைத் தலைப்பை எடுத்துக் கண்களைத் துடைத்துக் கொண்டு பரபரப்புடன் அவனை நிமிர்ந்து பார்த்தாள்.

"ஆமாம்; அந்த அசட்டுச் சாரங்கன் ஏதேதோ சொல்லி உன்னை அழ வைத்து விட்டுப் போய் விட்டான். அவன் சொன்னதை யெல்லாம் நான் கேட்டுக் கொண்டுதான் இருந்தேன். என் காதில் விழவேண்டு மென்பதற்காகவே அப்படிப் பேசினான் போலும்! பரவாயில்லை. ஆனால், அவனோ நீயோ நினைத்திருப்பது போல் இனி எதுவும் நடக்காது. அதைச் சொல்லிவிட்டுப்போகத்தான் இப்போது இங்கு வந்தேன்" என்றான் விவேகானந்தன் அமைதியாக.

கோமதியின் உள்ளம் உறைந்தது. அவளுக்கு ஒன்றுமே புரியவில்லை. மொழியறியாக் குழவியைப் போல் அவனை மலங்க மலங்கப் பார்த்து விழித்தாள்.

அலமாரியில் வரிசைக் கிரமமாக அடுக்கி வைக்கப் பெற்றிருந்த புத்தகங்களை ஒவ்வொன்றாக உருவி எடுத்து அங்குமிங்குமாக இடம் மாற்றிச் செருகிக் கொண்டு நின்ற விவேகானந்தன் சட்டென்று திரும்பிக் கோமதியை நேருக்கு நேர் பார்த்து, "என்ன, பேசாமல் நிற்கிறாய்? நான் சொல்வது உனக்குப் புரியவில்லை?" என்று கேட்டான்.

கோமதியின் உடல் 'குப்'பென்று வியர்த்துக் கொட்டியது. பூச்செண்டின் கனம் தாங்கிய நாணற் தண்டு வீசு தென்றலில் வளைந்து ஆடுவதைப் போல் நடுக்கமுற்றுத் தலைகவிழ்ந்தாள் அவள்.

சில விநாடிகள் வரை அவளையே உற்று நோக்கிக்கொண்டிருந்த விவேகானந்தன் விரைந்து வந்து கோமதியின் இரு கரங்களையும் வெடுக்கெனப் பற்றி இழுத்து அவள் மோவாயைத் தன் முகத்துக்கு நேரே நிமிர்த்தி, "இங்கே பார்! உன்னை மணந்துகொள்ளப் போகிறேன். உன்னை நான் மணந்து கொள்ளத்தான் போகிறேன். தெரிந்ததா?" என்றான் அடித் தொண்டையில்.

அடுத்த கணம், சாட்டையிலிருந்து விடுபட்ட பம்பரம்போல் அவன் பிடியிலிருந்து திமிறிக் கழன்ற கோமதி 'கிர்'ரென்று ஒரு சுற்றுச் சுற்றி அவனது மார்பில் போய் மாதவிக் கொடியெனப் படர்ந்து சாய்ந்தாள்.

ஆனால், விவேகானந்தனோ எவ்வித உணர்ச்சியுமற்ற மரக்கட்டை போல் நின்று கொண்டிருந்தான். மணம் கமழும் மலர்க்கொடியாகத் தன்மேல் தவழ்ந்து சரிந்த அவளை அவன் அணைக்கவுமில்லை; விலக்கவுமில்லை.

கோமதியின் மெல்லிய விம்மல் ஒலி; விவேகானந்தனின் மார்பு கண்ணீரால் நனைந்தது! அதன் குளிர்ச்சியைத் தாள மாட்டாமல்தானோ என்னவோ, அவன் தன் உடம்பை ஒரு சிலிர்ப்புச் சிலிர்த்து நிமிர்ந்து, பட்டுக் கயிறாகக் கீழே நழுவிய அவளைச் சட்டென்று இறுகப் பற்றி மேலே தூக்கி நிறுத்திவிட்டு ஓரடி பின்னால் நகர்ந்து நின்று கொண்டான்.

சரப் பசையேறித் தளதளத்த அதரங்களைக் குவித்து, கருவண்டு போன்ற தன் கண்ணின் இமைகளை நீவிக் கவிதை மணம் கமழும் புன்முறுவலோடு அவனை ஏறிட்டுப் பார்த்தாள் கோமதி.

விவேகானந்தனின் நெற்றி நரம்புகள் விண்ணென்று புடைத்தெழுந்தன.

# சொர்க்கத்தின் நிழல்

### ஜெகசிற்பியன்

அவளை வெறுப்புடன் பார்த்து ஓர் அலட்சியச் சிரிப்பு சிரித்த அவன், "ஹூம்!...நீ இன்னொரு விஷயத்தையும் தெரிந்து கொள்ள வேண்டும்: காதல்



ஈதல் என்றெல்லாம் கனைத்துக்கொண்டு உன்னை நான் கல்யாணம் செய்துகொள்ள முன்வந்திருப்பதாக எண்ணிக் கொள்ளாதே! உன்னை என் மனைவியாக ஏற்க மட்டுமே முடிவு செய்திருக்கிறேன் 'அவ்வளவுதான்!'' என்று கடுகடுத்த குரலில் கூறிக்கொண்டே அந்த அறையிலிருந்து 'விர்' ரென வெளியேறினான்.

சஞ்சீவிக் காற்றில் குளிப்பாட்டப் பெற்றவள் போல் பூரித்து நின்றிருந்த கோமதி இதைக் கேட்டுத் தணல் சூழ்ந்த தாமரைக் கொடியெனத் துவண்டு சுவரில் அப்படியே சாய்ந்தாள்.

''வணக்கம் சார்!''

மருத்துவ விடுதியிலிருந்து தம் வீடு நோக்கி வந்து கொண்டிருந்த டாக்டர் ராமநாதன் மெள்ளத் தலைநிமிர்ந்து பார்த்தார். ஸ்கூட்டரை விட்டு இறங்கிய இளைய டாக்டர் கோவிந்தராஜன் தயக்கத்தோடு அவர் அருகில் வந்து நின்றார்.

''வாருங்கள் மிஸ்டர் கோவிந்தராஜன்! எங்கே போய்விட்டு வருகிறீர்கள்?'' என்று கேட்டுக் கொண்டே தோட்டத்துப் புல்

தரையில் போடப்பெற்றிருந்த ஒரு பிரம்பு நாற்காலியில் அமர்ந்தார் டாக்டர் ராமநாதன்.

"தேர்தல் கமிஷனர் காரியாலயத்துக்குப் போய் வருகிறேன், சார்!" என்று புன்னகையுடன் சொன்ன கோவிந்தராஜன் ஓர் இருக்கையில் பணிவுடன் உட்கார்ந்தார்.

"ஓ....இன்று வோட்டுகள் எண்ணப்பட்டு முடிவை அறிவிக்கும் தினமல்லவா?" என்று அவசரமாகச் சொல்லிக் கொண்டே நாற்காலியின் விளிம்புக்கு நகர்ந்து வந்த ராமநாதன் சட்டென்று அந்த ஆவல் உணர்ச்சியை அடக்கிக் கொண்டவராய்ச் சாவதானமாகப் பின்னால் சாய்ந்து, "ம்...நான் அதை மறந்தே விட்டேன்" என்று இழுத்தார்.

கோவிந்தராஜன் இதற்குப் பதிலேதும் சொல்லாமல் மௌனமாயிருந்தார்.

மந்தாரத் திரை போர்த்த நீலவானத்தை அண்ணாந்து பார்த்தபடி தம் வழுக்கைத் தலையைத் தடவிக் கொண்டிருந்த ராமநாதன் அதற்கு மேலும் ஆவலை அடக்க மாட்டாதவராய் உள்ளடங்கிய குரலில், "முடிவு வெளியாகி விட்டதல்லவா? தோல்வியடைந்த துரதிர்ஷ்டசாலி யார்?" என்று கேட்டார்.

குனிந்த தலைநிமிராத கோவிந்தராஜன், "ஐந்நூற்றுச் சொச்சம் வோட்டுகள் வித்தியாசத்தில் ஸ்ரீமான் நீலமேகம் வெற்றியடைந்திருக்கிறார் சார்!" என்று கூறினார்.

ஒரு விநாடி நேரம் ஆழ்ந்த நிசப்தம் நிலவியது. சட்டென்று நிமிர்ந்த ராமநாதன் வலக்கையை உயர்த்தி, "வாழ்க, நீலமேகம்!" என்று உரக்கச் சொல்லிக் கடகடவென நகைத்தார். என்றுமே அவர் இப்படி வாய்விட்டுச் சிரித்தது கிடையாது.

அடக்கமே உருவானவரான கோவிந்தராஜனுக்கு டாக்டரின் இந்த அவுட்டுச் சிரிப்பைக் கேட்டு ஆத்திரம் வந்து விட்டது. ஆயினும் அதை மிக்க சிரமத்துடன் அடக்கிக்கொண்டு, "வருத்தப்படவேண்டிய விஷயம் சார் இது! எல்லாரும் விவேகானந்தனே வெற்றி பெறுவார் என்று எதிர்பார்த்தார்கள். அவர்களுக்கெல்லாம் இந்த முடிவு ஒரு பெரும் அதிர்ச்சியைக் கொடுத்து விட்டது" என்றார் கரகரத்த குரலில்.

ராமநாதனின் சிரிப்பு இன்னும் ஓயவில்லை. அவர் விடாமல் சிரித்துக் கொண்டே, "இம்மாதிரி அதிர்ச்சிகளில் எப்போதுமே எவ்வித அர்த்தமும் இருப்பதில்லை!" என்றார். மீண்டும் அவர் தொடர்ந்து, "ஆமாம், மிஸ்டர் கோவிந்தராஜன்! திருவாளர் நீலமேகம் வெற்றி பெற்றதைக் கேட்டு நான் மகிழ்ச்சியடைவதற்குரிய காரணம் என்னவென்று நீங்கள் கேட்கவில்லையே? அதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. இந்தத் தேர்தலில் நீலமேகம் வெற்றியடைந்து விட்டதால் இனி அவர் நமது வைத்தியத்திறமைக்கு ஒரு சோதனையாக நம் மருத்துவ விடுதியை நாடி வரமாட்டார் என்பது ஒன்று; என் அருமை மைத்துனன் இந்தத் தேர்தலின் மூலம் விலைமதிப்பற்ற சில பெரிய உண்மைகளை அறிந்து கொள்வான் என்பது மற்றொன்று. எனவே, நீங்களும் என் மகிழ்ச்சியில் கலந்து கொண்டு சிரியுங்கள்!" என்றார்.

டாக்டரின் நகைச்சுவைப் பேச்சை ரசிக்க முடியாத மன நிலையிலிருந்த கோவிந்தராஜன் வருந்தும் குரலில் சொன்னார்: "இந்தத் தேர்தல் முடிவைப் பற்றி இன்னொரு முக்கிய விஷயமும் ஜனங்களிடையே அடிபடுகிறது சார்! அதாவது, தேர்தல் நெருங்கிய சமயம் விவேகானந்தன் போதிய பிரசாரம் செய்யாமல் ஒதுங்கிக்கொண்டு விட்டாராம். கடந்த ஏழெட்டு நாட்களாக எந்தப் பொதுக் கூட்டங்களிலும் கலந்து கொள்ளவில்லையாம். கடைசித் தினத்திலாவது ஒரு கூட்டம் போட்டுப் பேசியிருந்தால் இந்த ஐந்நூற்றுச் சொச்சம் வோட்டுகளைச் சுலபமாகப் பெற்று அவர் வெற்றியடைந்திருக்கலாமாம்."

"ஓகோ! அப்படியானால் இதைக் கொண்டு எனக்கு ஒரு விஷயம் புலனாகிறது..." என்று கூறிக் கலகலவென்று நகைத்த ராமநாதன் தொடர்ந்து சொன்னார்: "பேச்சுத் திறமை வாய்ந்த ஒரு சில தனி நபர்கள் மக்களின் வாக்குப் பலத்தைப் பிரசங்கங்களால் பெற்று, அந்தப் பிரசங்கங்களாலேயே நாட்டை ஆளுவதான ஒரு செப்படி வித்தைக்குத்தான் ஜனநாயகம் என்று பெயர்-இல்லையா, மிஸ்டர் கோவிந்தராஜன்?"

இட்லி சாம்பாருக்கு எந்த அளவு முக்கியத்துவம் தர முடியுமோ, அந்த அளவே அரசியலுக்கு இடம் ஒதுக்கி வைக்கும் இயல்புள்ளவரான கோவிந்தராஜன் அசடு வழியச் சிரித்து விட்டு மௌனமானார்.

சிறிதுநேரம் ஏதோ யோசனையிலிருந்த ராமநாதன் நெற்றிச் சருமத்தைச் சுருக்கிக்கொண்டு, "ஆமாம்; இந்த விஷயம் விவேகானந்தனுக்குத் தெரியுமோ?" என்று கேட்டார்.

"சற்றுமுன்தான் அவரை வழியில் பார்த்தேன் சார்! விஷயத்தைச் சொன்னேன்; அவர் எவ்வித வருத்தமுமின்றி, 'இது எனக்கு ஏற்கெனவே தெரிந்த

முடிவு' எனச் சொல்லிவிட்டுப் போய் விட்டார்!'' என்றார் கோவிந்தராஜன்.

''தோல்வி என்பது ஒரு பெரிய விஷயம். அது மனிதனின் சிந்தனைகளையும் செயல்களையும் புதுப்பித்துக் கொள்ள உதவுகிறது'' என்று சொல்லிக் கொண்டே நீண்டதொரு நெடுமூச்சு விட்ட டாக்டர் ராமநாதன் நாற்காலியில் சாய்ந்து மெல்லக் கண்களை மூடினார். இளைய டாக்டர் கோவிந்தராஜன் அங்கிருந்து எழுந்து மருத்துவ விடுதியை நோக்கி நடந்தார்.

''என்ன இது, காப்பி டிபனைக்கூட மறந்து போய் இங்கே வந்து உட்கார்ந்து கொண்டிருக்கிறீர்கள்?''

சாவதானமாகக் கண்திறந்து நிமிர்ந்த டாக்டர் தம் எதிரே சுந்தரியம்மாள் நிற்பதைக் கண்டு உள்ளூற ஒருவிதக் குழப்பம் அடைந்தவராய் மீண்டும் கண்களை மூடினார்.

''ஏன், ஒருமாதிரியாக இருக்கிறீர்கள்? உடம்பு சரியில்லையா?'' என்று கேட்டுக்கொண்டே அவர் முகத்தைப் பார்த்தாள் சுந்தரியம்மாள்.

''அதெல்லாம் ஒன்றுமில்லை. நம் கோவிந்தராஜன் வந்தார். அவருடன் பேசிக் கொண்டே இங்கு வந்து உட்கார்ந்து விட்டேன்'' என்றார் டாக்டர் ராமநாதன்.

''சரி; எழுந்து வாருங்கள்'' என்றார் சுந்தரியம்மாள் புன்னகையுடன்.

''போகலாம். அவசரமில்லை'' என்று அழுத்துக்கூறிய டாக்டர் தம் மனைவியை இலேசாகக் கவனித்தார். அவள் மிகவும் மகிழ்ச்சியோடு இருப்பதாக அவருக்குத் தோன்றியது. ஆனால், அதன் காரணம் புரியவில்லை. ஒருகால், கோமதி உடல் நலம் பெற்று எழுந்து நடமாடிக்கொண்டிருப்பது அவளுக்கு மன நிம்மதியை அளித்திருக்கலாம். அப்படியானால், விவேகானந்தன் தேர்தலில் தோற்ற விஷயம் அவளுக்குத் தெரியாதோ? அது தெரிந்திருந்தால் கண்ணைக் கசக்கிக் கொண்டு வந்து நிற்பாளே! பரீட்சை எழுதிக் கோட்டடிக்கும் பிள்ளைகளைவிட அவர்களின் தாய்மார்கள்தாமே அதிகம் கவலைப்பட்டுக் கண்ணீர் வடிக்கிறார்கள்? இந்த நிலையில் இவளிடம் அவ்விஷயத்தை எப்படிச் சொல்வது? பல நாட்களுக்குப் பின் முகத்தில் புன்னகை படர வந்திருப்பவளை மறுபடியும் துக்கத்தில் ஆழ்த்த வேண்டுமா?



விவேகானந்தன் தேர்தலில் தோற்றதைப் பற்றி இவ்வளவு நேரம் எவ்விதக் கவலையும் கொள்ளாமலிருந்த ராமநாதன் இப்போது அதற்காகப் பெரிதும் சஞ்சலமடைய ஆரம்பித்து விட்டார்.

''எதைப் பற்றி இப்படி ஆழ்ந்த சிந்தனை?'' என்று மெல்லச் சிரித்துக் கொண்டு கேட்டாள் சுந்தரியம்மாள்.

''ஒன்றுமில்லை! உனக்கு ஒரு விஷயம் தெரியுமா?'' என்று கேட்டுக் கொண்டே நிமிர்ந்து உட்கார்ந்தார் ராமநாதன்.

சுந்தரியம்மாளின் கண்கள் வியப்பால் அகல விரிந்தன. 'ஓ! எனக்கு முன் உங்களுக்கு அந்த விஷயம் தெரிந்து விட்டதா? நானும் அதைச் சொல்லத்தானே இப்போது இங்கே வந்திருக்கிறேன்!'' என்றாள் கலகலவெனச் சிரித்துக்கொண்டே.

டாக்டர் தம் மனைவியை ஆச்சரியத்துடன் ஏறிட்டுப் பார்த்தார். 'பரவாயில்லையே, தோல்வியைக் கண்டு சிரிக்க இவளும் கற்றுக் கொண்டுவிட்டாளே' என்று உள்ளூற எண்ணி மகிழ்ந்த அவர், ''ஆமாம், சுந்தரி! சற்று முன்தான் கோவிந்தராஜன் வந்து அந்த விஷயத்தைச் சொல்லிவிட்டுப் போனார்'' என்றார் அமைதியாக.

''சரிதான். அவரிடமும் அவன் அதைச் சொல்லி விட்டானாக்கும்! இதிலெல்லாம் எவ்வளவு அவசரம் பாருங்கள்!'' என்று கூறி முகம் சிவக்க நகைத்தாள் சுந்தரியம்மாள்.

டாக்டர் உதட்டைக் கடித்துக் கொண்டு அவளை உற்றுப் பார்த்தார். பிறகு தணிந்த குரலில், ''நீ எதைப் பற்றிச் சொல்கிறாய்?'' என்று கேட்டார்.

''உங்களுக்கு எப்போதும் கேலிப் பேச்சுத்தான்!'' என்று முகத்தைக் கோணிய சுந்தரியம்மாள், ''அது சரி; நீங்கள் சொல்ல வந்த விஷயம் என்ன?'' என்று திருப்பிக் கேட்டாள்.

ஒரு விநாடி மௌனம் சாதித்த ராமநாதன் வறண்ட புன்முறுவல் பூத்தவராய், ''அதுவா? உன் அருமைத் தம்பி

விவேகானந்தன் பதினையாயிரம் ரூபாய் செலவு செய்து 'தேர்தலில் தோற்றவன்' என்ற ஒரு புதிய பெயரைச் சம்பாதித்திருக்கிறானே. அது உனக்குத் தெரியுமா என்றேன்!'' என்றார்.

இதைக் கேட்டு அதிர்ச்சியுற்ற சுந்தரியம்மாள் சற்று நேரம் தலை குனிந்திருந்து விட்டுப் பிறகு கம்மிய குரலில், ''இந்த முடிவுதான் ஏழெட்டு நாட்களுக்கு முன்பே நமக்குத் தெரிந்து விட்டதே! இதோடு அவனைப் பிடித்த பீடை தொலையட்டும்!'' என்றாள்.

''அப்படியானால் நீ சொல்ல வந்த விஷயம் என்ன?'' என்று அவளை உற்சாகப்படுத்தக் கடகடவெனச் சிரித்துக் கேட்டார் ராமநாதன்.

சுந்தரியம்மாளின் முகத்தில் மீண்டும் மகிழ்ச்சி நிறைந்தது. அவள் தன் கணவரின் அருகில் நெருங்கிக் குதூகலம் பொங்கும் குரலில், ''அதாவது......நம் விவேகானந்தன் அந்தப் பெண் கோமதியை மணந்து கொள்ள விரும்புவதாக என்னிடம் சொல்லி, உங்கள் சம்மதத்தைக் கேட்கச் சொன்னான்!'' என்றாள்.

ராமநாதன் இதைக் கேட்டு மனம் திறந்து சிரித்தார். ''அசடு! இதையா ஒரு பெரிய விஷயமாக என்னிடம் சொல்ல வந்து விட்டாய்? எனக்குத் தான் இது அன்றே - சிவப்பிரகாசத்தின் வீட்டிலிருக்கும்போதே - தெரிந்து போயிற்றே!'' என்று கூறி மீண்டும் நகைத்தார். பிறகு சட்டென்று சிரிப்பதை நிறுத்தி, ''ஆமாம்; இந்த விஷயத்தை நீ அவன் வாய்ப்படச் சொல்லித் தானே கேட்டாய்? முன்போல் எதையாவது கற்பனை பண்ணிக் கொண்டு வந்து உளறாதே! அந்த அநுபவமே நம் ஈரேழு ஜன்மத்துக்கும் போதும்!'' என்று கடுகடுத்தார்.

சுந்தரியம்மாளுக்குச் சிரிப்பு வந்து விட்டது. ''அப்படியெல்லாம் இல்லை. இது அவனே என்னிடம் வந்து சொன்னது!'' என்று பெருமையுடன் கண்களைச் சிமிட்டினாள்.

சற்று நேரம் ஏதோ சிந்தனையிலிருந்த ராமநாதன், ''உனக்கு இதில் ஆட்சேபணை இல்லையே?'' என்று வினவினார்.

''சம்மதமா என்று கேட்கப்படாதா?'' என்றாள் சுந்தரியம்மாள் குறும்பாக. மீண்டும் அவள் தொடர்ந்து, ''உங்களுக்குச் சம்மதமானால் எனக்கும் பூரண சம்மதமே!'' என்றாள்.

''சம்மதம் தெரிவித்து மணவறையில் உட்காரப் போவது நாமா?'' என்று கேலி செய்த ராமநாதன், ''சரி; நம் நீண்டநாள் கனவை அடுத்த வாரமே 'ஜாம் ஜாம்' என்று நடத்தி முடித்து விடுவோம்!'' என்றார். உடனே அவர் எதையோ கண்டு திடுக்கிட்டவர்போல் எழுந்து நின்றார்.

புல்தரை வட்டத்தின் ஓரம் வந்து நின்ற ஒரு காரிலிருந்து நோயாளிபோல் தட்டுத்தடுமாறி இறங்கிய சிவப்பிரகாசம், தமது மேல் துண்டால் கண்களைத் துடைத்தவாறு டாக்டரை நோக்கித் தள்ளாடித் தள்ளாடி வந்து கொண்டிருந்தார்.

## அத்தியாயம் முப்பத்தாறு

''இவ்வளவுதானே? இதற்கா இப்படி அரண்டு மிரண்டு விட்டீர்கள்? நீங்கள் வந்ததைப் பார்த்து நான் என்னமோ ஏதோ என்றல்லவா பயந்து போய்விட்டேன்!'' என்றார் ராமநாதன் மெல்லச் சிரித்து.

முகம் வெளிறிய நிலையில் உட்கார்ந்திருந்த சிவப்பிரகாசம் வேகமாகத் தலையசைத்து, ''இல்லை, ராமு! நான் சொன்னதை நீங்கள் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை. அல்லது உங்களுக்குப் புரியும்படியாக நான் சொல்லவில்லையோ என்னவோ!'' என்று படபடத்தார்.

''சரி; இப்போதுதான் சொல்லுங்களேன்.. நடந்தவை என்ன?'' என்று கேட்டார் ராமநாதன் நிதானமாக.

ஒரு விரக்திப் பெருமூச்சு விட்ட சிவப்பிரகாசம் கம்மிய குரலில் கூறினார்: ''கேளுங்கள், ராமு! கடந்த ஒரு மாதமாக என் வீடே களையிழந்துவிட்டது. அதற்குக் காரணம், நமது தம்பி விவேகானந்தன் ஒரு நாள் வந்து என்னை மிகவும் வற்புறுத்தியதன் பேரில் தேவகியின் சம்மதத்தைப் பெற அவளிடம் சற்றுக் கடுமையாகவே முயன்றேன். அதற்கு முன்பெல்லாம் கல்யாணப் பேச்சை எடுத்தால் இதமாக மறுத்து வந்த அவள் அன்று மிகவும் முரட்டுத்தனமாகப் பேசி என்னை மனம் நோக வைத்து விட்டாள். அதனால் தந்தையும் மகளும் இரண்டு மூன்று நாட்கள்வரையில் பேசாமல்கூட இருந்தோம்...''

உடனே சுந்தரியம்மாள் குறுக்கிட்டு, ''அவன் பேச்சைக் கேட்டுக் கொண்டு நீங்கள் ஏனண்ணா அந்தச் சிறு பெண்ணின் மனத்தை நோக வைத்தீர்கள்? அவளுக்குத்தான் அவனைக் கட்டோடு பிடிக்கவில்லையே!'' என்றாள்.

ராமநாதன் தம் மனைவியைக் கோபமாக ஏறிட்டுப் பார்த்து, "ஆமாம், ஆமாம்! இப்போது நீ இப்படித்தான் பேசுவாய். ஏனென்றால், உன் தம்பியின் காரியம் ஒழுங்குபட்டு வந்துவிட்டதல்லவா?" என்று சிடுசிடுத்தார். சுந்தரியம்மாள் முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டு மௌனமானாள்.

"சரி; நீங்கள் சொல்லுங்கள் சிவப்பிரகாசம்!" என்று அக்கறையுடன் ஊக்கினார் ராமநாதன்.

"எல்லாம் என் தலைவிதி!" என்று சலிப்புடன் முணுமுணுத்த சிவப்பிரகாசம் தொடர்ந்து சொன்னார்: "அன்று நீங்கள் அந்தக் கோமதி என்ற பெண்ணை என் வீட்டிலிருந்து எடுத்துச் சென்ற பின், தேவகியைச் சமாதானப்படுத்துவதற்காக அவள் அறைக்குச் சென்றேன். அப்போது அவள் விம்மி விம்மி அழுது கொண்டிருந்தாள். அதைக் கண்ட நான் திடுக்கிட்டேன். விவரம் விசாரித்தேன். நீண்ட நேரம்வரை ஒன்றுமே பேசாமல் மௌனமாயிருந்த அவள் ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவளாய், 'அப்பா, என் திருமணத்துக்கு நீங்கள் ஏற்பாடு செய்யலாம்' என்றாள். எனக்கு மகிழ்ச்சி எல்லை கடந்தது. உடனே உங்கள் வீட்டுக்குப் பறந்து வரக் கிளம்பினேன். ஆனால் அடுத்தகணமே அவள் ஒரு பெரிய குண்டைத் தூக்கிப் போட்டாள். அதாவது யாரோ ஒரு புல்லாங்குழல் வித்வானாம்; பெயர் மோகன சுந்தரமாம்; அவனை மணந்துகொள்ள விரும்புவதாகச் சொன்னாள்!..."

சுந்தரியம்மாளின் முகத்தில் ஈயாடவில்லை. ஆனால் டாக்டர் ராமநாதன் மந்தகாசப் புன்முறுவல் பூத்தவராய், "ம்...அதற்கு நீங்கள் என்ன சொன்னீர்கள்?" என்று கேட்டார்.

"நான் என்ன சொல்லமுடியும், ராமு? அப்போதைக்கு ஒன்றுமே சொல்லாமல் வெளியே போய்விட்டேன்."

"அப்புறம்?"

"மறுநாள் மாலை நான் கம்பெனியிலிருந்து வீட்டுக்கு வந்தேன். அப்போது தேவகி கூடத்து அறையில் உட்கார்ந்து மௌனமாகக் கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தாள். அவள் கண் கலங்கிக் காண எப்போதுமே என்னால் சகிக்க முடிவதில்லை. அவளது விருப்பத்துக்குச் சம்மதித்து விடலாமா என்று ஒரு கணம் சிந்தித்தேன். உடனே அவள் என்னிடம் ஓடிவந்து, 'அப்பா! நேற்று நான் தவறுதலாகச் சொல்லிவிட்டேன். எனக்குக் கல்யாணம் வேண்டாம், கல்யாணமே வேண்டாம்' என்று கண்டிப்பாகக் கூறி விட்டு மாடிக்குப் போய்விட்டாள்."

"இது என்ன கூத்து?" என்று அதிசயப்பட்டாள் சுந்தரியம்மாள்.

"இன்னும் கேள், தங்கச்சி! அடுத்த நாள் காலை நான் இதே குழப்பத்தில் கம்பெனிக்கும் போகாமல் வீட்டிலே உட்கார்ந்திருந்தேன். அப்போது எங்கோ வெளியே போய்விட்டு வேகமாக வந்த தேவகி, 'அப்பா, நான் அவரைத்தான் மணந்து கொள்ளப் போகிறேன்' என்றாள். என் மூளை குழம்பியது. அன்று மாலை மறுபடியும் அவள் வந்து, 'வேண்டாம் அப்பா, நான் கடைசிவரையில் கன்னியாகவே இருக்க முடிவு செய்து விட்டேன்' என்றாள். எனக்குப் பைத்தியமே பிடித்த மாதிரி ஆகிவிட்டது. மறுநாள் காலையில் அவள் ஓடிவந்து, 'அப்பா, எனக்கு அவரையே மணம் செய்து வைத்து விடுங்கள்' என்றாள்..."

"ஏன் நிறுத்தி விட்டீர்கள்? சொல்லுங்கள், நண்பரே!"

"என்னத்தைச் சொல்வது? எனக்கு எரிச்சல் பற்றிக்கொண்டு வந்துவிட்டது. 'உனக்குக் கல்யாணமே வேண்டாம். அப்படிச் செய்தாலும் நீ சொல்கிறவனைச் செய்து வைக்க எனக்குச் சிறிதும் விருப்பமில்லை' என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டேன்."

"அப்புறம் அவள் அதுபற்றி உங்களிடம் ஒன்றுமே கேட்கவில்லையா?"

"இல்லை, ராமு! ஆனால், அன்று முதல் அவளுடைய குணம், நடத்தை எல்லாம் பழையபடி ஆகிவிட்டன!"

"பழையபடி என்றால்....?"

"ஒன்றை மட்டும் சொல்கிறேன், கேளுங்கள்: அவளிடம் புல்லாங்குழல் இசைத்தட்டு ஒன்று இருக்கிறது. அதைத் தன் மேஜை எதிரில் சாய்த்து நிற்க வைத்து, அதற்குத் தினமும் தன் கையாலேயே தொடுத்த மலர்மாலை சூட்டுகிறாள். பிறகு அதன் எதிரே மணிக்கணக்கில் உட்கார்ந்து கண்ணீர் வடிக்கிறாள். அப்புறம் ஏதேதோ புதிய புதிய வார்த்தைகளில் கவிதை பாடுகிறாள். பக்கம் பக்கமாக அந்தப் பாட்டுக்களை எழுதிக் குவிக்கிறாள்!"

"தவறு செய்துவிட்டீர்கள் நண்பரே, நீங்கள் தவறு செய்துவிட்டீர்கள்!" என்று சொல்லிக்கொண்டே சட்டென்று நிமிர்ந்த டாக்டர் ராமநாதன் ஒருவித படபடப்போடு தொடர்ந்தார்: "நான் முன்பே உங்களிடம் சொல்லியிருக்கிறேன். உங்கள் பெண் ஒரு விசித்திரப் பிறவி. அவளைப் புரிந்து கொள்ள நம்மால் முடியாது ஏனென்றால், அவள் மனித சமுதாயத்தின் அங்கீகரிக்கப்படாத ஒரு சட்டப் பாதுகாவலாளி.

அவளை நம் வழிக்குத் திருப்புவதென்பது கடினம். அவள் செல்லும் வழியில் தான் நீங்கள் மட்டுமல்ல, இந்த உலகமே செல்லக் கடமைப்பட்டிருக்கிறது. அவள் தன் சொந்த வாழ்க்கையில் தவறுகள் செய்யலாம்; முட்டாள் தனமாகவும் நடந்து கொள்ளலாம். ஆனால் அவற்றையெல்லாம் கட்டுப்படுத்த நமக்கு உரிமை இல்லை. அவள் ஓர் அபூர்வப் பிறவி. அவள் மூலம் உலகம் பெற வேண்டிய பயன்களைப் பெறச் செய்வது ஒன்றே நம்முடைய கடமை. அவள் ஒரு விலைமதிப்பில்லாத மாணிக்கம். அவளை நீங்கள் வீணாக்கி விடாதீர்கள்.''

சிவப்பிரகாசத்தின் உடல் இலேசாக நடுக்கமுற்றது. ''என்னை என்னதான் செய்யச் சொல்கிறீர்கள் ராமு?'' என்று அழமாட்டாக் குறையாகக் கேட்டார்.

''உங்கள் மகள் தேவகிக்கு எந்தவித சித்தக் கேடுபாடும் இல்லை. அவள் விரும்புகிறபடி அந்தப் புல்லாங்குழல் கலைஞன் மோகன சுந்தரத்தையே அவளுக்குச் செய்து விடுங்கள். அதுவே நான் உங்களுக்குச் சொல்லும் மனப்பூர்வமான ஆலோசனை!''

தளர்வுற்ற நிலையில் 'சரி' என்று தலையசைத்த சிவப்பிரகாசம் அங்கிருந்து மெள்ள எழுந்து தம்முடைய காரை நோக்கி நடந்தார்.

மேஜைமேல் காலைத் தூக்கிப் போட்டு நாற்காலியில் நன்றாகச் சாய்ந்தவாறு குறட்டைவிட்டுத் தூங்கிக் கொண்டிருந்த சாரங்கனின் மடியில் எங்கிருந்தோ ஒரு புத்தகம் வந்து தொப்பென்று விழவே துடித்துப் புடைத்து எழுந்து சுற்றுமுற்றும் ஒரு தடவை திரும்பிப் பார்த்தான்.

''இது என்ன, நவயுக வாலிபர் சங்கமா? அல்லது கவலை இல்லாதவர்கள் தூங்கி வழிவதற்கெனக் கட்டிப்போட்டு வைத்திருக்கும் மடமா?'' என்று கேட்டுக் கொண்டே விறைப்பாக நடந்து உள்ளே வந்தாள் கமலி.

திருதிருவென அவளை விழித்துப் பார்த்த சாரங்கன், ''ஓ....நீதானா?'' என்று கேட்டபடி மூக்கை வேகமாக உறிஞ்சி இழுத்தான்.

''நான் மிகவும் களைத்து வந்திருக்கிறேன். சீக்கிரமாகப் போய் ஒரு கப் காப்பி வாங்கி வாருங்கள்!'' என்று அதிகார தொனியில் கட்டளை யிட்டுக் கொண்டே வந்து மேஜை யெதிரில் மிடுக்குடன் உட்கார்ந்தாள் கமலி.

சாரங்கன் அமைதியாக எழுந்துபோய் ஜன்னல் சுவரின் மேலிருந்த பிளாஸ்

கைத திறந்து ஒரு கண்ணாடித் தம்ளர் நிறையக் காப்பி ஊற்றிக்கொண்டு வந்து வைத்துவிட்டுத் தன் நாற்காலியில் ஒடுங்கி அமர்ந்தான்.

கமலிக்குச் சிரிப்பை அடக்க முடியவில்லை. "பரவாயில்லையே! பிரம்மச்சாரிகளிடம் இருக்க வேண்டிய சில முக்கிய உபகரணங்களெல்லாம் உங்களிடம் இருக்கின்றனவே!" என்று கூறிக் கலீரெனச் சிரித்த அவள் மீண்டும் தொடர்ந்து, "பாவம், இப்படியெல்லாம் பிளாஸ்கும், டிபன்காரியருமாக வாங்கி வைத்துக் கொண்டு வாழத் தெரியாததால் தானே என்னவோ என் அத்தான் விவேகானந்தன் கல்யாணம் செய்து கொள்வது என்ற முடிவுக்கு வந்து விட்டார்!" என்றாள்.

இதுவரை தூங்கிவழிந்த முகத்துடன் உற்சாகமின்றிக் காணப்பட்ட சாரங்கன் இதைக் கேட்டுச் சுறுசுறுப்படைந்தவனாய், "என்ன! என்ன சொன்னீர்கள் அம்மணி?" என்று அவசரமாகக் கேட்டான்.

"உங்களுக்கு அந்த விஷயம் தெரியாதா?" என்று கேட்டாள் கமலி.

"எந்த விஷயம்? நான் ஏதொன்றும் அறியேனே?"

"தெரியாதா? சரி; அதைத் தெரிந்து கொள்ள விரும்பினால் நீங்கள் எனக்கு இன்னொரு வேலை செய்தாக வேண்டும்."

"கட்டளையிடுங்கள், அம்மணி!"

"ரொம்பவும் புழுக்கமாயிருக்கிறது. அந்த மின்சார விசிறிப் பொத்தானைத் தட்டி விடுங்கள்!"

அமைதியாக எழுந்து போய் மின்சார விசிறியைச் சுழலவிட்டுத் திரும்பி வந்தான் சாரங்கன்.

"நன்றி சொல்ல வேண்டுமா? அதையெல்லாம் என்னிடம் எதிர்பார்க்காதீர்கள்!" என்று குலுங்கிச் சிரித்த கமலி சட்டென்று நிமிர்ந்து, "அது சரி! கடந்த நான்கைந்து நாட்களாக நீங்கள் ஏன் எங்கள் வீட்டுப் பக்கமே தலைகாட்டவில்லை?" என்று புருவங்களை நெரித்துக் கொண்டு கேட்டாள்.

"உங்கள் வீட்டுக்கு நான் புறப்பட்டு வரும்போதெல்லாம் பஸ் புறப்பட்டுப் போய்விடுகிறது! அதனால்தான் வர முடியவில்லை!" என்றான் சாரங்கன்.

கமலி அவனை முறைத்துப் பார்த்தாள். பிறகு உம்மென்று முகத்தை வைத்துக்கொண்டு, "எல்லாம் எனக்குத் தெரியும். என் அத்தான் விவேகானந்தன் உங்கள் தங்கை கோமதியை மணந்துகொள்ளச் சம்மதம் தெரிவித்து விட்டாரல்லவா? அப்புறம் உங்களுக்கென்ன கவலை? அதனால்தான் எங்கள் வீட்டுப் பக்கம் வருவதை நிறுத்தி விட்டீர்கள்!" என்றாள் விறைப்பாக.

சாரங்கன் சடாரென எம்பிக் குதித்து எழுந்தான். "கமலி, உண்மையாகவா? கோமதியை மணந்து கொள்ள விவேகானந்தன் ஒப்புக் கொண்டானா?" என்று மூச்சு முட்ட, வார்த்தைகள் குழறிக் குதிக்க வினவினான்.

"நிஜமாகவே உங்களுக்கு இந்த விஷயம் தெரியாதா?"

"எனக்குத் தெரியவே தெரியாது, கமலி! திடீரென்று எப்படி அவன் இம்மாதிரி ஒரு நல்ல காரியத்தைச் செய்யத் துணிந்தான்?"

"ரொம்ப அழகாய்த்தான் இருக்கிறது, உங்கள் கேள்வி!"

"எனக்கென்னமோ இதை நம்பவே...!"

"வாயை மூடுங்கள்! நான் என்ன பொய்யா சொல்கிறேன்?"

சாரங்கன் பெருமூச்சு விட்டுத் தலையைத் தாங்கிப் பிடித்த வண்ணம் தணிந்த குரலில் சொன்னான்: "ஹூம்! எனக்கு அவனைப் பற்றி நன்றாகத் தெரியும். அந்த அபலைப் பெண் கோமதியை மணக்க அவன் முடிவு செய்திருக்கிறான் என்றால் அதற்கு ஏதேனும் உட்பொருள் இருந்தே ஆகவேண்டும். தேவகியின்மீது கொண்ட காதல் கைகூடாமற் போன ஆத்திரத்தில் யாரையேனும் ஏதோ ஒரு வகையில் பழி வாங்க வேண்டுமென்பதற்காக அவன் இப்படி ஒரு நாடகம் நடத்த முன் வந்திருக்கலாம். அல்லது அவனுக்காகத் தன் எதிர்காலத்தையே பணயம் வைத்துவிட்ட அந்த ஏழைப் பெண்ணை நிராதரவாக வெளியே விட்டால் அவனுடைய அரசியல் ஆதரவாளர்களும் எதிர்ப்பாளர்களும் பழித்துப்பேசுவார்கள் என்று அஞ்சி அவர்கள் கண்ணில் மண்ணைத் தூவுவதற்காக இம்மாதிரியொரு முடிவு செய்திருக்கலாம். அல்லது தனக்காக எதையும் தியாகம் செய்யத் தயாராயிருக்கும் அந்த ஏழைப் பெண்ணைத் தனக்குச் சொந்தமாக்கி வைத்துக் கொண்டால் எப்போதும் அவள் தனக்கு ஒரு பாதுகாப்புக் கேடயமாக இருப்பாள் என்று எண்ணி அவன் இந்தத் தீர்மானத்துக்கு வந்திருக்கலாம். ஆகக் கூடி, தன் சுயநலத்துக்குப் பயன்படுத்தும் ஒரு கருவியாகத்தான் அவளை மணக்க முடிவு செய்திருப்பானே தவிர, அந்த உத்தமப் பெண்ணின் தூய காதலை உணர்ந்து அதை மனப்பூர்வமாக ஏற்றுக்கொண்டு அவளை மணக்கச் சம்மதித்திருக்கிறான் என்று என்னால் நம்பவே முடியாது!"

கமலி அவனை வியப்புடன் ஏறிட்டுப் பார்த்தாள். "எது எப்படி இருப்பினும்

---

இந்தக் கதையில் வரும் ஒரு காட்சியைத்தான் ஓவியர் வினு இவ்விதம் அட்டைச் சித்திரமாகத் தீட்டித் தந்திருக்கிறார்.

அவர் அவளை மணந்து கொள்ளப் போவது என்னமோ நிச்சயம்! அந்த வரைக்குமாவது நீங்கள் மகிழ்ச்சியடையலாமே!'' என்றாள்.

ஏதோ யோசனையில் 'ஆமாம்' என்று தலையசைத்தான் சாரங்கன்.

''அப்படியானால், இனி நம்முடைய விஷயத்தைப் பற்றிப் பேசலாமா?'' என்றாள் கமலி நாணக்குறும்புடன்.

சாரங்கனின் முகத்தில் ஒரு விசித்திரச் சிரிப்புத் தோன்றி மறைந்தது. ''ஓ!...பேசலாமே!...ஆனால், யார் முன்னால் பேசுவது என்றுதான் தெரியவில்லை!''

''ஏன்? நீங்கள்தான் பேசுங்களேன்!'' என்று உடம்பை நெளித்து ஓர் அழகிய புன்முறுவல் பூத்தாள் கமலி.

உடனே சுற்றுமுற்றும் பார்த்த சாரங்கன், மேஜை மேலிருந்து 'பேப்பர் வெயிட்' கண்ணாடிக் குண்டை எடுத்துத் தன் கால்சட்டை ஜேபியில் போட்டுக் கொண்டான். பிறகு கண்ணாடித்தம்ளர், சில கனத்த புத்தகங்கள் எல்லாவற்றையும் வாரிக் கொண்டுபோய் அலமாரியில் போட்டு மூடினான். அங்கிருந்து அறையின் வாசல்வரை போய் எந்த நிமிஷமும் வெளியே ஓடுவதற்குத் தயாராக நிற்பவன்போல் காலைப் பரப்பி நின்று கொண்டு முகத்தைச் சுளித்து வைத்தவாறு, ''கமலி...வந்து ... நான்...உன்னை ...லவ்...பண்றேன்!...லவ் பண்றேன்!'' என்று நடுங்கிக் குழறினான்.

கமலி திடீரென்று எழுந்து கைகொட்டிக் கலகலவெனச் சிரித்தாள். பிறகு சட்டெனச் சிரிப்பதை நிறுத்தி அவனை விழுங்கி விடுவதுபோல் முறைத்துப் பார்த்தாள். சாரங்கன் கையிரண்டையும் தலைக்குமேல் தூக்கிக் கும்பிட்டவாறு கிடுகிடுவென நடுங்கிக் கொண்டு, ''தெரியாமல் சொல்லி விட்டேன், அம்மணீ! தயவுசெய்து என்னை மன்னித்து விடுங்கள்!'' என்று ஒரேயடியாக உளறிக் கொட்டினான்.

கமலி மின்னலைப்போல் நெளிந்து ஓடிச் சாரங்கனின் கையை இறுகப் பற்றிக் கொண்டு, ''என்ன இதெல்லாம் கோமாளித்தனம்? ஏன் அந்தக் கண்ணாடிக் குண்டு, காப்பித் தம்ளர், புத்தகங்கள் எல்லாவற்றையும் அங்கிருந்து அப்புறப் படுத்தினீர்கள்?'' என்று அதட்டினாள்.

''நான் சொன்னதைக் கேட்டு உங்களுக்குக் கோபம் வந்தால், அந்தக் கண்ணாடிக் குண்டை எடுத்து வீசி என் மண்டையைப் பிளந்து விடுவீர்களோ என்று பயந்துதான் அவற்றை முன்னெச்சரிக்கையாக அங்கிருந்து அப்புறப் படுத்தினேன், அம்மணீ!'' என்றான் சாரங்கன் திக்கித் திணறி.

வெட்கத்தால் கமலியின் உடல் குன்றிக் குறுகியது. அவள் முகத்தைப் பொத்திக் கொண்டு, ''நானும்தான் உங்களை......'' என்று கிள்ளை மொழியில் கிளுகிளுத்தாள்.

மறுகணம், படீரென்ற ஒலி - சாரங்கன்தான் அப்படிச் சிரித்தான். சிரித்துக் கொண்டே, ''ப்பூ! இதை நீ சொல்லித்தான் நான் தெரிந்துகொள்ள வேண்டுமோ?'' என்று அலட்சியமாகக் கூறி, அவள் கன்னத்தில் மெல்லத் தட்டிவிட்டு, ஸ்டைலாக நடந்துபோய் நாற்காலியில் கம்பீரமாக அமர்ந்தான்

கமலியால் அவனைப் பார்க்கவே முடியவில்லை. அவ்வளவு வெட்கம் அவளுக்கு. சற்று நேரம் கழித்து ஒருவாறு தன்னைச் சமாளித்துக் கொண்டு, ''அப்படியானால் நம் விஷயத்தை இனி என் சித்தப்பாவிடமும் சித்தியிடமும் சொல்லிவிடலாமா?'' என்று கேட்டாள்.

சாரங்கன் அவளையே ஒருகணம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்து விட்டு, மேஜைமீது தன் விரல் நகத்தால் ஏதோ பரபரவெனக் கிறுக்கினான்.

''என்ன, பேசாமல் இருக்கிறீர்கள்? நான் சொன்னது காதில் விழவில்லையா?'' என்று கேட்டாள் கமலி.

சாரங்கன் மௌனமாக எழுந்து போய்க் கமலியின் இரு கரங்களையும் இறுகப் பற்றிக் கொண்டு அவளது நீல நிறக் கண்களையே கூர்ந்து நோக்கினான். பிறகு சட்டெனத் தன் பார்வையை மேலே உயர்த்தியவாறு, ''கமலி! உனது எல்லையற்ற அன்பை அடையும் பேறு பெற்ற நான் உண்மையிலேயே பாக்கியசாலி! நீ மனம் வைத்தால் நமது திருமணம் எவ்விதத் தடங்கலுமின்றி நடந்து முடியும் என்பதில் எனக்கு எள்ளத்தனை சந்தேகமும் இல்லை. ஆனால், இப்போது என் மனம் நமது திருமணத்தைப் பற்றி எண்ணிப் பார்க்க முடியாத ஏதோ ஒரு குழப்ப நிலையில் இருந்து கொண்டிருக்கிறது. உயிருக்குயிராக நேசிக்கும் என் அருமைத் தங்கை கோமதியின் திருமணம் நல்லபடியாக முடிந்த பின்தான் நம்முடைய கல்யாணத்தைப் பற்றி என்னால் சிந்திக்க முடியும். அதுவரையில் நீ பொறுமையோடு இருக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன். என்ன சொல்கிறாய்?'' என்றான் கம்மிய குரலில். ஏனோ அவன் கண்கள் கொஞ்சமாகக் கலங்கி நீரைக் கசிய விட்டன.

(அடுத்த இதழில் முடியும்)

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10. Managing Editor, T. Sadasivam.




# லைப்பாய் இருக்குமிடம்
# அதுவே ஆரோக்கியம் இருக்குமிடம்

எல்லாம் இன்ப மயம்-- லைப்பாய் தேய்த்துக்
குளிக்கும் நயம்! ஆஹாஹா ... கிளுகிளுக்கும்
ஆரோக்கிய சுகம்! அன்றாட அழுக்கிலிருந்து நாம்
தப்பமுடியாது: அழுக்கிலுள்ள கிருமிகளைக்
கழுவிக் களைவது லைப்பாய் -- குடும்ப
முழுமைக்கும் குன்றாத ஆரோக்கிய சுகம்!

L. 23-X29 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon